# குருகுல மக்கள் கதை

## (பஞ்சபாண்டவர் சரித்திரம்)

பதிப்பாசிரியர்கள்

**டாக்டர் அ.கா. பெருமாள்**
இணைப்பேராசிரியர்,
அறிஞர் அண்ணா கல்லூரி, ஆரல்வாய்மொழி.

**டாக்டர் எஸ்.ஸ்ரீகுமார்**
இணைப்பேராசிரியர்,
தெ.தி. இந்துக்கல்லூரி, நாகர்கோவில்



**ஸ்ரீ செண்பகா பதிப்பகம்**
பழைய எண் 24, கிருஷ்ணா தெரு,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி எண்கள்: 24331510
Email: shreeshenbaga@yahoo.com

**GURUKULA MAKKAL KATHAI**
**(PANCHA PAANDAVAR SARITHTHIRAM)**

**Dr. Aa.Ka. Perumal**
**Dr. S. Srikumar**



முதல் பதிப்பு : 2003

விலை : ரூ.80.00

மொத்தப் பக்கங்கள் : 208

ஒளி அச்சு மற்றும் முன் அட்டை வடிவமைப்பு : சு. அசோக்குமார்
Digital Designer
பாடி, சென்னை-600 050.
தொலைபேசி: 26545532

அச்சிட்டோர் Printed by : **CHENNAI ART PRINTERS**
Chennai - 21. Phone : 55692807

This Book is published with the Financial Assistance of Tirumala Thirupathi Devastanams under their Scheme Aid to Publish Religious Books

# முகவுரை

'குருகுல மக்கள் கதை' என்னும் இக்கதை பாண்டவர் வரலாறு, பஞ்ச பாண்டவர் சரித்திரம் என்றும் வழங்கப்படுகிறது. வில்லிசை என்னும் நாட்டார் நிகழ்கலையின் பாடுபொருளாக உள்ள இக்கதை ஒரு குறிப்பிட்ட கோவிலுக்கு உரியதாக மட்டுமே உள்ளது. வில்லிசை கலையில் நிகழ்த்தப்படும் மகாபாரதக் கதையினின்று இது வேறானது. பிற வில்லிசைக் கலைஞர்கள் வேறு இடங்களில் இக்கதையைப் பாடவும் இல்லை.

குருகுல மக்கள் கதை, ஏட்டு வடிவிலும், தாளிலும் உள்ளது. ஏட்டு வடிவுக்கதை கோவிலுக்கு உரிமையுடையதாக உள்ளது. தாளில் உள்ள கதையை தனிப்பட்டவர் வைத்திருக்கின்றனர்.

குருகுல மக்கள் கதை மகாபாரதத்தின் எல்லாப் பகுதிகளையும் அடக்கியது அல்ல. திருதராஷ்டிரன், பாண்டு ஆகியோரின் தோற்றத்தில் தொடங்கி பீமனைக் காந்தாரி அழிக்க முயன்று பீமன் தப்புவதுடன் கதை முடிகிறது. பாண்டவர்களின் வனவாசமும், பீமன் நாககன்னியை மணத்தலும், காந்தாரி பாண்டவர்களின் மீது வஞ்சம் வைத்துக் கொல்ல முயன்றதும் ஆகிய நிகழ்ச்சிகள் இதில் காட்டப்படுகின்றன.

இக்கதை பீமனுக்கு முக்கியத்துவம் கொடுப்பது. காந்தாரியை எதிர்த்தலைவியாகக் காட்டுவது. இவள் கொடூரமானவளாகவே இக்கதையில் சித்திரிக்கப்படுகிறாள். இக்கதையின் இறுதிப்பகுதி நாட்டார் தன்மையுடன் காட்டப்பட்டுள்ளது.

இக்கதை பேச்சு வழக்கில் பாண்டவர்கதை, பாரதக் கதை எனக் கூறப்படுகின்றதாயினும், 'குருகுல மக்கள் கதை' என்றே இந்நூலுக்குப் பெயரிடப்பட்டுள்ளது. கோவில் கருவறையின் மேற்சுவரில் குருகுல மக்கள் கோவில் என்று ஆரம்ப காலம் முதல் எழுதி இருப்பதாலும், கோவிலுடன் தொடர்புடைய வயதானவர்கள் இதை குருகுல மக்கள் கதை என்றே அழைப்பதாலும் இந்நூலுக்கு 'குருகுல மக்கள் கதை' எனத் தலைப்பு இடப்பட்டுள்ளது.

இக்கதை ஒரு குருகுல மக்கள் கோவிலில் உள்ளது. இதே கதையின் வேறு ஏடுகள் தனியாரிடமும் உள்ளன. இதை நோட்டிலும் பிரதி செய்து வைத்திருக்கின்றனர். இந்நூலின் பதிப்புக்கு பனை ஓலை வடிவிலான ஏட்டுப்பிரதிகளும், கையெழுத்து வடிவிலான நோட்டுப் பிரதிகளும் பயன் படுத்தப்பட்டன.

இக்கதையின் ஏடு 48 செ.மீ. நீளமும் 4 செ.மீ. அகலமும் உள்ள 112 ஓலைகளைக் கொண்டதாய் உள்ளது. ஓலையின் ஒரு பக்கத்தில் இரு பகுதிகளாகப் பகுக்கப்பட்டு எழுதப்பட்டுள்ளது. இதன் மொத்த வரிகள் 5480. இந்த ஏட்டின் காலம் குறித்த செய்திகள் இதில் இல்லை. ஆனால் இதைப் பிரதி செய்த ஆண்டு கொல்லம் 1106 என உள்ளது. எனவே இவ்வேடு 70 ஆண்டுகளுக்கு முற்பட்டது (1931) எனல் முடியும்.

இந்த ஏட்டுடன் கர்ணன்போர் என்ற ஏடும் கோவிலில் உள்ளது. இது முழுக்கவும் சிதிலமடைந்து உள்ளது. இதன் வேறு பிரதிகளும் கிடைக்கவில்லை. இந்த ஏடு கூறும் கதையை குறிப்பிட்ட சிலரே அறிந்து வைத்திருக்கின்றனர். இது கர்ணனுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் கதை. பாரதத்தில் கர்ணனின் வரலாறு வரும் பகுதிகளும், அவன் போர் செய்யும் நிகழ்ச்சிகளும் இதில் வருகின்றன. இக்கதை வில்லிசை நிகழ்ச்சியில் பாடப்படவில்லை.

குருகுல மக்கள் கோவில், கன்னியாகுமரி மாவட்டம், அகஸ்தீஸ்வரம் வட்டம், இராஜாக்கமங்கலம் பேரூராட்சியில் அடங்கிய புதூர் பஞ்சாயத்தின் கீழ் உள்ள தெற்கு புதூர் என்னும் கிராமத்தில் உள்ளது. இவ்வூர் நாகர்கோவிலிலிருந்து தெற்கு 14 கி.மீ. தொலைவில் உள்ளது. கன்னியாகுமரி-திருவனந்தபுர கடற்கரை சாலையில் புதூர் ஊரின் இடது புறம் 3 கி.மீ. தொலைவில் கடற்கரை வரை பரந்து கிடக்கும் தென்னந்தோப்புகளின் நடுவே இக்கோவில் உள்ளது. பட்டப்பகலில் இருள் மண்டிக் கிடக்கும் அமைதியான சூழ்நிலையும், கடல்காற்று வீசும் சுகமும் கொண்ட இப்பகுதிக்குச் செல்வதே தனி அனுபவம் தான்.

இக்கோவில், தெற்கு புதூரை அடுத்து இருக்கின்ற கண்ணாண்டி விளை என்னும் கிராமத்தில் இருந்தது என்பது

வாய்மொழி மரபு. கண்ணாண்டி விளையிலிருந்து ஏதோ காரணத்தால் மக்கள் தெற்கு புதூருக்குக் குடிபெயர்ந்தபோது கோவிலும் பெயர்ந்திருக்கிறது. கண்ணாண்டிவிளை என்ற ஊரும் அதைச் சுற்றிய பண்டாரத்தோப்பு, ஓட்டன் தட்டு, நச்சுப் பொய்கை ஆகிய இடங்களும் பாரதக் கதையுடன் தொடர்புபடுத்தியே பேசப்படும் மரபு உள்ளது.

கண்ணன், ஆண்டியாக வேடம் தாங்கி, தீர்த்த யாத்திரை சென்ற அர்ஜுனனுக்கு உதவியபோது தங்கியிருந்த இடம் கண்ணாண்டிவிளை என்றும், அவன் பண்டார உருவுடன் திரிந்த இடம் பண்டாரத்தோப்பு என்றும் ஆனதாம். கண்ணன் ஓட்டனாகவும், யமன் ஓட்டச்சியாகவும் உருமாறி திரிந்த செய்தியுடன் தொடர்புடையது ஓட்டன் தட்டு ஊர் ஆனதாம். பாண்டவரின் வனவாசத்தின் போது தருமர் தவிர்த்த பிறர் நீர் அருந்தி மாண்ட இடம் நச்சுப்பொய்கை என்றும் கூறும் மரபு உள்ளது. குருகுல மக்கள் கோவில் இருக்கும் ஊரை அடுத்த ஊரில் திருமாலுக்குக் கோவில் உள்ளது. இப்பகுதியில் உள்ள வைணவத் தாக்கச் செய்திகளைத் தனியே தொகுக்கலாம்.

குருகுல மக்கள் கோவில் குறிப்பிட்ட குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்கு உரியது. ஏறத்தாழ 20 குடும்பங்கள் உள்ள இவர்கள், வைஷ்ணவச் சார்படையவராய் உள்ளனர். சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பு வரை இக்குடும்பத்தினரில் பீமன், தருமன், பரிமளகந்தி, மச்ச கந்தி என்னும் பெயருடையவர்கள் இருந்திருக்கின்றனர். நில விற்பனை தொடர்பான ஆவணங்களில் இப்பெயர்கள் வருகின்றன.

இக்கோவிலின் கருவறை 4 அறைகளைக் கொண்டது. கருவறை அறையின் முன் 18 மீ, 12 மீ அளவிலான ஓடு வேய்ந்த திறந்தவெளி அரங்கு உள்ளது. தரை சிமெண்டால் ஆனது. கருவறையின் எதிரே வில்லிசை கலை நிகழ்வதற்கு உரிய சிறிய மேடையும், அதை அடுத்த காலசாமி சுடலைமாடன் போன்ற நாட்டார் தெய்வங்களின் பீடங்களும் உள்ளன.

இக்கோவில் குருகுல மக்களின் கோவிலாகக் கருதப்பட்டாலும், இக்கோவிலின் முக்கிய தெய்வமாக அனந்த சயனம் கொண்ட திருமாலே உள்ளார். கருவறையின் தெய்வங்கள்

எல்லாமே சுவர் ஓவியங்களாகவே உள்ளன. கருவறையின் நான்கு அறைகளும் கோவில் அரங்கின் தளத்திலிருந்து 45 செ.மீ. உயரத்தில் 20 மீ., 120 செ.மீ. என்ற அளவில் உள்ளது.

முக்கிய தெய்வமான கிருஷ்ணன் அல்லது திருமால் இருக்கும் அறை 400 செ.மீ. 120 செ.மீ. என்னும் அளவில் அமைந்தது. இதன் இடது பக்க அறை 150 செ.மீ. 120 செ.மீ. என்னும் அளவில் உள்ளது. முக்கிய தெய்வ அறையின் வலதுபுற அறை 5 மீ., 120 செ.மீ. என்ற அளவிலும், இதை அடுத்த அறை 2 மீ., 120 செ.மீ. என்ற அளவிலும் அமைந்துள்ளன. கருவறையின் நான்கு அறைகளின் மேல்கூரை காங்கிரீட்டால் ஆனது. கருவறை அறையின் தரை சிமெண்டால் ஆனது.

முக்கிய தெய்வ அறையின் சுவரின் எல்லாப் பாகங்களிலும் ஓவியங்கள் உள்ளன. முக்கிய தெய்வமான திருமால் ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டிருக்கிறார். அவரது கால் பகுதியில் அமர்ந்திருக்கும் லட்சுமி அவர் பாதங்களை வருடியபடி இருக்கிறாள். திருமாலின் தலைப்பகுதியின் மேல் வலது இடது புறங்களில் பிரம்மா, நந்திதேவர், நாரதர், அனுமன் ஆகியோர் உள்ளனர். இந்த ஓவியங்களை அடுத்து வலதுபுறம் சுவரில் தருமன் அரியாசனத்தில் அமர்ந்திருக்கும் ஓவியம் உள்ளது. அவர் அருகே திரௌபதி இருக்கிறாள். தருமரின் இன்னொரு பக்கம் குந்திதேவி விதவைக் கோலத்தில் காட்சி அளிக்கிறாள். சுற்றிலும் அர்ஜுனன், பீமன், நகுலன், சகாதேவன், துரோணாச்சாரியார் ஆகியோரின் ஓவியங்கள் உள்ளன. அர்ஜுனன் கையில் வில்லும், பீமனின் கையில் கதையும் உள்ளன.

முக்கிய தெய்வ அறையின் வலது பக்க அறையில் சாஸ்தா, குருசாமி, பரமசிவன், கிருஷ்ணன் ஆகியோரின் ஓவியங்கள் உள்ளன. கதைப்பாடல் கூறும், பாண்டவர்களுக்குத் துணையாக வரும் சாளுவன் என்னும் நாயின் ஓவியமும் இதில் உள்ளது. இவர்களில் குருசாமி என்பவர் ஒரு தவமுனிவர். இவரைப்பற்றி குருசாமி கதை என்னும் கதைப்பாடல் உள்ளது. கிருஷ்ணனின் உருவம் பாம்பாட்டியாகவும் காட்டப்பட்டுள்ளது.

முக்கிய தெய்வ வலதுபுற அறையில் திருதராஷ்டிரன், காந்தாரி ஆகியோரின் ஓவியங்கள் உள்ளன. இவர்களின் அருகே

துரியோதனன், கர்ணன், துச்சாதனன் ஆகியோர் உள்ளனர். நூற்றுவர்களின் தலைகள் சுவரெங்கும் நிரம்பியுள்ளன. அரவுக்கொடியோனான துரியோதனனின் முன்னர் படம் எடுத்தாடும் பாம்பு காட்டப்பட்டுள்ளது.

இந்த அறையை அடுத்த அறையில் நீலனின் ஓட்டு உருவமும் (சடுமண் உருவம்) இசக்கி அம்மனின் கல் உருவமும் உள்ளன. இவை பிற்காலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டவை.

சுவர் ஓவியங்கள் எல்லாமே அடர்த்தியான நிறத்தில் அமைந்துள்ளன. இவை ஆரம்ப காலத்தில் தாவரச்சாய ஓவியமாக இருந்தன என்றும், பிற்காலத்தில் கோவில் பழுது பார்க்கப்பட்ட போது எண்ணெய்ச் சாயமாக மாறியது என்றும் கூறுகின்றனர் கோவிலைச் சார்ந்தவர்கள்.

இக்கோவிலில் 1972-ஆம் ஆண்டு அளவில் புதுப்பிக்கப் பட்டது. அப்போது கோவில் அமைப்பில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. கோவில் கருவறை அறைகளின் முன் சிறிய அறைகளும், ஓவியங்களின் கீழே சிறிய திண்ணைகளும் கட்டப்பட்டன. ஓவியங்களின் அமைப்பு சுசீந்திரம் தாணுமாலையன் கோவிலின் கோபுரச் சுவர் ஓவியங்களின் சாயலை ஒத்துள்ளது.

இந்த ஓவியங்களின் அமைப்பு, வாய்மொழி மரபு, ஏடு எழுதப்பட்ட காலம் ஆகியவற்றின் அடிப்படையில் இக்கோவில் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் உருவானது என்று கூறலாம்.

இக்கோவில் குருகுல மக்களுக்கு உரியது ஆயினும், இக்கோவிலின் துணைத் தெய்வங்களாக சுடலைமாடன், காலசாமி, இசக்கி அம்மன், நீலன் ஆகியனவும் உள்ளன.

இக்கோவிலுக்கு என்று சொத்துக்கள் இல்லை. எனவே கோவில் வழிபாடு ஆடம்பரமின்றி நிகழ்கிறது. இதற்கு என்று தின வழிபாடு இல்லை. வெள்ளிக்கிழமை மாலை 6 அல்லது 6½ மணி அளவில் சிறிய பூசை நடக்கிறது. பூசையைக் கோவிலுக்கு உரிமையுடைய நாடார் சாதியினரே நிகழ்த்துகிறார். ஒவ்வொரு மாத இறுதி வெள்ளிக்கிழமை மாலையிலும், கார்த்திகை மாத வெள்ளிக் கிழமையிலும் சிறப்பு வழிபாடு நடக்கிறது. கோவில்

பூசையில் தனியான சிறப்பு செயல் இல்லை. பிற நாட்டார் தெய்வக் கோவில் வழிபாட்டு முறைகளைப் போன்று இங்கும் நிகழ்கிறது.

இக்கோவிலின் விழா சித்திரை மாதம் இரண்டாவது அல்லது மூன்றாவது வெள்ளிக்கிழமை காலையில் ஆரம்பித்து ஞாயிற்றுக்கிழமை பகலில் முடிகிறது. கோவில் விழாவிலும், வேறு வழிபாட்டுக் கூறுகளிலும் பலியோ, அசைவ உணவு படைக்கும் நிலையோ முந்திய காலங்களிலும் இருந்தது இல்லை என்கின்றனர்.

கோவில் விழாவில் தெய்வங்களுக்குப் படைக்கப்படும் பழம், பாயாசம் போன்ற பொருட்கள் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் சமமாகவே வைக்கப்படுகின்றன. விழாக்களில் நைவேத்தியமாக பழங்கள் அதிக அளவு படைக்கப்படுகின்றன.

கோவில் விழாவின் மூன்று நாட்களிலும் வில்லிசை நிகழ்கிறது. வெள்ளிக்கிழமை விழாவில் இரவு 9 மணி முதல் 4 மணி வரை குருகுல மக்கள் கதை வில்லிசையில் பாடப்படும். வில்லிசை நிகழ்ச்சியை குறிப்பிட்ட கலைஞரே நிகழ்த்த வேண்டும என்ற கட்டாயம் இல்லை. கலைஞர்கள் கருவறையின் எதிரே உள்ள வில்லிசை மேடையில் இருந்தே பாடுகின்றனர்.

வில்லிசை நிகழ்த்த வரும் கலைஞர்களிடம் கோவிலில் உள்ள குருகுல மக்கள் கதை நோட்டுப் புத்தகத்தைக் கொடுக்கின்றனர். அதன் அடிப்படையில் கலைஞர் பாடுகிறார். இதற்கு ஊரில் வயதான முதியவர்கள் உதவவும் செய்கின்றனர். இக்கோவிலில் நிகழ்ச்சி நடத்தவரும் கலைஞர்களுக்கு இக்கதை தெரிந்திருக்கிறது. குருகுல மக்கள் வெள்ளிக்கிழமை பாடப்பட்ட பிறகு, கால சாமி கதை, குருசாமி கதை, நீலன் கதை, நீலி கதை ஆகிய தெய்வங்களின் கதைகளையும் பாடுகின்றனர். இக்கதைகளைப் பாடும் நேரம் குறைந்த அளவில் இருக்கும்.

வெள்ளிக்கிழமை பகல் 1 மணிக்கு மேல் கோவிலின் தெய்வங்களுக்குச் சாமியாடுபவர்களுக்கு அருள் வந்து ஆடுவர். இதற்கு வில்லிசை பாடும் கலைஞர் வரத்துப் பாடுவார். குருகுல

மக்கள் கதையில் காந்தாரி பாண்டவர்களை அழிக்க அனுப்பி வைத்த பூமாலையைப் பீமன் கவர்ந்து செல்லும் கதை நிகழ்ச்சி வரத்துப் பகுதியாகப் பாடப்படும். இந்த நிகழ்ச்சி பாடப்படும்போது மட்டுமே சாமிக்கு அருள் வருமாம்.

சுமார் 8-10 ஆண்டுகளுக்கு முன்பு வரை இக்கோவில் விழாவில் 5 முதல் 7 பேர்கள் அருள் வந்து ஆடினர். பீமன், அர்ஜுனன், காந்தாரி, கர்ணன் ஆகியோரின் சக்தி சாமியாடியின் மேல் வருவதான நம்பிக்கை இருந்தது. கிருஷ்ணன் அருள் வந்து யாரும் ஆடியதில்லை. இவ்வாட்டத்தின் போது துரியோதனனும் பீமனும் மாறுபாடு கொண்டு போர் செய்வது போல் நடித்து ஆடுவதும் உண்டு. இக்காலங்களில் ஆட்ட நிகழ்ச்சியால் 21 பாத்திரங்களில் பாயசம் வைத்து பக்தர்களுக்குக் கொடுத்தனர். ஆட்டக்காரர்கள் சூடான பாயசத்தைக் கையால் அள்ளிக் கொடுத்திருக்கின்றனர். இன்றைய நிலையில் (2001) இரண்டு பேர்களே சாமி ஆடுகின்றனர்.

சனிக்கிழமை மாலை விழாவில் அன்னதானம் முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. சனி மாலை 4 மணிக்கு 4 மூடை அரிசி பொங்கப்பட்டு, பலவகை கூட்டுக்களுடன் ஒரே பந்தியில் விநியோகிக்கப்படுகிறது. ஞாயிறு காலை 11 அல்லது 12 மணியுடன் விழா முடிகிறது.

விழா முடிந்ததும் குருகுல மக்கள் கதை ஏட்டை கருவறைப் பகுதியில் வைத்து விடுகின்றனர்.

இன்றைய நிலையில் இக்கோவிலின் வழிபாடு தொடர்ந்து நிகழ்ந்தாலும் கதை குறித்த விழிப்புணர்வும், அறிவும் குறைந்து வருகிறது.

# குருகுல மக்கள் கதைச் சுருக்கம்

குருநாடு என்னும் நாடு சீரும் சிறப்பும் உடையதாக இருந்தது. அந்த நாட்டில் எப்பொழுதும் மழை பொழிந்து கொண்டிருக்கும். அந்த நாட்டில் பஞ்சவர்கள் என்னும் பாண்டவர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் எல்லோரும் வேத நெறிப்படி ஒழுகினார்கள். அதே நாட்டில் வாழ்ந்த துரியோதனன் பஞ்சவர்களைச் சூதில் தோற்கடித்தான். அவர்களை 12 வருஷம் வனத்திற்கு அனுப்பினான். பின்னர், பாண்டவர்கள் துரியோதனரை வென்று உலகை ஆண்டனர்.

அது செழிப்பான நாடு. பெரிய மாளிகைகள் அங்கு நிறைந்திருக்கும். அங்கு வாழ்ந்த மறையவர்கள் நான்கு வேதங்களையும் ஓதினர். இந்த மறையவர் வம்சத்தில் பிறந்த பவத்தன் என்பவனின் மனைவியின் வயிற்றில் பிறந்தவள் செம்பகள வாள் கருணையாள்.

இவள் பேரழகு வாய்ந்தவள். முத்தமிழை முறைப்படி கற்றவள். அவளுக்குச் சாதகம் கணித்த சோதிடர்கள் இவளை மணப்பவன் 40 நாட்களுக்குள் இறப்பான் என்றனர். இதனால் அவளை யாரும் மணம் செய்ய முன்வரவில்லை.

செந்தாமரை போன்ற முகத்தை உடைய மாலை என்னும் அப்பெண் திருவேங்கடன் என்னும் மறையவனைச் சந்தித்தாள். அவனும் அவளை விரும்பினான்.மறையவன் அவளை மணந்து வாழ்ந்தான். திருமணம் முடிந்து 41ஆம் நாளும் வந்தது. அப்போது மறையவன் "பெண்ணே நாம் இருவரும் கங்கையாற்றில் மூழ்கி புண்ணியம் தேடலாம்; போவோம்" என்றான். அவர்கள் இருவரும் கங்கையாற்றின் கரையில் மூழ்கி நின்று வேண்டினர். அடுத்த பிறவியில் இருவரும் கணவன் மனைவியாகப் பிறக்க வேண்டும் எனக் கேட்டுக்கொண்டு ஆற்றில் மூழ்கினர். உடனே இருவரும் வானுலகம் சென்றனர்.

வைகுண்டத்தில் சித்திரபுத்திரன் கணக்கைப் புரட்டினான். இறந்து வந்த மறையவனின் பலனைப் பார்த்தான். "இந்த

மறையவன் இவன் மனைவியிடம் அதி வேக ஆசை கொண்டிருக்கிறான். இவனுக்கு இவள் தங்கையாகவும் முறை வர வேண்டும். இவர்களுக்கு ஏழு பிறப்பு உண்டு. இப்பிறப்புகளில் இவர்கள் அண்ணன் தங்கையாகவும், கணவன் மனைவியாகவும் வாழ்வார்கள்" என்றான்.

மேலும் சித்திரபுத்திரன் இவர்கள் அண்ணன் தங்கையாகவும், கணவன் மனைவியாகவும் எப்படி வாழ்வார்கள் என்பதையும் விளக்கினான். திருமால் பயில்கின்ற பாற்கடலில் குளவி மரம் உள்ளது. அதில் வாழ்கின்ற அன்னத்திற்கு அம்மறையவனும், மனைவியும் பிள்ளைகளாய் பிறப்பார்கள்" என்றான்.

சித்திரபுத்திரன் கூற்றுப்படியே மறையவனும், அவன் மனைவியும் அன்னத்தின் வயிற்றில் முட்டையில் பிறந்து சேவலும், பெடையுமாயினர். அவை அண்ணன் தங்கைகளாகவும், கணவன் மனைவியாகவும் வாழ்ந்தன. சேவல் ஒருமுறை பெடையைத் தழுவ முற்பட்டபோது இந்திரியம் கீழே சிந்தி, கங்கையாற்றில் வாழ்ந்த ஒரு மீனின் வயிற்றில் புகுந்தது. உடனே அது கர்ப்ப முற்றது. பின் ஆணும், பெண்ணுமாய் இரு மதலைகளை ஈன்றது.

இந்த இரு மச்சங்களும் மனித உருவங்களாய் மாறின. இவர்களில் பெண் மச்சத்தைக் கடல்வாழ் பரதவதர் கண்டு எடுத்து வளர்த்தனர். அதற்கு மச்சகெந்தி எனப் பெயரும் இட்டனர். அவள் பேரழகு உடையவளாய் இருந்தாள்; கடலில் ஓடம் செலுத்தும் வித்தையை அவள் கற்றிருந்தாள். ஆண் மச்சமாகிய பராசரர் காட்டில் வாழ்ந்தார்.

ஒருமுறை மச்சகந்தியின் அண்ணன் பராசர முனிவர் அவள் இருந்த கடல் துறைக்கு வந்தார். அவர் மச்ச கந்தியிடம் அழகான பெண்ணே நீ ஓடத்தைச் செலுத்துவாய். கடலைக் கடக்க எனக்கு உதவுவாய் என்றார். அவளும் அதற்கு இசைந்து ஓடத்தைச் செலுத்தினாள்.

முனிவர் ஓடத்தில் இருக்கும்போது "பெண்ணே மச்சகந்தி நாம் இருக்கும் இந்தக் கணம் முக்கியமானது. நாம் இருவரும் இப்போது புணர்ந்தால் புத்திசாலியும் அறிவாளியுமான மகன் பிறப்பான். நீ மனமொத்து அதற்கு இணங்குவாய்" என்றார்.

அவளும் மகிழ்ச்சியுடன் இணங்கினாள். அண்ணன் தங்கைகளாகிய இருவரும் முந்திய வரப்படி கணவன் மனைவியாய் கூடினர். அவர்களின் புணர்ச்சியின் பலனால் அறிவொளி வீசும் வியாசர் பிறந்தார்.

வியாசர் குறிப்பிட்ட வயதை அடைந்ததும் "அம்மா என் தந்தையைப் போல் நானும் தவம் செய்யச் செல்லுகிறேன்" என்றார். தாயோ "நான் உன்னைப் பிரிந்து எப்படி இருப்பேன்" என்றாள். மகன் "அம்மையே நீ நினைத்த போது நான் வருவேன்" என்றார்.

வியாசர், தந்தை பராசர முனிவரை அணுகி வேதங்களைக் கற்றார். சாஸ்திரங்களைப் படித்தார். தந்தை பராசர முனிவர் மகனிடம் "இந்தத் துவாபர யுகம் முடிந்ததும் நூற்றுவரை வீமன் அழிக்கப் போகிறான். இவர்களின் வரலாற்றை நீ பாடப் போகிறாய். அதை விநாயகன் மகாமேருவில் எழுதப் போகிறார்" என்றார்.

இந்த நேரத்தில் சந்தனமகராஜன் என்னும் அரசன் இந்திரனைப் பணிந்து "தேவர் தலைவனே, நான் கங்கையைக் கைப்பிடித்து மணக்க வேண்டும் வரம் தருவாய்" எனக் கேட்டான். இந்திரனும் அதற்கு இணங்கி வரம் கொடுத்தான். சந்தன மகாராஜனும் கங்கையைக் கைப்பிடித்தான். அவர்களுக்கு எட்டு குழந்தைகள் பிறந்தன. பிறந்த குழந்தைகளைக் காட்டில் போட்டுவிடும்படி கங்கை கேட்டுக் கொண்டாள். சந்தன அரசனும் அப்படியே செய்தான். இறுதியாகக் காங்கையர் பிறந்தார். மன்னனோ கங்கையிடம் இந்த ஆண் குழந்தையைக் காட்டில் போடமாட்டேன் என்றார். கங்கையோ "நீர் நம் ஒப்பந்தத்தை மீறிவிட்டீர். நான் உம்முடன் இருக்க மாட்டேன், போகிறேன்" என்றாள். மின்னலைப்போல மறைந்து விட்டாள்.

காங்கையர் வளர்ந்து இளம் பருவத்தை அடைந்தார். தந்தை சந்தன அரசன் மச்சகந்தி என்னும் பெண்ணை விரும்புவதை அறிந்தார். அவளை அவருக்கு மணம் முடித்து வைக்கவும் விரும்பினார். அவளது தந்தையைச் சந்தித்துப் பெண் கேட்டார். மச்சகந்தியின் வளர்ப்புத் தந்தையோ, "எம் மகளை உம் தந்தைக்குத்

தருகிறோம். ஆனால் அவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகளுக்குத் தாம் நாட்டின் உரிமையைக் கொடுக்க வேண்டும்" என்றான். காங்கையர் நான் இப்போதே அதற்கு உறுதி கொடுக்கிறேன்; நான் நிரந்தர பிரம்மச்சாரியாக இருப்பேன் என்று சபதம் செய்தார்.

சந்தன அரசனுக்கும் மச்சகந்திக்கும் மூன்று மக்கள் பிறந்தனர். ஒரு சமயம் மூன்று மக்களும் மாய்ந்து விட்டனர். மச்சகந்தி வியாசரை அழைத்து தன் வம்சத்தை விருத்தி செய்யச் சொன்னாள். வியாசர் "நான் மூன்று பிண்டங்களைத் தருகிறேன். அவற்றை இறந்துபோன என் சகோதரர்களின் மனைவிகள் சாப்பிடட்டும்; குழந்தைகள் பிறக்கும்" என்றார்.

மச்சகந்தியின் முதல் மருமகள் பிண்டத்தை விழுங்கியதும் வெள்ளை நிறத்தில் பாண்டு பிறந்தான். இரண்டாம் மனைவி பிண்டத்தை விழுங்கியதும் கண்ணை மூடிக்கொண்டாள். அப்போது திருதராஷ்டிரன் பிறந்தான். மூன்றாம் மனைவி வியாசரை வணங்கி பிண்டத்தை விழுங்கினாள். விதுரன் பிறந்தான். வியாசர் மூன்று குழந்தைகளையும் வாழ்த்தினார். காங்கையரிடம் தம்பியே நீ இவர்களைப் பாதுகாத்து நாட்டை ஆள்வாய் என்று வாழ்த்தி விட்டுச்சென்றார்.

மூவரும் வளர்ந்து இளமைப்பருவம் அடைந்தனர். ஒருமுறை பாண்டு காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். அங்கு ஒரு ஆண்மான் பெண்மானைத் தழுவி நிற்பதைக் கண்டான். அதை உணராமல் பெண்மானை அம்பு எய்து கொன்றுவிட்டான். ஆண்மானாக இருந்த முனிவர் பாண்டுவைப் பார்த்து நீ உன் மனைவியைத் தழுவும்போது இதுபோல் இறப்பாய் எனச் சாபமிட்டார்.

பாண்டு குந்திதேவியையும், திருதராஷ்டிரன் காந்தாரியையும் மணம் புரிந்தனர். குந்தி தேவி தனக்குக் குழந்தைப் பேற்றுக்காகப் பாண்டுவை வேண்டினாள். அவளுக்கும் பாண்டுவைப் புணர முடியாது. அந்த நேரத்தில் குந்தி தன் பழைய அனுபவக் கதை ஒன்றைக் கூறினாள். "முன்பு ஒருமுறை நான் ஒரு முனிவரை வரவேற்று உபசரித்தேன். அவர் உனக்கு என்ன வரம் வேண்டும் எனக் கேட்டார். நான் குழந்தை வரம் கேட்டேன். அவர்

ஐந்து பரல்களைத் தந்து நீ யாரை நினைத்துப் பரலை விழுங்கினாலும் அவரின் அம்சமாகக் குழந்தை பிறக்கும் என்றார். நான் அதைச் சோதிக்க விரும்பி ஒரு பரலை விழுங்கினேன். அப்போது அருகில் இருந்த என் பெரிய தாயார் திருமணமாகும் முன்பு குழந்தை பிறப்பது நல்லதல்ல எனக் கூறி என் முகத்தைப் பிடித்தாள். அந்த வேகத்தில் என் கன்னம் வீங்கி அதிலிருந்து ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தையை ஒரு பெட்டியில் வைத்து வைகையாற்றின் கரையில் புதைத்து விட்டோம்.

இதையெல்லாம் கேட்ட பாண்டு, இப்போதும் அந்தப் பரலைப் பயன்படுத்தி குழந்தை பெறுவாய் என்றான். அவளும் மூன்று பரல்களை விழுங்கி தருமன், வீமன், அர்ஜுனன் ஆகியோரைப் பெற்றாள். மிச்சம் இருந்த ஒரு பரலை இரண்டாக உடைத்து தன் தங்கை வெயிலாளின் கையில் கொடுத்து அவற்றை விழுங்கச் சொன்னாள். அவளும் விழுங்கினாள். உடனே நகுல, சகாதேவர்கள் பிறந்தனர்.

குந்தி தேவிக்கும், வெயிலாளுக்கும் குழந்தைகள் பிறந்த செய்தி கேட்டாள் காந்தாரி. குந்தியின் வீட்டிற்கு வந்தாள். ஒவ்வொரு குழந்தையையும் தூக்கிப் பார்த்தாள். பீமனும், அர்ஜுனனும் அதிக பலத்துடன் இருப்பதைக் கண்டாள். நெட்டூரி காந்தாரி பீமனைக் கொல்ல நினைத்தாள். குந்தி நீராடச் சென்ற நேரம் பார்த்து நீண்ட நெல்லை பீமனின் வாயில் போட்டாள். இந்தச் சமயத்தில் குந்தி வந்து விட்டாள். காந்தாரி "ஒரு கிளி வந்தது. நெல்லைக் கொத்தி வந்து குழந்தையின் வாயில் போட்டது" என்றாள். பின்னர் காந்தாரி மெதுவாகப் பூனைபோல் நகர்ந்து விட்டாள்.

காந்தாரியின் மனம் பொறாமைத் தீயால் எரிந்தது. நான் திருமணம் ஆகி 13 ஆண்டுகள் பிள்ளையில்லாமல் இருக்கிறேன். என் அக்காள்கள் இருவரும் 5 பிள்ளைகளைப் பெற்று விட்டார்கள் என வெந்து சாம்பலானாள். அவள் தன் வயிற்றைக் குத்திக் கொண்டாள். உடனே அவளது வயிற்றிலிருந்து உதிரம் கொட்டியது. இதைப் பார்த்துத் தோழிகள் திகைத்தனர். இதைக் கேள்விப்பட்ட அரசகுரு இக்குருதியை நூறு கலசங்களில் அடைத்து வைக்கச் சொன்னார். பின்னர் நூறு கலசங்களும் உடைந்து

துரியோதனன் உட்பட நூறு பேர் பிறந்தனர்.இறுதியில் ஒரு பெண் குழந்தையும் பிறந்தது.

நூற்றுவரும் பாண்டவரும் ஒன்றாகவே விளையாடினர். பள்ளிக்கூடம் சென்று படித்தனர். ஒருமுறை கிணற்றில் விழுந்த வாளியை எடுக்க முடியாமல் நூற்றுவரும் பாண்டவரும் திகைத்து நின்றனர். அப்போது அங்கே துரோணாச்சாரியார் வந்தார். சிறுவர்கள் கிணற்றை உற்றுப் பார்ப்பதைக் கண்டு காரணத்தை அறிந்தார். அர்ஜுனனிடம் இருந்து வில்லைப் பெற்று அம்பை எய்து வாளியை மீட்டுத் தந்தார்.

துரோணரின் திறமையைக் கண்ட துரியோதனன் தங்களுக்கு வில் வித்தை கற்பிக்க வேண்டும் என்று துரோணரிடம் கேட்டான். அவரும் இசைந்தார். எல்லோரும் அவரிடம் வில் வித்தை கற்றனர். இந்த நேரத்தில் குந்தி தேவி முதலில் பெற்ற குழந்தையை வைத்திருந்த பெட்டி மழை வெள்ளத்தால் திறந்து ஆற்றோடு போக அதைத் துரியோதனன் கண்டெடுத்தான். அந்தக் குழந்தையை வளர்த்தான். அதற்குப் பொன் கிண்ணத்தில் உணவளித்தான். ஒருமுறை பொன் கிண்ணத்தில் வைத்திருந்த அன்னத்தில் ஒரு புழு இருந்தது. கர்ணன் என்னும் அக்குழந்தை தவழ்ந்து வந்து அதைத் தொட்டதும் அன்னமாக மாறியது. இதைக் கண்ட துரியோதனன் அது தெய்வக் குழந்தை என மடியில் வைத்துக் கொஞ்சினான்.

கௌரவரும், பாண்டவரும் எப்போதும் ஒன்றாகவே விளை யாடுவார்கள். இவர்களின் விளையாட்டில் பீமன் எப்போதும் வெற்றி பெற்று வந்தான். துரியோதனன் எல்லா நேரத்திலும் பாண்டவர்களிடம் வஞ்சம் வைத்தே விளையாடினான். இப்படி இருக்கும் நாளில் துரோணர் நூற்றுவர்களின் வலிமையைச் சோதிக்க விரும்பினார். திடீரென்று மாயமாய் மறைந்தார். காட்டு ராட்சத ஓந்தி ஒன்று அவரை விழுங்கியதாகச் செய்தி பரந்தது. இதை அறிந்த நூற்றுவர் பெரும் படையுடன் ஓந்தியைத் தேடிச் சென்றனர். கௌரவரும் இந்தச் செய்தியைக்கேட்டு பலவகை ஆயுதங்களுடன் புறப்பட்டனர். தன் சீடர்கள் தம்மை உண்மையாகவே தேடுகின்றனர் என்பதை அறிந்த துரோணர் அவர்களின் முன்னே வெளிப்பட்டுத் தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்.

இப்படி இருக்கும்போது பாண்டவர்கள் காட்டிற்கு வேட்டையாடச் சென்றனர். பெரிய வலையை விரித்து வைத்தனர். அதில் மிருகங்கள் பல சிக்கின. அவற்றின் மாமிசத்தை நகரத்தில் விற்றனர். நூற்றுவர்கள் அந்த இறைச்சியை வாங்கிச் சென்றனர். இதைக்கண்ட காந்தாரி உங்களுக்கு வேட்டையாடத் தெரியாதா? நீங்களும் செல்லலாமே என மக்களைப் பழித்துப் பேசினாள்.

காந்தாரியின் பேச்சைக் கேட்ட கௌரவரும் பெரிய வலைகளையும், ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு வேட்டையாடச் சென்றனர். காட்டில் வலையை விரித்துக் காவல் நின்றனர். ஆனால் அவர்களின் வலையில் விழுந்ததெல்லாம் யாரும் தின்னாத செந்நாயும், ஓரிகளும் பிற மிருகங்களும்தான். இந்த நேரத்தில் பஞ்சவர்களோ முறைப்படி காட்டுக்குச் சென்று வேட்டையாடி விலங்குகளைக் கொண்டு வந்தனர்.

இப்படி இருக்கும்போது ஒரு குறவன் காட்டில் விளைந்த பலாப்பழம் ஒன்றைப் பறித்து பஞ்சவர்களிடம் கொடுத்தான். அந்தப் பழத்தில் 105 சுளைகள் இருந்தன. தருமர் சகோதரர்களாகிய 105 பேரும் இவற்றை ஆளுக்கொன்றாக எடுத்துக் கொள்வோம் என்றார். வீமன் அதற்கு இணங்கவில்லை. இச்செய்தியைக் கேள்விப்பட்ட துரியோதனன் அந்தப் பலாப்பழத்தில் பாண்டவருக்கு உரிமை கிடையாது என்றான்.

துரியோதனனுக்கு வீமனிடம் பயம் உண்டு. அதனால் பஞ்சவர்களை நேரடியாக எதிர்க்க விரும்பவில்லை. பஞ்சவரை விருந்துக்கு அழைத்து வழியில் கொன்று விடலாமா? அவர்கள் வரும் வழியில் உள்ள பாலத்தை உடைத்து விடலாமா? அவர்களைப் பொறியை வைத்துப் பிடிக்கலாமா? அவர்கள் மீது நாயை ஏவி விடலாமா? அல்லது கொடிய விஷப் பொடியைத் தூவி விடலாமா? அவர் தேய்க்கும் எண்ணெயில் விஷ மருந்தை இடலாமா? அவர்கள் குளிக்கும் இடத்தில் கழுவை நட்டு வைக்கலாமா? என்றெல்லாம் யோசித்தான்.

இந்த நேரத்தில் காந்தாரியும் பஞ்சவர்களை அழிக்க என்ன செய்யலாம் என்று யோசித்தாள். ஓட்டனை (தூதனை) அழைத்தாள். "ஓட்டனே, நீ பஞ்சவர் வீட்டிற்குப் போய் உங்கள் பெரியம்மை அழைக்கிறாள் எனக் கூறி ஐவரையும் அழைத்து வா" என்றாள்.

அவளது ஆணையை ஏற்ற ஓட்டன் கச்சை கட்டிக் கொண்டான். எண்ணெயைத் தேய்த்துக் கொண்டான். வாளைத் தோளில் எடுத்தான். ஓட ஆரம்பித்தான். பச்சையாத்தைக் கடந்து பாண்டியன் கோட்டை விட்டு சித்திரமனை கடந்தான். பாவை நாடு சென்றான். குந்தாலப்பதிக்கு வந்தான். குருகுல படைவீட்டை அடைந்தான். பாண்டவர்களைக் கண்டு காந்தாரி உங்களை விருந்துண்ண அழைக்கிறாள் என அழைத்தான். அவர்களும் வருவதற்கு இசைந்தனர். இதைக் காந்தாரியிடம் தெரிவித்தான் ஓட்டன்.

காந்தாரி, பாண்டவர்கள் தன் அழைப்பிற்கு இசைந்ததை எண்ணி மகிழ்ந்தாள். கொடிய விஷத்தைச் சேகரிப்பவரை அழைத்தாள். நல்ல பாம்பு விஷம் நான்கு நாழி, கடுவாய் நாக்கு விஷம் எல்லாவற்றையும் சேகரித்தாள்.

பஞ்சவர்களைக் காந்தாரி விருந்துண்ண அழைத்தாள் என்பதைக் கேள்விப்பட்ட குந்திதேவி அஞ்சினாள். பீமன் சிறு குழந்தையாக இருந்தபோது அவள் வாயினில் நெல்லைப் போட்டுக் கொல்ல முயற்சி செய்த நிட்டூரி அல்லவா இந்தக் காந்தாரி என மயங்கினாள். பாண்டவர்களிடம் நீங்கள் காந்தாரியின் வீட்டிற்குச் செல்ல வேண்டாம் என்றாள். அவர்களோ நமக்கு நாராயணன் துணை உண்டு, கவலைப்படாதே என்றனர்.

குந்தி தேவிக்குச் சமாதானம் சொல்லி விட்டு ஐவர்களும் விருந்துக்குப் புறப்பட்டனர். பலவகைஅணிகளை அணிந்து கொண்டனர். ஆயுதங்களை எடுத்துக்கொண்டனர். கைநிறையப் பொன்னைக் கணபதிக்குக் காணிக்கை கொடுத்தனர். பின்னர் தங்கள் குலதெய்வங்களை வணங்கிவிட்டுப் பச்சையாறு பாலம் வழி வந்தனர்.

பஞ்சவர்கள் பச்சையாறு பாலம் வழி வரும்போது, பாலம் உடையும் படியான ஏற்பாடுகளைச் செய்திருந்தாள் காந்தாரி. ஆனால் வீமன் அதை அறிந்து தன் கதாயுதத்தைப் பாலமாக வைத்து சகோதரர்களைக் காப்பாற்றினான். காந்தாரி பஞ்சவரைக் கொல்ல வைத்திருந்த பொறியை உடைத்தான் வீமன்; அவர்களைக் கொல்லவந்த மாயநாயை துரத்தினான். இவற்றை

எல்லாம் தாண்டி வந்த பஞ்சவர்களை வெள்ளித்தடுக்கில் அமரச் சொன்னாள் காந்தாரி. அந்தத் தடுக்கின் கீழ் கூர்மையான நாராயம் இருப்பதைக் கண்டு தப்பித்தனர் பஞ்சவர்.

காந்தாரி பஞ்சவர்களை அன்னம் புசிக்க அழைத்தாள். அவர்களோ நாங்கள் எண்ணெயில் மூழ்கிய பின்பு குளித்து விட்டு வருவோம் என்றனர். உடனே காந்தாரி அவர்களுக்கு விஷம் கலந்த எண்ணெயைக் கொடுத்தாள். நாராயணன் அருளால் விஷ எண்ணெய் அவர்களைப் பாதிக்கவில்லை.

காந்தாரி அவர்களுக்கு உணவு படைத்தாள். பஞ்சவர் அந்த உணவை ஒரு நாய்க்குப் போட்டனர். நாய் இறந்தது. காந்தாரியோ அவர்களை சமாதானம் செய்தாள். பின் அவர்கள் ஓய்வெடுக்க படுக்கையில் இருந்தபோது அழகிய பெண்கள் அவர்களுக்கு சிருச்சை செய்ய வந்தனர். அந்தப் பெண்களிடம் காந்தாரி கூறினாள், நீங்கள் எதாவது சாகசம் செய்து பஞ்சவர்களைக் கொன்று விடுங்கள் என்றாள். அப்பெண்களோ "ஐயோ இவர்களிடம் எங்கள் சாகசம் பலிக்குமா? எங்கள் சூழ்ச்சி தெரிந்தால் எங்களைக் கட்டி வைத்து அடிப்பார்களே" என்றனர். என்றாலும் அப்பெண்கள் தங்களை அழகுபடுத்திக் கொண்டு சென்றனர்.

வீமனை மயக்கச் சென்ற பூமாலை என்பவள் தன்னை மிகவும் அலங்கரித்துக் கொண்டாள். தன் தலை முடியில் ஒரு கொலை கருவியை மறைத்து வைத்துக் கொண்டாள். வீமனிடம் சென்று தன் அழகு வெளிப்படும்படி நடந்து கொண்டாள். அப்போது அவள் அறியாமல் தலையில் இருந்த கொலைக்கருவி கீழே விழுந்தது. அதைப் பார்த்த வீமன் அவளைப் பழிக்க ஆரம்பித்தான். அவளைத் தூணில் கட்டி வைத்து அடித்தான். இந்தக் கலவரத்தில் மற்ற நான்கு பெண்களும் ஓடிவிட்டனர். பூமாலை, "ஐயோ உங்கள் அம்மா காந்தாரியால் அல்லவா நான் உன்னைக் கொல்ல வந்தேன், என்னை விட்டுவிடு" என்றாள்.

வீமன் பூமாலையிடம் "உன்னைச் சிறை எடுத்துக்கொண்டு போவேன்.இது துரியோதனனுக்குப் பாடமாக இருக்கட்டும்" என்றான். அவன் கூறியபடியே கவர்ந்து சென்று விட்டான். இதையறிந்த துரியோதனன் நம் பெண்ணைக் கவர்ந்தவனைச்

சும்மா விடமாட்டேன்; இப்போதே அவனைக் கொல்லுவேன் எனப் புறப்பட்டான். உடனே காந்தாரி தடுத்தாள். "மகனே வீமன் கல் அல்லவா; அவனைக் கொல்ல முடியுமா? நான் அவனைக் கவனித்துக் கொள்ளுகிறேன்" என்றாள்.

காந்தாரி வீமனைக் கொல்லத் திட்டம் தீட்டினாள். ஓட்டனை வரவழைத்தாள். அஞ்சு தலைப்பாம்பு ஒன்றைப் பிடிக்கும் தகுதியுள்ள குறவனை அழைத்துவா என்றாள். ஓட்டனும் கச்சை கட்டிக்கொண்டு புறப்பட்டான். குறவன் வாழ்ந்த மலைக்குச் சென்று அவனை அழைத்தான். குறவனும் வந்தான். அவனிடம் காந்தாரி அம்மையின் வேண்டுகோளைத் தெரிவித்தான். குறவன் அஞ்சு தலை பாம்பைப் பிடித்து பால்குடத்தில் அடைத்துத் தர இசைந்தான்.

குறவன் பாம்பைப் பிடிக்க நாகமலை சென்றான். சீங்குழலை இசைத்தான். பாம்பு வந்து ஆடியது. நாகத்தைப் பிடித்தான் குறவன். குடத்தில் அடைத்து அதைப் பட்டினி போட்டான். வெள்ளிக்கிழமை பஞ்சவர்க்கு பால்குடம் கொண்டு போகும்போது பால்குடத்தில் பாம்பை விடுவதற்கு ஏற்ற வாறு வைத்துக் கொண்டான். பாலில் அஞ்சு தலை பாம்பின் விஷம் கலந்தால் பஞ்சவர்கள் பிழைக்க மாட்டார்கள் எனக் காந்தாரியிடம் உறுதியளித்தான் குறவன்.

இந்த நிலையில் காந்தாரி வீமனுக்கு ஒரு நீட்டு அனுப்பினாள். அதில், "வீமன் அண்ணனின் மனைவியைப் போன்றவளைக் கவர்ந்து சென்று விட்டான். இதை இல்லை என்று நிரூபிக்க வேண்டுமென்றால் நான் அனுப்பும் பால்குடத்தை அவிழ்க்க வேண்டும்" என்றிருந்தது. இந்த நேரத்தில் பூமாலை கனவு கண்டாள். வீமனுக்கு ஆபத்து வரப்போகிறது என்றாள். வீமனோ இது என் விதி. விதிப்படி நடக்கப் போகிறது. நடப்பது நடக்கும் என்றான்.

இந்த நேரத்தில் துரியோதனன் "இந்த வீமன் அண்ணனின் வீட்டுப் பெண்களை ஆரவாரமின்றி அழைத்துச் சென்று விட்டான். அதற்கு அடையாளமாக பால்குடத்தை அவனுக்கு அனுப்பியிருக் கிறேன். அதை அவன் அவிழ்த்து தன்னை நல்லவன் என நிரூபிக்கட்டும். இல்லை என்றால் அவன் அவமானப்படட்டும்"

என எழுதினான். இந்த நீட்டைப் படித்த வீமன் "நான் இறந்தாலும் இவன் சவாலை ஏற்றுக் கொள்ளுவேன்" என்றான்.

தன் சகோதரர்களிடம், "நான் பால்குடத்தை அவிழ்த்தால் இறந்து விடுவேன். அதனால் எனக்கு வஞ்சி (பெட்டி) தயார் செய்யுங்கள்" என்றான். அப்போது அங்கே திருமால் வந்தார். அவர் குந்தியிடம், "தேவி, நீ அஞ்ச வேண்டாம். வீமனுக்கு அஷ்டமத்தில் சனி. அதனால் பால்குடத்தை அவிழ்ப்பான். பாம்பு கடித்து இறப்பான். நான் உயிரைப் பாதுகாத்துப் பின் அவன் உடலில் செலுத்துவேன். பின் நடக்கும் போரில் அவன் வெற்றி பெறுவான். நான் துரியோதனனைப் பாதுகாக்க மாட்டேன், கவலைப்படாதே" என்றார்.

வீமன் பால்குடத்தை அவிழ்த்தால் இறப்பான் என்பதைக் கண்டுகொண்ட தருமன் விதியை நொந்து கொண்டான். விஜயனோ வீமனைத் தடுத்தான். வீமனோ எல்லோருக்கும் ஆறுதல் சொல்லிவிட்டுக் குடத்தைத் திறந்தான். உடனே பாம்பு வெளியே வந்து வீமனைக் கடித்தது. விஷம் அவன் தலைக்கு ஏறியது. அவனது உயிரும் மெல்லப் பிரிந்தது. நாராயணர் அந்த உயிரைப் பிடித்துத் தன் கையில் இருந்த சங்கில் அடைத்துக் கொண்டார். வீமன் உயிரற்று சாய்ந்து விழுந்தான்.

இறந்து கிடந்த வீமனைப் பார்த்து தர்மர் புலம்பினார். குந்தி அழுதாள். கண்ணன் அவர்களுக்குச் சமாதானம் சொன்னார். ஆசாரியை அழைத்து வஞ்சி செய்யப் பணித்தார். உடனே வஞ்சிப்பணி ஆரம்பமாயிற்று. பீமனின் உடலை வைப்பதற்கு உருவாக்கப்பட்ட வஞ்சியில் சிவன், பிரம்மா, விஷ்ணு ஆகியோருடைய சித்திரத்தை வரைந்தனர். நஞ்சு கொட்டும் நாகத்தின் படத்தை எழுதினர்.

வீமனின் உடலை நீராட்டினர். நீல புனுகு தெளித்தனர். பலவகை அணிகளை அணிந்தனர். அவனுக்குப் பட்டுத்துணி அணிந்தனர். அவனுடைய அக்கோலத்தைப் பார்த்துக் குந்தி புலம்பினாள். அவளை ஆற்றுவித்த நாராயணர் வீமனின் உடலை வஞ்சியில் வைக்கச் சொன்னார். வஞ்சியில் ஒரு வடத்தைக் கட்டினார். எல்லோரையும் அதை இழுக்கச் சொன்னார். வஞ்சி

மெல்ல நகர்ந்து நாகப்பெரும் தீவில் உள்ள நாகப்பட்டணத்துக்குச் சென்றது.

நாகப்பட்டணத்தில் கும்பகராசன் என்பவன் இருந்தான். அவனுடைய முறைப்பெண் நாக கன்னிகையைப் மணமுடிக்க சோதிடனிடம் கேட்டான். அவன் இசைவு தெரிவிக்கவில்லை என்றாலும் கும்பகராசன் தன் பரிவாரங்கள் சூழ நாக கன்னிகையின் வீட்டிற்குப் புறப்பட்டான்.

கும்பகராசன் நாக கன்னிகையைச் சந்தித்துத் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். அவளோ என்னை மணம் செய்ய நிபந்தனை ஒன்றுண்டு. என்னிடம் நீர் சூது விளையாட வேண்டும், அதிலே வெல்ல வேண்டும் என்றாள். கும்பகனும் அதற்கு இணங்கினான். உடனே முறைப்படி இருவரும் சூது விளையாடினர். கும்பகன் மந்திரி, காலாள், யானைகள், குதிரைகள் ஆகியவற்றை வைத்து ஆடினான். ஆட்டத்தில் நாககன்னியே வென்றாள். அவள் சொன்னாள், தோற்றவருக்கு நான் மாலையிடுவது நல்லது அல்லவே என்றாள். அவளிடம் வெறுப்படைந்த கும்பகராசன் அடப்பாவி, நீ நன்றாக இருப்பாயா? உன் மாங்கல்யம் தரிக்காது. நீ பிணத்திற்குத்தான் மாலையிடுவாய் எனச் சாபம் கொடுத்தான்.

அத்தானின் சாபம் பற்றித் தந்தையிடம் கூறினாள் நாககன்னி. அவனோ கவலைப்படாதே, உனக்கு நல்லது நடக்கும் எனச் சமாதானம் கூறினார். இந்த நேரத்தில் மாயவனார் பண்டார உருவத்தில் வந்தார். அவரைக் கண்ட நாககன்னி அய்யனே என் அத்தான் கும்பகராசனுடன் சூதாடினேன். அவன் தோற்றுப் போனான். எனக்குச் சாபமும் இட்டான். நீர்தான் என்னை மணக்க வேண்டும் என்றான். மாயவனோ உனக்கேற்ற மணாளன் வருவான் கவலை விடுக என்றான்.

இந்த நேரத்தில் கடல்வழி ஒரு பெட்டி வந்தது. அதை நாககன்னியின் ஆட்கள் கரைக்கு இழுத்து வந்தனர். அந்தப் பெட்டி இரும்புப் பூட்டால் பூட்டப்பட்டிருந்தது. அதன்மேல் வீரவாளிப் பட்டு போர்த்தப்பட்டிருந்தது. நாககன்னி பட்டை விலக்கிப் பூட்டைத் திறந்து பார்த்தாள். பெட்டியில் அழகிய இளைஞனின்

உடல் இருந்தது. உயிரற்ற பீமன் அதில் இருந்தான். அதில் ஒரு நீட்டும் இருந்தது. நீட்டை எடுத்து நாககன்னி படித்தாள். பெட்டியில் இருப்பது குருகுலத்து வீமனின் உடல் என அறிந்தாள். அவன் ஐந்து தலை நாகத்தால் இறந்ததையும் கண்டாள்.

நாககன்னி வீமனின் பிணத்துக்கு மாலையிட விரும்பினாள். என் அத்தான் கும்பகராசன் சாபம் கொடுத்தபடி ஆகிவிட்டதே, இந்தப் பிணத்துடன் நான் வாழமுடியுமா எனத் தன்னையே கேட்டுக் கொண்டாள். மகளின் எண்ணம் அறிந்த நாக அரசன் மகளே பிணத்துடன் வாழ்க்கை நடத்த முடியாது. அது நடைமுறை வழக்கு அல்ல எனச் சொல்லிப் பார்த்தான். அவள் கேட்கவில்லை. உடனே அவன் வேறுவழியின்றிப் பிணத்தைச் சோதித்துப் பார்த்தான். வீமனின் உடம்பில் விஷம் இருப்பதை அறிந்தான். ஊரில் உள்ள விஷகாரிகளுக்கு ஆளனுப்பினான். அவர்களும் வந்தனர்.

விஷகாரிகள் வீமனின் உடலைப் பரிசோதித்தனர். நாசியிலே கைவைத்துவிட்டு தயங்கி நின்றனர். மாயவனார் கன்னியே, நீ வளர்த்த ஐந்து தலை நாகங்களை அழைப்பாய் என்றார். நாககன்னியும் சீங்குழலைக் கையில் எடுத்து வாசித்தாள். நான் வளர்த்த நாகங்களே வாருங்கள் என்றாள். நாகங்களும் குடைபிடித்தபடி வந்தன. பெண்ணே எங்களை அழைத்த காரணம் என்ன என்று கேட்டன. நாககன்னியோ பெட்டியில் இருக்கும் பிணத்தில் கலந்த விஷத்தை உறிஞ்சி எடுக்க வேண்டும் என்று கேட்டாள். நாகங்களும் அதற்கு இணங்கின. பிணத்தின் முன்னே வந்து ஊதின. நாக கன்னியோ திருநீற்றை வாரி வீமனின் முகத்தில் எறிந்தாள். நீட்டிய கால் நிமிரவில்லையே. என் உயிரே நீ முடங்கிக் கிடப்பதேன் என்றாள். வீமன் எழுந்து அமர்ந்தான்.

வீமன் நாககன்னியிடம் என் அண்ணன்மார்கள் எங்கே, தம்பிகள் எங்கே, நான் இங்கு இப்படி வந்தேன் எனக் கேட்டான். அவன் பெட்டியில் வந்த வரலாற்றையும், அவனுக்கு ஐந்து தலை நாகங்கள் உயிர் கொடுத்ததையும் விவரித்தாள் நாககன்னி. அதோடு அந்த வீமனைத் தான் மானசிகமாய் மணந்ததையும் கூறினாள். பெட்டியில் இருந்த பிணம் பீமனே என்பதை நாகராசன் அறிந்தான். யானை பலமுடைய வீமனைக் காண உடனே

புறப்பட்டு வந்தான். அவன் படையிலிருந்த யானைகள் வீமனை வணங்கின.

பீமனின் பலத்தைப் பரிசோதிக்க நாகராஜன் ஆசைப்பட்டான். ஆயிரம் கோட்டை எள்ளையும், ஆயிரம் கோட்டை மண்ணையும் சுரணையில் கட்டி வைத்தான். பீமன் அதை ஆகாசத்தில் எடுத்து எறிந்தான். சுரணை தரைக்கு வந்தபோது மறுபடியும் அதைத் தட்டி விட்டான். அது மலைபோல் தனித்தனியே கீழே விழுந்தது. ஒரு சமயம் வீமன் எறும்பு இனங்களுக்கு உதவியிருந்தான். இப்போது அந்த எறும்புகள் எல்லாம் சேர்ந்து அவனிடம் வந்தன. உதவி தேவையா எனக் கேட்டன.

இந்த நேரத்தில் நாககன்னி வீமனிடம் சூது ஆட வரவேண்டும்; என்னை மணப்பதற்குரிய நிபந்தனை இது என்றாள். அதற்கு பீமன் நான் கானகத்தில் வாழ்ந்து கிழங்கு காய் கனிகளைத் தின்றவன். எனக்கு சூது விளையாடத் தெரியாது என்றான். நாககன்னி விடவில்லை. 'அந்த விளையாட்டை நானே சொல்லித் தருகிறேன். நீ விளையாடு. நானே தோற்றுவிடுவேன்' என்றாள். பின் இருவரும் சூது விளையாடினர். நாககன்னி தோற்றாள். என்றாலும் வீமனைப் பாராட்டினாள்.

சூதில் வெற்றி பெற்ற வீமன், நாகராஜனைப் பணிந்தான். அவன் மகளை மணக்கவும் விருப்பம் தெரிவித்தான். நாகராஜன் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தான். பெரிய பந்தல் அமைத்தான். அதில் மணமண்டபம் அமைத்தான். அந்த மண்டபத்தில் வீமனுக்கும் நாககன்னிக்கும் திருமணம் நடந்தது. இந்தச் செய்தியைக் கும்பகராசன் கேட்டான். கோபம் கொண்டான். பெரும்படை திரட்டினான். எனக்குக் கிடைக்காத பெண்ணை அடைந்தவனை அழித்தே தீருவேன் எனப் புறப்பட்டான். வீமனைச் சண்டைக்கு அழைக்க ஓட்டனை அனுப்பினான். வீமன் ஓட்டனிடம் பழைய கதையைக் கூறினான்.

கும்பகராசன் ஓட்டனின் பதிலுக்கு சமாதானமடைய வில்லை. வீமனை எப்படியும் அழித்துத் தீருவேன் எனக் கங்கணம் கட்டிக்கொண்டு நின்றான். வீமன் போருக்குத் தயார் ஆனான். "நாக கன்னியே பிணமாகப் பெட்டியில் வந்த எனக்கு வாழ்வு

கொடுத்தாய். என்னிடம் . இப்போது ஆயுதமில்லை; நான் இப்போது என் ஊருக்குச் சென்றால் கும்பகராசனுக்கு அஞ்சி வந்ததாக உலகோர் நகைப்பார்கள். எனக்கு ஆயுதம் வேண்டும்" என்றான்.

நாககன்னி அவனைச் சமாதானப்படுத்தினாள். உனக்கு ஆயுதமான தண்டாயுதத்தைத் தயாரிக்க ஏற்பாடு செய்கிறேன் என்றாள். தந்தையிடம் கணவனுக்குத் தண்டாயுதம் தயார் செய்யச் சொன்னாள். ராசன் கொல்லனை அழைத்தான். ஏழு ஆனைகள் எடுக்க முடியாத இரும்புத் தண்டாயுதம் செய்ய வேண்டும் என்றான். கொல்லனும் தன்னை ஒத்த தொழில் வல்லுநர்களை அழைத்தான். இரவு பகலாக அவர்கள் உழைத்துத் தண்டாயுதத்தைத் தயார் செய்தனர். ஏழு ஆனைகளை விட்டு இழுத்து வந்து அந்த ஆயுதத்தை நாகராஜனிடம் காட்டினர். வீமன் அதை ஒரே கையால் எடுத்தான். அதைச் சுற்றி சுழற்றிக் காட்டினான். பார்த்தவர்கள் திகைக்கும்படி அதிசயம் செய்தான்.

வீமன் கும்பகராசனுடன் போர் செய்யத் தயாராய் புறப்பட்டான். அப்போது மாயவனார் வந்து வீமனைக் கண்டார். உனக்கு ஏழு ஆனை பலம் தந்தேன் என வரம் கொடுத்தார். நாககன்னி அவனுக்கு அறுசுவை உணவு படைத்தாள். வீமனின் எதிர்காலம் எப்படி என அறிய பெரிய ஏட்டில் கயிறு போட்டு பார்த்தாள். அவன் வெற்றிபெறுவான் என ஏட்டில் இருந்தது. அவள் மகிழ்ந்தாள். களி கூர்ந்தாள். வீமன் அவளிடம் தன் பழம் பெருமை குறித்துப் பேசினான். தன் முந்திய வீரர்களைக் குறித்துச் சொன்னான்.

பெரும் படை திரண்டது. வீமன் போருக்குப் புறப்பட்டபோது அச்சம் வந்தது. கும்பகராசனை எதிர்க்கும் வல்லமை தனக்கு இருக்கிறதா என்பதில் சந்தேகம் வந்தது. நாககன்னியோ அவனுக்கு ஆறுதல் கூறினாள். நீர் போரில் இறந்தால் நானும் உடன்கட்டை ஏறுவேன் என்றாள். தயக்கத்துடன் மயங்கிய வீமராசன் அச்சுதனைச் சென்று பணிந்தான். அச்சுதன், "வீமனே நீ வெற்றிபெறப் போகிறாய். இது உறுதி. மயக்கம் வேண்டாம்" என்றார். வீமன் தன் தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

வீமனின் படைகளும் கும்பகராசனின் படைகளும் நெருங்கிக் கலந்தன. மாறிமாறி ஆயுதங்களைச் செலுத்திக் கொண்டன. வீமனின் தண்டாயுதத்துக்குத் தாக்குப்பிடிக்க முடியாத கும்பகனின் வீரர்கள் திணறினர். கும்பகன் பயந்து ஓட ஆரம்பித்தான். நாராயணர் இருந்த திசை பார்த்து வணங்கிவிட்டு ஓடினான். இவன் ஓடியதும் வீமன் போர்க்களம் விட்டு நாககன்னியின் வீட்டிற்கு வந்தான். வீமனும் நாககன்னியும் மகிழ்வாய் இருக்கும் வேளையில் கன்னி கர்ப்பமடைந்தாள். பத்தாம் மாதத்தில் ஒரு பாலகனைப் பெற்றாள். அவனுக்கு அரவான் எனப் பெயரிட்டனர்.

இது இப்படி இருக்கும்போது மாயக்குறவனின் மனைவி கணவன் உண்பதற்கு கிழங்கு வேண்டி அடர்ந்த கானகத்திற்குள் சென்றாள். அக்குறத்தி அக்கானகத்தில் அஞ்ஞாதவாசம் புரிந்த பாண்டவர்களைக் கண்டாள். கண்ட அளவிலே குருநாட்டு அரசர்கள் என உணர்ந்து அவர்களைப் பணிந்தாள். அவர்களுக்கு நல்ல உணவைச் சமைத்துக் கொடுத்தாள். அவர்களும் மகிழ்வோடு உணவைப் புசித்தனர். பின்னர் அக்காட்டிலிருந்து வெளியேறு வதற்குரிய வழியையும் அவள் காட்டினாள்.

மந்திரவாதியான குறவன், காட்டிற்குச் சென்ற மனைவியைக் காணவில்லையே என்று தேடினான். அவனுக்கு அவள் பேரில் சந்தேகம் வந்தது. அவளுக்கு யாருடனோ தொடர்பு இருக்கிறது என நினைத்தான். அவன் இப்படி நினைத்துக் கொண்டிருக்கும்போது குறத்தி வந்தாள். அவளைப் பார்த்த உடனேயே "அடியே உனக்கு மலையில் கள்ளக்குறவர் தொடர்பு உண்டோ? அவனுக்குக் கிழங்கு கொடுத்தாயோ?" எனக் கேட்டான். குறத்தி அவனிடம் கோபப்பட்டாள். இருவரும் மாறி மாறிச் சண்டையிட்டனர். பின் சமாதானம் அடைந்தனர்.

குறவன் உண்டு களைப்பாறியதும் குறத்தி குறுவை நெல்லை இடித்துச் சமைத்தாள். தேனையும் எடுத்தாள். வெற்றிலை பாக்கை எடுத்தாள். குறவனிடம் வகை வகையாய்க் கிழங்குகளை எடுத்து வருகிறேன் என்றாள். குறவன் அவளுக்கு விடைகொடுத்தான். என்றாலும் அவள் காட்டுவழி சென்றபோது அவள் பின்னே மறைந்து சென்றான். அவள் பாண்டவர்களை அடைந்து உணவு பரிமாறுவதைக் கண்டான். உடனே அங்கிருந்து ஓடிச்சென்றான்.

துரியோதனனிடம், "ஐயன்களே காட்டில் பஞ்சவர் நால்வரைக் கண்டேன். அவர்கள் நலமாயிருக்கிறார்கள்" என்றான்.

குறவன் கூறியதைக் கேட்ட நூற்றுவர்கள் மகிழ்ந்தார்கள். பஞ்சவரை ஒழித்துக்கட்ட சமயம் வாய்த்துவிட்டது என ஆரவாரம் செய்தனர். வீரர்களைக் கூட்டினர். உறுதியான வலைகளை எடுத்துக் கொண்டனர். ஆயுதங்களைக் கட்டிக்கொண்டனர். காட்டிற்குச் சென்றனர். ஆனால் நூற்றுவரின் வருகையை நாராயணர் மூலம் அறிந்த பஞ்சவர்கள் அக்காட்டை விட்டு ஓடிச் சென்றனர். அருச்சுனன் புறாவைப் போல் பறந்து சென்றான். வீமராசன் பன்றியாகப் போனான்.

நூற்றுவர் காட்டில் பஞ்சவரைத் தேடித் தேடி அலுத்துப்போயினர். குறவனைப் பிடித்து அச்சமூட்டினர். விளக்கம் கேட்டனர். குறவன் அவர்கள் இருந்த இடங்களை அடையாளம் காட்டினான். நூற்றுவரும் குறவனை நம்பினர். பஞ்சவரைக் கொல்லும் பொறுப்பைக் குறவனிடம் விட்டனர். குறவனும் அதற்கு இசைந்தான். நூற்றுவர்கள் தங்களின் இடத்திற்கு நிம்மதியாகச் சென்றனர்.

குறவன் அடர்ந்த காட்டில் ஐவரைத் தேடினான். தேடிக் கண்டுபிடித்தான். மறைவாக நின்று அவர்களின் செய்கையைக் கவனித்தான். பின் வீட்டிற்கு வந்தான். தன் ரகசியச்செயலைக் குறத்தி அறிந்தால் தடுத்து விடுவாள் என்பது குறவனுக்குத் தெரியும். அவளை ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்த்த முடிவு செய்தான். அவளுக்கு மாய மருந்தைக் கொடுத்து உறங்க வைத்தான். அவள் அயர்ந்து உறங்கினாள்.

குறவன், குறத்தி உறங்கிய பின்பு பஞ்சவரைக் கொல்ல மருந்துகளைச் சேகரித்தான். பெரிய துடிப்பறையை எடுத்துக் கொண்டான். சாந்து மஞ்சள்பொடியை எடுத்துக்கொண்டான். கமுகம்பூவில் திரியைக் கொளுத்தி வைத்தான். சிவந்த பூவை எடுத்தான். வண்ணார மாடன், கடுவாமூர்த்தி, ஈனகுல மாடன், சுடலைமூர்த்தி போன்ற தெய்வங்களை துணைக்கு அழைத்தான். சிறப்பான ஐந்து பேய்களைச் செப்பிலே அடைத்தான். வன்னி மரத்திலே ஒரு உருவத்தைச் சமைத்தான். அதற்கு மருந்து பூசி பலம்

கொடுத்தான். இவற்றை எல்லாம் எடுத்துக்கொண்டு காட்டுக்குச் சென்றான்.

இந்த மந்திர உருவத்தை ஐவர்கள் தங்கிய இடத்தில் புதைத்தான். அஞ்சு பேரும் அந்த இடத்தைத் தாண்டினால் மாண்டுபோகுமாறு மந்திரத் தகட்டைப் புதைத்தான். பின் குறவன் அங்கிருந்து அகன்று போனான். குந்திதேவி தன் மக்களுக்கு எதிராக ஏவி விடப்பட்ட பேய்களின் கூட்டத்தைக் கண்டாள். ஐயோ நாராயணரே நீரே எம்மைக் காக்க வேண்டும் எனப் புலம்பினாள். மாயவரோ 'பெண்ணே நீ புலம்ப வேண்டாம். பஞ்சவருக்கு ஒன்றும் ஆகாது. இவர்கள் பேயிடமிருந்து மீண்டு வர அருளுண்டு' என்றார்.

இதற்கிடையில் வீட்டிற்குச் சென்ற குறவன் ஆழ்ந்த உறக்கத்திலிருந்த குறத்தியை எழுப்பினான். அவள் குறவனைப் பார்த்து 'என்ன மாயம் செய்து என்னை மயக்கிவிட்டுச் சென்றாய்? நீ என்ன செய்தாய் சொல்' என்றாள். குறவனின் உடலையும் ஆடையையும் கவனித்தாள். சாந்தும் மஞ்சள் பொடியும் அவன் உடலில் ஒட்டியிருப்பதைக் கவனித்தாள். கமுகன்பூவின் மணம் உடலில் கமழ்வதைக் கண்டாள். 'குறவனே உண்மையைச் சொல், நீ எங்கே சென்றிருந்தாய்?' எனக் கேட்டாள்.

குறவன் குறும் சிரிப்புச் சிரித்துக்கொண்டே பாண்டவருக்குச் செய்த செய்வினை பற்றிக் கூறினான். இதைக் கேட்ட தவக்குறத்தி பொறுத்திருந்தாள். அவன் உறங்கிய பின் இரகசியமாகச் சில பொருள்களைத் தன் முந்தியில் முடித்தாள். செப்பு எடுத்துக் கொண்டாள்; அரிய இரத்தினங்களைச் சேகரித்தாள்; அம்புளிமான் கொம்பை எடுத்தாள். மேலும் பல மாயப் பொடிகளை எடுத்துக் கொண்டாள். அடர்ந்த காட்டிற்குச் சென்றாள். ஐவரையும் கண்டாள்.

ஐவரிடமும் குறத்தி பேசினாள். என் கணவன் செய்த செய்வினையை எடுத்து விடுவேன் என்றாள். மஞ்சள் நீரில் அவள் நீராடிவிட்டு அஞ்சனம் பூசிக்கொண்டாள். குமரகுருபரா என்றாள். வெட்டி வேரையும் ராமச்சம் வேரையும் புகைத்தாள். வாடா விளக்கு ஏற்றினாள். பூணூல் அணிந்து சம்மணமிட்டு அமர்ந்தாள்.

மந்திரத்தை உரு ஏற்றினாள். வெள்ளி தகட்டை எடுத்து வைத்தாள். பல தெய்வங்களைப் பெயர் சொல்லி அழைத்தாள்.

குறத்தியின் ஓமத்திற்குப் பலன் கிடைத்தது. பஞ்சவர்களைப் பிடித்திருந்த பேய் விலகியது. பஞ்சவர்கள் குறத்தியைக் கொண்டாடினர். அவளுக்குப் பலவகை அணிகலன்களைப் பரிசாகக் கொடுத்தனர். குறத்தியும் மகிழ்வோடு தன் இடம் சென்றாள்.

## குறிப்புகள்

*(2) குருநாடு - கௌரவர், பாண்டவர்களின் நாடு*

*(a) பஞ்சவர் - பாண்டவர் (10) அரவணை - நெருங்கிய. (20) அமுர்த காண்டம் - மகாபாரதத்தின் ஒரு பகுதி என இக்கதைப் பாடல் குறிப்பிடும் காண்டம். (22) திரியோதரன் - துரியோதரன் (40) பவத்தன் - அந்தணன் ஒருவன். இவனது மகள் மின்னாள். (72) திருவேங்கட மறையோன் - மன்னாளை மணம் செய்த மறையவன். (89) இசல்வாய் - இயல் பாமி. (99) சங்கை - கட்டாயமாக. (114) முங்கி - மூழ்கி. (152) சித்திரகூத்தர் - சித்திர புத்திரர். (184) மச்சகெந்தை - மச்சகந்தி. (197) நாத்தம் - நாற்றம். (204) இரு - இருப்பாய். (211) சாம்பான் - ஓடம். (241) பரராச முனிவருக்கும் மச்சகந்திக்கும் பிறந்தவர் வியாசர். (253) வேதவியாகரர் - வேத வியாசர். (282) சந்தன மகாராஜன் - சந்தனு மன்னன். (294) இசம்பு - இயம்பு. (341) காங்கையார் - கங்கையின் புதல்வர் பீஷ்மர். (366-367) மச்ச கெந்தியின் புத்திரர்கள் - சித்தன், சித்திரகூத்தன், சித்தினன். (438) விருதன் - விருதாச்சாரி. (472) வெயி◌ாள் - மாத்திரி (பாண்டுவின் இரண்டாம் மனைவி). (501) அஞ்சி - ஐந்து. (566) மெய்நோவு - பிரசவ வேதனை. (576) பிலம் - பலம். (581) பிண்டம் - கழுத்து. (602) இருளி - மலடி. (801) சிணம் - சீக்கிரம். (802) ஓந்தில் - ஓணான். (903) குறுணி - ஒருவகை முகத்தலளவு 10.7 லிட்டர்; (950) உசத்தி - உயர்த்தி. (1027) பறையும் - கூறும். (1037) கிடங்கு - குழி. (1056) சாளுவன் - நாயின் பெயர். (1074) நாராயம் - ஊசி முனை. (1077) தடுக்கு - தரையில் அமர்வதற்கு விரிக்கப்படும் ஓலைப்பாய்.*

*(1137) தொங்கல் வழி - வளைந்த வழி. (1200) மூற்கண் பாம்பு - மிக கோபமும் விஷமும் உள்ள பாம்பு. (1389) நகண்டு - சரிந்து (1517) கிடாரம் - பெரிய செம்பு. (1550) - ஆழாக்கு - ஒருவகை முகத்தலளவு 1/8 என்ற அளவு. (1551) நாவுரி - நான்கு உரி; ஒரு வகை முகத்தலளவு; அரை நாழி. (1553) கடுவா - கரடி; (1555) முன்னாழி - மூன்று நாழி; ஒருவகை அளவு; கால்படி; 2 உழக்கு. (1565) விரய - வேகமாக. (1566) எண்ணெய் காப்பு - எண்ணெய் தேய்த்தல். (1602) சிங்கன் - ஒருவகை வாழை. (1615) கடவு - சிறிய குளம். (1622) - தட்டான் - ஒருவகை பூச்சி. (1651) நீராளி - நீராடுவதற்குரிய குளம். (1654) பாசி - நீரில் படிந்திருக்கும் சிறிய நீர்ச்செடி. (1682) - தளுகை - பாத்திரம்; மரத்தால் ஆனது. (1782) அடைக்காய் - வெற்றிலை. (1788) சூதானம் - கொல்லுதற்குரிய மருந்து. (1794) பொசித்தல் - உண்ணுதல். (1809) பூமாலை - துரியோதனனின் தாசி. (1914) பருவட்டம் - மிகச்சிறிய துண்டு. (1915) மச்சாவி - மைத்துனர்.*

*(2011) திவட்டுக்காரன் - தீவெட்டி வகைக்கு உதவாதவன். (2013) திலித்தல் - சேகரித்தல். (2018) வீறுதே - வீணாக. (2040) ஓட்டன் - தூதன் செய்தி சொல்லுபவன். (2043-69) ஓட்டன் செல்லும் வழிகள். இது பிறகதைப் பாடல்களைப் போன்ற அமைப்பு. (2073) ஒளிந்து - மறைந்து. (2121) பஞ்சாரை - சீனி. (2202) அமிர்தம் - உண்மை. (2204) நீட்டு - மடல். (2313) அணக்கு - காலதாமதம். (2562) வஞ்சி - பெட்டி. (2582) முகித்தல் - முடித்தல். (2584) மாந்ததையர் - நுட்பமான வேலைகளைச் செய்பவர். (2587) சடுதியில் - வேகமாக. (2606) சவடி - கழுத்தில் அணியும் ஆபரணம்; திலாதம் - திலகம். (2600) கெச்சம் வளை. (2718) கும்பகராசன் - நாக அரசன்.*

*(2713) அட்டமங்கலம் - 12 ராசிகளை எழுதுவதற்குரிய எட்டு திக்கு வரிகள். (2760) டம்மானம் - பெரிய தோலிசைக்கருவி. (2773) மச்சாவி - அத்தான். (2785) ஆளி - யாளி. (2836) கோவில்கள் - அரண்மனை. (2856) வளமை - பெருமை. (2929) எனி - இனிமேல். (2941) இசம்பு - மறுபடியும். (3015) வீரவாளிப்பட்டு; பட்டு வகை. (3056) உசிப்பு - அசைவு. (3057) அசந்த - உயிரற்ற. (3064) நீட்டு - கடிதம். (3070) தாடாளன் - மிகப்பெரிய. (3100) தாழ்ச்சை - தாமதம்.*

(3114) வல்லாத - கெடுதலான. (3115) மாச்சல் - துன்பம். (3164) விஷகாரி - விஷம் இறக்குபவர். (3668) பதக்கன் - ஒரு கழுத்து ஆபரணம். (3742) சடுதி - விரைவு. (3835) பறைந்த - கூறிய. (3921) சேட்டம் - எஞ்சிய. (4052) தாள்சை - கீழான.

(4269) பிலம் - பலம். (4285) மலக்கம் - மயக்கம். (4304) கோப்பு - பதில். (4689) வெலிகருமம் - இறப்புச் சடங்கு. (4742) அரவான் - பீமனுக்கும் நாககன்னிகைக்கும் பிறந்த மகன். (4884) குறுவை - ஒருவகை நெல். (4924) ஆச்சி - ஆய்ச்சி. (5177) களவு - பொய். (5225) மருந்து வாழ்மலை - கன்னியாகுமரி அருகே உள்ள மலை.

# குருகுல மக்கள் கதை

1 சீரார் குருநாடு
செல்வம் பெருகும் குருநாடு
காரார் குருநாடு மழை
காலூன்றி பெய்யும் குருநாடு
தாரார் குருநாடு
தர்மம் தழைக்கும் குருநாடு
பாரார் குருநாடு
பஞ்சவர் வாழும் குருநாடு
அந்தக் குருநாட்டில்
10 அரவணையிடருகள் வாராமல்
விந்தை யுடைய தருமர்
மெய்ப்பான தம்பிமார் நால்வரும் வேதம் மறையாமல்
மனு நீதி வளமை தவறாமல் இருக்கும் குருநாட்டில்
துரியோதிரன் என்ற மன்னவனு விந்தையால் சூதாடி
வெய்யதோர் கானகம் தான் சென்று அந்த வனவாசம்
ஆறிரெண்டு வருஷம் இருந்து
வந்து உலகாண்டு வைகுண்டம்
சேர்ந்தாரே பஞ்சவர்கள் என்று முனிஉரைக்க
ஏற்ற மகாமேற்பு ஆனதிலே அன்று எழுதி வைத்த
20 ஐவர் கதை தனில் அமுர்த காண்டம்

## கடவுள் வாழ்த்து

அந்த சுவடி தான் பார்த்து
அடியேன் பகுந்துரைத்தேன்
புத்தியுள்ள பஞ்சவரை
மன்னன் திரியோதிரனும்
சக்தியுடன் செய்த வினை
தன்னழகும் நின்ற கதை

சீர்கொண்ட செங்கைமலர்
இருக்கும் திருமாலும்
தார்கொன்றை மாலையணி
30 சங்கரரும் வந்துதவாய்

## நாட்டுவளப்பம்

பூ மாது பொன் புவி மாது
போர் மாது நாமாது
நல் மாது சிறந்திலங்கும்
நன்றியுள்ள வளர்நாடு
ஆடரங்கும் மாளிகையும்
அலங்கார மேடைகளும்
கூடிமோடு கோபுரமும்
கூண்ட உப்பரிகைகளும்

## மறையவர் பெண் மாலை

40 ஆடல் மறை நால் வேதம்
அருள் மறையோன் வம்முசத்தில்
வேண்டும் பவத்தன் தன்மனையாள்
விளங்கும் விந்தை தன் வயிற்றில் வந்துதித்த செம்பகள
வாள் கருணை என்ற மின்னாள் செந்தாமரை முகத்தாள்
தெய்வு பிறை போல் நுதலாள் பண்ணார் மொழியழகாள்
பவள நுதல் வாயழகாள் விண்ணோர் அரம்பையிலும்
வேண்டும் வடிவுடையாள் காவிலிளம் மடந்தை
போலுதித்த பொற்பாவை பாவை பிறந்த பலன்
பார்மறையோன் என்றதினால் மேவுலகில் முத்தமிழை
முறைப்படியே கற்றதினால் வரும் கருணை என்ற

## சோதிடன் கூற்று

50 மின்னாளை மாலையிட்ட மணவாளன் ஐயட்டொரு நாளில்
அவன் இறப்பான் தப்பாதுமன்றில் இளமானை
மாலையிட்டார் நொடிப்பொழுதில் போர்த்தபின்பு சோதிரியும்
பூவுலகில் சீர்த்திய தாய் ஆன படிக்காக வல்லோ
அவள் மணம் செய்யாமல் மாலை என்ற கண்ணாளுக்கு
வயது பதினாறாச்சு அன்பான பர்தாவே

அல்லாமல் ஆயிழையாள் இன்பமுள்ள பெண்கொடியாள்
இருந்தாளே குமராக இருந்தாளே சிலகாலம்
இயல் மறையோன் வம்சத்தில் செந்தாமரை முகத்தாள்

## மாலை மறையவனைக் காணுதல்

தேனரைக் கண்டனளே கொண்டாள் மனத்துயரம்
60 கோல மதன பூசலை போல வண்டாட சிலை ஏற்றி
மனதஞ்சி கணை தொடுத்தாள் தொட்ட கணை பட்டுருவி
துயர முற்று மாமுனியும் இட்ட தலையின் விதிதான்

## மறைவன் மணம் செய்தல்

இன்றே முகித்தாலும் தொட்டு மணம் செய்வேன்
என தோன்றியே உடனே மாலையிட்டு மறையோனும்
வாழ்ந்திருந்த நாளிதிலே வேலை வென்ற கண்ணாளும்
மிக்காக மணவாளனுமாய் இருந்து ஒரு திங்கள்
இனிதாக சென்றதிற்பின் வருந்தவே யவனுச்சித்தன்
மாளவிதி வந்ததுவே வந்தப் பொழுதே
அந்த வடகெங்கையை நோக்க அந்த மடவாள் தனக்கு
70 அறிவித்து ஏகலுற்றான் ஏகும்மறையோனுடனே
ஏந்திழையும் பின்தொடர்ந்த மன்று கரத்தில் இருந்து
மங்கையர்மேல் ஆசையுற்று திரு வெங்கடமறையோன்
சென்றான் அவன் பிறகே வரும் நேரம் கண்டு
அந்த மறையோனும் ஏது சொல்வான்
நாமள் இருபேரும் போற நேரம்
நம்மோடவர் வரத் தகுதியல்ல அங்கனக மார்பா எந்தனக்கு
அருளும் என்றாள் மாமறையோன் இட்ட தலையின் விதி
பலத்தான்
இன்றே முகித்தாலும் தொட்டு இவளை மணம் செய்வேன்
நான் என்று தோன்றியே செய்தனாம் மாலையிட்டு மறையோனும்
வாழ்ந்திருக்கும் நாளதிலே வேலை வென்ற கண்ணாளும்

## இருவரும் மகிழ்வுடன் இருத்தல்

80 மிகவே மனம் மகிழ்ந்து இருந்து ஒரு திங்கள்
இனிதாகச் சென்றதிற்பின் ஏகு மறையோனுடனே
ஏந்திழையும் பின் துடர்ந்தாள் போறது கண்டிருந்தான்

புயனூரில் பாப்பானும் திருவெங்கடமறையோன்
சென்றான் அவள் பிறகே வரும் நேரம் கண்டு
அந்த மறையோனும் ஏது செல்வான் நாங்கள் இருபேரும்
போற நேரம் நம்மோடவர் வரத்தகுதியில்லை
அங்கனக மார்பா அருளும் என்றான்
இசல் வாய் திருவெங்கட மறையோன்
மன்றவணி தன் புயனே மன்னா
90 ஒன்று சொல்ல கேளாய் பொன்னழகனை தான்பார்த்து
போற்றினாள் போற்றிவிட்டு இம்மடந்தைக் காகவல்லோ நான்
இத்தூரம் வந்தேன் என்றான் சொன்ன மறையோன் தனையும்
துயரமுடன் நோக்கியபின் அன்னவன் தான் ஒரு வார்த்தை
அருளிடுவார் அப்போது மாது நல்லாள் கருணை தன்னை
வணிகத்தன் நோக்கி சொல்வாள் செய்தி இது கண்ட
பெண் கொடியே தேன் மொழியே நீ கேட்டருள்வாய்

## நாற்பதாம் நாள்

நாற்பத்தொன்றாம் நாளல்லவோ
நமக்கிறுதி வந்து கண்டாய் பார்ப்பதுடன்அங்கமதை
பார்மறையோனும் நீயுமாக சங்கையுடன் இருபேரும் போய்
100 தப்பாமல் கெங்கை தனில் போட்டு அங்கையினால் இருபேரும்
அதில் வாரி சடங்கு செய்து பார்த்தா இவராக கண்டல்லவோ
பைந்தொடி நீயும் இருவருமாக உற்றபதியாக
உறப்பனமாக வாழும் என்றார்
அவ்வார்த்தை கேட்ட போது
அரிவையரும் ஏதுரைத்தாள் ஒவ்வென் நான் என்றுரைத்தாள்
உயர் மறையோன் வம்முசத்தில் செவ்வோ நீர் என்றாள்
திரு மடந்தை நல்விழி சேர் மானே
நம்மைநம்பி வந்தால் ஆவதுண்டோ என்றவர்கள் தங்களிலே
இணங்காமல் வேறுபட்டு கன்னியவர் மிக நடந்து

## கங்கையை அடைந்தனர்

110 கங்கையாற்றில் போயடைந்தார் போற்றினான் மா மறையோன்
பூதலத்தில் அப்பொழுது காதலுடனவன் கருணை
கருணை மிக வணிகத்தானும் ஏது செய்வோம் நாமள் என்று
இருபேரும் நின்றழுதுமுன் செய்த தீவினையால்

முங்கி சடங்கறுத்து யெரியடக்கிய நீர் வாரி
எடுத்தார் இயல்பாக உடன் எடுத்து தான்
கொடுபோய் உரிமையுடனத்தி
தன்னை கெங்கை தனில் தான் போட்டு
கிட்டியானம் செய்தனராம் அங்கமல மாதுடனே
அறிவித்தான் பாப்பானும் மானே நான் புகலுகிறேன்
120 வாரும் என்றான் மாமறையோன் தேனரும் மிகச் சினத்து
சிந்தித்தான் தேன் மொழியாள் வரைத்தடம் சேர் மானார்க்கு
மறையோனும் துயரமுற்று ரெத்தின மணி மார்பனான்
ஏழ்பிறப்பும் தங்கை என்றானாள்
கெங்கையே நீ சாட்சி சொல்லவேனும்

## இருவரும் வானுலகம் அடைதல்

முங்கினாள் கன்னி
முத்தியுள்ள மாமறையோன் கெங்கையே நீ சாட்சி
கிளி மொழியாள் எந்தனக்கு எங்கே இருந்தாலும்
ஏழு பிறப்பும் பாரி என்றான் முங்கினான் கன்னியுடன்
முற்றியுள்ள பாப்பானும் நீங்காத மறையோனும்
130 நேரிழையாள் தன்னுயிரும்
பாங்காகக் கெங்கைதனில்
பயிந்தொடியும் பாப்பானும்

## சித்திரபுத்திரர் கணக்கு

ஒக்க வேதங்கள் உயர் வானில் போக
உடையவன் தன்னிடத்தில் வரவழைத்து
சிக்கனமாகவே சித்திரன் புத்திரன் தன்னை
தெய்வ கணத்தை பிரித்து
செப்பும் என்றார் அரனார்
தேசம் புகழ் பெற்ற
கணக்கை வாசித்துப் பார்ப்பளவில்
140 வண்டணி குழலாள் மானார்
தனக்கு மறையோனும் ஆசை கொண்டு
கொண்ட துயரம் கொடுந்துயரமாக
கோதை தனையும் எத்திசையும் புகழ்மானார் சினத்து
ஏழு பிறப்பும் உனக்கு தங்கை உனக்கு

நான் யெழு பிறப்பென்று தைதலர் மடிந்தவும்
மங்கை மடிய மறையோனும்
பார்த்து யெழு பிறப்புக்கும் பாரி என்றான்
இவ்வசனம் சொல்லி இவர்கள்
இருபேரும் கூடி இறந்ததன்பின் ஏங்கி
150 இவர்கள் மறையோனுயிரும்
ஏந்திழை தன்னுயிரும் இருபேரும் தங்கைமாய்
ஒன்றாய் செப்பின வார்த்தைகளும் மருவெறும் சித்திர கூத்தர்
மன மகிழ்ந்து வருப்போம் பிறவி என்றார் தங்கையும் தாரமும்
ஒன்றாய்
பிறவிதானேதுசெப்பு மென்றார் திருமால் துயில்கின்ற பாற்கடலில்
நிற்கும் சிறந்த குளலி மரம் வாரியில் நிற்கும் குளலி மரத்தில்
வாழ்கிற அன்னத்தின் தன் வயிற்றில் வண்மையுடனே வகுப்போம்
இவர்களை வாய்த்த பிறவி என்றார் அக்குளலி மரம் மீதிருந்து
அன்ன மிரண்டும் வாழ்ந்திருக்க

## தங்கையும் தாரமுமாய்

மைக்குழலாள் கண்ணாளும் மறையோனும் ஓர் பிறப்பாய்
160 தங்கையாய் தாரமுமாய் தார் மறையோன் சேவலுமாய்
அங்கு அன்னமாகவே தான் அருளினார் ஈஸ்பரனார்
அன்னத்தின் தன் வயிற்றில் அருமையுடன் மாமறையோன்
சொன்ன மொழி தப்பாமல் தோன்றினார் இருபேரும்
அன்னத்தின் தன் வயிற்றில் அதிக முட்டை உண்டாக
முட்டை இட்டஇடமதிலேமறையோனும் திருவும்
இட்ட விதிப்படியால் இருவர்களாண்டு குஞ்சியதாய்
கட்டுடனே வாழ்ந்து கடும் சேவல் போகுமதாய்
அன்னயிடம் வைத்ததொரு அரனுடைய அருளாலே
பிரிந்து மந்தசேவலுடன் பேரு பிரியாமல்
170 பாற்கடலிலே யுதித்த கருங்குழி மீதிருந்து
ஆக்க முடனே சேவல் அருபேடுடன் தாவ
ஆர்கரித்து வெக்கமுற்று அன்னம் பிறக்களித்து
கொந்தளித்து யிந்திரியம் கெங்கைதன்னில் விழுந்திடவே

விழுந்தது கண்டு மகரம்
மீன்விழுங்க கெர்ப்பமுற்று தாழ்த்தமுது கடலில்
சமுத்திரம் எல்லாம் மதிர சூல்வளரஅம்மகரம்
தோற்றமுடனே திரிந்து கரை சேர்ந்தம் மகரம்
கடுக அலவாக் கரையில் மால்வழுந்த மகரம்
மதலை ரெண்டாய் ஈன்றதுவே ஈன்ற செல்வமதலை
180 தன்னையினப்புருகபாராமல் போனதர்ப்பின் ஈன்றநல்ல
புதல்வரலை மேல் கதற பெண்ணும் ஒரு ஆணுமாக
பிறந்தலை மேல்கதற வலிமை மிகு கடல் பரதர்
இனிமையுடன் கண்டெடுத்து மச்சத்தின் வயிற்றில் பிறந்த
மாதை வளர்ப்போமென்று மச்சகெந்தை என்று பேருமிட்டு
வளத்தாரே கடல் பரதர் மகாத்தின் வயற்றிலுதித்த
வாய்த்ததொரு புத்திரியை சாகாதுடன் கொடுபோய்
தான் வளர்த்தார் கடல் பரதர் ஏந்தினையாள் மச்ச கெந்தை
யென்னும் இளமயிலாள் கூந்தல் இளம் தோகை
கூன்பிறைபோல் நுதலாள் விப்புருவம் ஒப்புநடை
190 வேல் விழியாள் மங்கை நல்லாள் சந்திர கோலாகலம் போல்
சமைந்த மதிமுகத்தாள் மந்திர மாணிக்கம்போல்
வடிவழகாம் இருதனங்கள் சாதி இரு கொட்ட முத்து
தழுத்த நல்ல தனமும் ஒண்டாம் இந்திரலோகத்திலுள்ள
இயலான அரம்பையைபோல் சூசகமாம் கைகள் ரெண்டும்
துடிபோல் நல்லிடையழகாம் பாட்கமாம்காலுரண்டும்
பசுந்தாமரைபோல் குறங்காம் கச்சணிந்த பூங்குழலாள்
கண்ணியுடகமலமுகம் மச்சம் என்ற நாத்தமது
மணம் செய்யும் லோகம் எல்லாம் நாற்றமது கண்டல்லவே
நன்றான் தாதியார்கள் ஏற்றமுள்ள பூவுலகில்
200 எப்போதும் இங்கிருந்து மைக்கடரும்பூங்கூந்தல்
மயிலே நீ வந்தாயோ முக்காத வீதியுள்ள
முகந்த போராறதிலே ஓடமது விட்டல்லவே
ஒண்ணுதலே நீயிருப்பாய் இக்கடலை நீ கடத்தி
இருவுமென்றார் ஏந்தினையே அப்படியே வந்தோரை
ஆயிழையாள் தான் கடத்தி இப்படியே மச்சகெந்தை
இருக்குமந்தநாளையிலே சுத்தமுள்ளமாமுனிவன்

துவா பரயுகத்தினிலே பத்தி முத்தி வித்தை
உள்ள பர ராசமாமுனிவன் சேவேறும் ஈஸ்பரனார்
திருவடிவைகாணவென்று காவேறும் தேசமந்த
210 கரையில் வந்தார் மாமுனிவர் வம்பன் கடலருகே
மச்ச கெந்தையான மின்னாள்சாம்பானில் ஏடமட்டு
தைத நல்லாள் தானிருநதாள் பன்னு தமிழ்வேதமுறை
பராசமாமுனிவன் மின்னே நீகடல் கடத்தி
விட்டு விட வேணுமென்றார் சாந்தணியும் மாமுனியை
தைதநல்லாளும் வணங்கி ஆயிரம்பேர் ஒரு தலைக்கி
அடியாள் நான் ஒரு தலைக்கி வந்ததுண்டால் ஓடமது
மாமுனியே விடுவேனென்றாள் சாந்தமுள்ள மாமுனிவர்
நான் இருப்பேனென்றார் அப்படியே இருப்பிரால்
அண்ணலே வாருமென்றாள் யேந்திழையாள் சாம்பானில்
220 ஏற்றியவள் கொடுபோனாள் காமருவும் கைதலத்தான்
கடலோடே போகையிலே மாமுனிக்கு நல்முகிர்த்தம்
வந்ததுவே அன்னேரம் அய்யய்யோ என்னிலைதான்
ஆறோடே போகுதல்லோ வள்ளமுள்ள மாமுனியே
வரலாறு சொல்லுமென்றார்

## பராசனும் மச்சகெந்தியும் புணருதல்

பன்னிரண்டு வருசம்
சென்றல் பாவையரே இம்முகூர்த்தம்
மங்கையரே வருமெனவே
மாமுனியும் தானுரைக்க மாமுனியே நான் தானும்
மச்சகெந்தை என்றுரைத்தல் நண்ணுதலே இப்போது
230 நல்முகூர்த்தம் வந்து தென்றார் இந்தமுகூர்த்தம் தவிர்க்க
இன்னேரம் தன்னிலொரு மைந்தன் பிறந்தானால்
மகா சமர்த்தனாய் இருப்பான் தேன்மருவும்குழலாளே
சேயிழையே நாமும் இப்போ மாமயிலே நாம்புணர
வாரு மென்றார் மாமுனியும் மாமுனிவன் சொல்கேட்டு
மச்சகெந்தை ஏது சொல்வாள் நல்முனியே என்னுடல்தான்
நால் காதம் நாறும் என்றாள் துச்சணங்கள் ஆனதெல்லாம்
துரத்தியந்த மாமுனிவன் நல்கெந்தமாக்கியல்லே நன்
நுதிலைதான் புணர்ந்தார் பாதிமதி சூடும்பரமன்

## வியாசர் பிறப்பு

240 அருள்போற்றவென்று
மேதினியோர் கொண்டாட
வேதவியாசர் வந்தே பிறந்தார் பரராச மாமுனியும்
பைந் தொடியை விட்டகன்று வரைசேரும் ஈஸ்பரனார்
மணிவாசல் போய் சேர்ந்தார் மாமுனிவன் போனதன்பின்
மச்சகெந்தை புத்திரன்தான் எனைபயின்ற தாயாரே
என்னுடைய தந்தை எங்கே உன்னுடையதந்தையார்
தான் உற்றரனார் தன்னிடத்தில் என்னுடைய புத்திரனே
ஏகிவிட்டாரென்னைவிட்டு மாதுநல்லாள்இது உரைக்க
மாமுனிவன்புத்திரன்தான் தந்தையுடன்தான்
தான்போறேன் என்று சொல்லி மச்சகெந்தை தாம் அப்போ
250 மகனே எனக்கிஇங்கொரு மீதாத உன்தனக்கு
மெலிவான காலம் தன்னில் இடயூறு வந்ததுண்டால்
எனை பயின்றமாதாவே மாதாவே நானும்
எப்போ வருவேனான் உன்னிடத்தில் வேதவியாகரரும்
மிக்க பரராச மாமுனியும் திருவாரும் ஈஸ்பரரை
தெண்டனிட்டு தொழுது நின்றார் பன்னாரும் யீஸ்பரரை
பாரமுனியே உந்தனக்கு பெண்ணாசை இல்லைஎன்றால்
பிள்ளை வந்தவாறேது சாத்திரங்கள் வேதமுறை
தலைகெட்டு போகாமல் விந்தையில் பூலோகம்
மெய்யாகவேணுமென்று வெளியாக வேணுமென்று
260 விசாகமுனிதிதானும் வந்தரன்காண சகலகலை
வல்லவன்காண் யீஸ்பரரே சாஸ்திர வேதங்கள்
தன்னையங்கேவே அருளும் யென்றிரு காலமுன் பிறப்பும்
ஏழுபிறப்பும் தன் தகப்பன் வரைப் பிறப்பும் நீயுரையாய்
மாமுனியே என்றுரைத்தார் அப்போது வியாசமுனி
அருள்முனிவன் தன்பிறப்பும் வையகங்கள் பதினாலும்
மன்றிலுள்ள நீதிகளும் மூன்று காலத்திலுள்ள
முறைமைகளும் தானுரைத்து என்று மிக வேதமதை
எடுத்து மிகவே கோர்த்து தாது பயில் பஞ்சவரும்
270 மேல் பிறக்க நூற்றுபேரும் மேதினியில் ஈஸ்வரனார்
மேல்பிறக்க போருர்காண் தேன் மருவும் நூற்றுவார்கள்
சேனைகடல் தட்டழிய வீமன் தேரோடும் என்று

வியாசமுனி தானுரைத்தார் ஆதிபரனாரும் அப்போது
அக மகிழ்ந்து கொண்டாடி வேத வியாசர் தனையும்
மிக மகிழ்ந்து கொண்டாடி சங்கையுடன் ஈஸ்பரனார்
வினாயகரை தானழைத்து வேதாவையும் அழைத்து
வேதமுனி சொற்படியே தாதா மகா மேருவில்
தானே எழுதுமென்றார் வேதமுனி சொற்படியே
வினாயகனார் கொம்பொடித்து தாது பயில் நூற்றுவர்கள்
தன் படை தோப்பாரென்றும் தேன் மருவும் போர் விஜயன்
280 தேரேடும் என்று சொல்லி மகாமேரு தன்னில்
எழுதி வைத்தார் வினாயகனாரும்
சந்தன மகாராஜன்வேண்டுகோள்அப்போது
தார்வேந்தன்இந்திரன் வந்து கண்டு இந்திரனை
தெண்டனிட்டங்கேது சொல்வார்
அன்று மைந்தன் வென்ற தொரு
அசுரவர் தம்மை எல்லாம் கொன்று போட அல்லோ
விடைதாரும் என்றுரைத்தார்
சந்தன மகாராஜனையும்
தான் மகிழ்ந்து கொண்டாடி இந்திரனார்அப்போது
290 ஏவினதோர் நேரத்திலே சந்தன மகாராசனுட
தானசுரர் சேனை எல்லாம் சிந்திவிள கொண்டு செப்பி
தேவேந்திரனுக் குரைத்தார் தாதுபையில் இந்திரனார்
சந்தன மகாராஜனுடன் ஏதுனக்கு வேணும் என்று
இசமபும் என்றார் இந்திரனும் மங்கை இந்திராணி
மன்னவரே மகராஜா எந்தனக்கு
கெங்கைதன்னை ஈன்றெனக்கு
கைப்பிடித்து தாரும் என்றார் காவலவன் சொல்கேட்டு
கங்கையும் அங்கேது சொல்வாள் தெய்வலோகம் தனில்
இருந்து தேவர்தனை தொழுது பூவுலகில் மன்னவர்க்கு
300 பொருந்தே நான் என்றுரைத்தான் மிகவரனும் தான் முனிந்து
தாதுபயில் ஈஸ்வரனார் தாதுபயில் ஈஸ்வரனார்
சங்கரனார் ஏது சொல்வார் விந்தை பயில் ஈஸ்வரனார்
வினாயகரை தானழைத்து வேதாவையும் அழைத்து
வேத முனி சொல்படியே தாதா மகா மேருதனில்
தானே எழுது மென்றார் வேதமுனி சொற்படியே
வினாயகனார் கொம்பொடித்து மாவல்லவன் இந்திரனார்

மைந்தோனோடே ஏது சொல்வார் கட்டுபட வேணுமென்று
காவலவர் என்றுரைத்தார் கட்டுப்படுவே நானும்
காவலவர் மன்னனுக்கு மட்டுறையும் பூவுலகில்
310 வார்த்தையொன்று கேட்பாராம் இட்டமில்லாமல் வாளாது
இருப்பேன்அவருடனே தட்டு விட்டாராமாகில்
தான் வருவேனே அங்கே என்ன சந்தன மகாராஜன்
அப்போது தார் வேறு குழலாள் சொற்கேட்டு
இந்த வண்ணம் வாழ்வோமென்ன
என்று சொல்லவே கேட்டு
சங்கவையில் இந்திரனார்
சந்தன மகாராசனுக்கு
கங்கை தன்னை இந்திரனார்
கைப்பிடித்து தான் கொடுத்தார்
சந்தன மகாராஜனும்
320 தார்குழலாள் கங்கையுமாங்
இந்திரன் போல் வாழ்ந்து

## காங்கையர் பிறப்பு

இருந்தார்கள் இருபேரும் சங்கையுள்ள தன் புயத்தான்
சந்தண மகாராஜனுக்கு கங்கையொரு புத்திரரை
கைமேலே பெற்றெடுத்தாள் மல்லமரும் பூங்குழலாள்
மைந்தன் பிறந்ததற்பின் பொல்லாது எந்தனக்கு
புதல்வரே என்றுரைத்தல் எட்டு புத்திரன் தனையும்
இப்போது காடு தன்னில் திட்டன எட்டு திசை தனிலும்
சேயிழையே போடும் என்றார் காவேரும் பூங்குழலாள்
கங்கையுட சொல்கேட்டு பூவேந்தன் புத்திரை
330 போட்டு வந்தான் மன்னவனும் தாதுரையும் புத்திரை
தான் போட்டு வந்ததற்பின் காரிகையாள் கங்கை என்று
காங்கையரை பெற்றெடுத்தாள் சந்தண மகாராஜனுடன்
தார்குழலாள் கங்கை சொல்வாள்இந்த புதல்வன் தனையும்
இப்போது கானகத்தில் புத்தியுள்ள மன்னவனே
போட்டு விட்டு வாரும் என்றாள்இந்த புதல்வனை
ஏந்திழையே போடேன் என்றான்
என் வார்த்தை கேட்டில்லையோ என்றே
அந்தக் கங்கையும் பின் வாய்த்த கங்கையவள்

விண்ணுலகில் போனாள் காரிகையாள் போனதற்பின்
காங்கையரையும் வளர்த்து தாரணியும் தென்புயத்தான்
340 தாரணியை ஆண்டிருந்தான்

## மச்சகந்தியைப் பெண் கேட்டல்

அப்போது காங்கையனார்
ஆனதொரு காங்கையர்க்கு மையமரும்கண்ணாள்
மச்சகெந்தை தன்னை கட்டிகொடுக்க வென்று
காங்கையனார் தான் நினைத்து திட்டெனவே பெண் கேட்டு
சென்றாரே அப்பொழுது மச்சகெந்தை தன்னை
என்று வளர்த்த அந்தமன்னவர்கள் மைசெரியும் காங்கையரே
வந்ததுஏன் சொல்லுமென்றார் வந்தது ஏன் சொல்லு மென்ற
வார்த்தை ஒன்று தான் கேட்டு வந்தது தான் கேட்டருள்வீர்
மச்சகெந்தை தன்னை எங்கள் சந்தண மகாராஜனுக்கு
350 தரவேணும் என்றுரைத்தார் வந்தீரே காங்கையரே
மச்சகெந்தை தன்னை என்று தையலவள் வயற்றில் தானே
மூன்று பேர் பிறப்பார் நற்றமிழ் சேர் பூவுலகை
நன்றுதலாள் புத்திரர்க்கு கொற்றவரே நாடு இவர்க்கு
கொடுக்கவும் நீர் மாட்டீரே

## காங்கையர் சபதம்

எண்ணார் புரம் எரித்த
ஈஸ்வரனார் தம்மாணை மண்ணாசை பெண்ணாசை
இரண்டையுமே விட்டேன் காண் மச்சகெந்தை புத்திரரை
வைப்பேன் அரசாள நிச்சயந்தான் என்றுரைத்தார்
நீதியுள்ள காங்கையரும்

## மச்சகெந்தையின் மணம்

360 தாராரும் காங்கையர்க்கும்
சந்தண மகாராஜனுக்கும் நாருலாவும் நல்மடவாள்
மச்சகெந்தைதன்னை என்று கட்டியே தான் கொடுத்து
கல்யாணம் செய்தனராம் செங்கோல் தழைத்தோங்க
தேசமிகு ஆண்டிருந்தார் மற்று நிகரொவ்வாத
மச்சகெந்தை தன் வயிற்றில்

## மூன்று புதல்வர்கள்

சித்தனுக்கு சித்தெனென்றும்
திறல் வீரன் சித்தனையும் புத்திரரை பெற்றெடுத்தான்
புரிகுழலாள்மச்சகெந்தை வாருலாவும் மென்முலையாள்
மச்சகெந்தை புத்திரர்க்கு தாராரும் காங்கையாரும்
370 சந்தன மகாராசனுக்கு மறுநிகர்ஒவ்வாத
வலுவேந்தன் தான் மகிழ்ந்து பெற்றமன்னர் மக்களுக்கு
பெண் பேசிமூபேரும் மூவுலகில் முத்தமிழை
முறைப்படியே கற்றவர்க்கு கட்டிக் கொடுத்து
மிக கலியாணம் செய்தனராம் மட்டுரையும்
பூவுலகில் வாழ்ந்திருந்த மன்னவரும் வன்ன மிகு பூங்குழலாள்
மாதுநல்லாள் மச்ச கெந்தை மச்சகெந்தைதனை வளர்த்த
மன்னவர்க்கு உதவியதாய் உற்சினமாய் மூபேரும்
உதவி படை சென்றிடத்தில்

## மூவரும் மடிதல்

சந்தண மகாராசனுட தன்மக்கள் மூபேரும்
380 படைபொருத படுகளத்தில் பட்டுவிட்டார்
மூபேரும் இந்தவகை மன்னவர்கள் இறந்து விட்டார்
படையில் அன்றுமூவர் தேவி மாரும்
ஐயையே என்றமுது வென்றியுள்ள பேர் தனையும்
மிக்க தம்பிமார்களையும்கொன்ற மன்னர் தன்னை
எல்லாம் கொன்றவர்கள் சினம் தீர்த்து வென்றியுள்ள பூவுலகில்
மீண்டும் வந்து தானிருந்தார் தேவரும் காங்கையரும்
திறல் ராசாரானவரும் இசல்சேர் குழல் மடவாள்
ஏந்திழையும் அப்பொழுது தந்தையர்க்கும் தம்பியர்க்கும்
தான தர்மம் செய்தனராம் காரிகையாள் மச்சகெந்தை
390 காங்கையரும் ஏது சொல்வார் பூவுலகை யாண்டருளும்
பெண்கொடியே என்றுரைத்தார் தாராரும்
பூவுலகை தானாள தாயாரே மாதாவே நான் தானும்
மண்ணாசை விட்டேன்காண் மன்னர் சீறி விடுவதற்கும்
மச்சகெந்தை ஏது சொல்வாள்

## வியாசரை அழைத்தல்

என்னுடைய மைந்தனவன்
இயல்வேத மாமுனிவன் இன்னும் ஒரு புதல்வன்
இருக்கிறான் கண்டீரோ என்றுரையை தான் கேட்டு
ஏந்திழையாள் தாயாரும் நன்றியுடன் அவர் தனையும்
நண்ணுதலே அழையும் என்றார் விந்தையிலும்
மச்சகெந்தை வேதவியாசரை வா நீ
400 என்றழைக்க வந்தாரே மாமுனியும் தாயாரை தான் வணங்கி
தாதுபயில் மாமுனிவன் மாதாவே நினைத்தவாறு
தயை சொல்லுமென்றார்

மக்களவர் மூபேரும் மாண்டிறந்துவிட்டார்மாமுனியே
ஏற்றபுகழ் மாமுனியே நாடாள ஒருவரில்லை
நன்றியுள்ள என் மகளே நீடாழி சூழும் பூவுலகை
நீயாள வேணுமென்றாள் மாதாவே நீயும் இப்போ
வகையறியாவார்த்தை சொன்னாய் நாதன் பரமேஸ்பரர்க்கும்
நன்றியுடனே இடமாய் நீதியுடன் போற்றி செய்து
நிற்பதுவும் நானல்லவே நாடான தானுனக்கு
410 நற்பல்லகாண் தாயாரே ஆயிழையே மாதாவே
யானுரைக்க கேட்டருள்வீர் என்னுடைய தம்பியர்கள்
யேற்றபுகழ் தேவியரே

## வியாசர் பிண்டம் கொடுத்தல்

அவர்க்கு வன்னமுள்ள
புத்திரரைவகுப்போமென அரசாள பண்பாக என்னை நீங்கள்
பர்த்தாவென்றே நினைத்து நன்நுதலே பிண்டமதை
நான்தருவேன் இப்போது மைவளரும் கண்ணாளே வாங்கி
நீர்விழுங்கு மென்றார் மெய்வளரும் வேல் விழியாள்
மின்னார்கள் மூபேரும் சித்தனுக்கு சித்தன் மனைவி
சித்தர கூத்தன்மனையாள்முத்தியுள்ளமாமுனிவன்
420 மூபேரையும் தான் அழைதது பூவையரே
உங்கள் புருசரென்றே எனைநினைந்து
சந்தோசமாய் தொழுது பண்ணாக என்னை உங்கள்

பர்த்தாவென்றே நினைந்து தேன் மருவும் பூங்குழலாள்
சேயிழைமார் மூபேரும் ஆமெனவே பிண்டமதை
ஆயிழை மார்க்குகொடுக்க சித்தனுடதன் மனையாள்

## திருதராட்டிரன் பிறத்தல்

திறல்குமரி கண்ணு ரெண்டும் போற்றிநின்று தான் விழுங்க
போர்க்கொடி யாள் அந்நேரம் மின்னிளையாளும் விழுங்க
விழி மறந்தபுத்திரனார் தேனார் மார்பழகன்
திருதராட்டினார் தான் பிறந்தார் செந்தாமரை முகத்தாள்
430 சித்தனுட மனையாள்போற்றி நின்று பிண்டமதை

## பாண்டு பிறத்தல்

பூவை நல்லாளும் விழுங்கி வேண்டியவள் தான் விழுங்க
மெத்த வெள்ளை பாலகனாய் பாண்டு மகாராஜனுமே
பரிவினுடனே பிறந்தான் சித்திர கூத்தன் தன்
மனையாள் தேவியாள் தன் வயிற்றில்

## விருதன் பிறத்தல்

கனக பணி அலங்கரித்து
கனக முனியை தொழுது பிண்டமது தனைவாங்கி
பேதை நல்லாள் தான் விழுங்க மணியது போல்
விருதன் வந்தே பிறந்தான்

## வியாசர் வாழ்த்துதல்

மேவலர்கள் எண்ணரிய வேதமுனி வியாசரை
440 பூவையர்கள் மூபேரும் போற்றி நின்றார்
மாமுனியே வேத வியாகரரும் வீஸ்மரை
தானழைத்து தாது பயில் காங்கையரை
தம்பியரே கேட்டருள்வீர் அரசாள வைப்போம் நாம்
அழகு திருதராட்டிதரை விரைசேரும் பூங்குழலாள்
மெல்லி நல்லாள் மூபேரும் பாண்டு மகாராஜனையும்
பண்ணார் விருதனையும் தூண்ட அரியரையும்
தோற்றமுள்ள மன்னனையும் இன்று போல் என்றைக்கும்
இயல்பாக வாழ்ந்திருங்கள் என்று இவர்க்கு வார்த்தை சொல்லி
இயல்முனிவன் போனதற்பின் விரைசேரும் காங்கையனார்

450 வேதமுனி போனபோது அரசாள வைத்தனர் காண்
அழகு திருதராட்டிதரை பாண்டு மகாராஜனுடன்

## பாண்டு மான் மீது அம்பெய்தல்

பண்புடைய விருதனுமாய் வேட்டையாட கானகத்தில்
விரைந்து வருகையிலே தேன் மருவும் தார்முனிவன்
சொந்தமனையாளுடனேமானுருவம் மாகவல்லோ
மருவி விளையாடும் நரம்பூண்ட தொரு கலவியிலே
போர் வேந்தன் மானெனவே பாண்டு மகாராஜன் அப்போ
பரிவுடனே எய்து விட்டார் அம்புபட்டு சோர்ந்தல்லவோ

## முனிவனின் சாபம்

அருள் முனிவன் ஏது சொல்வான் வரை சேரும் ராஜமன்னா
வாய்த்த தொரு கலவியிலே மெய்தாயே மன்னா நீ
460 என்னைப் போல் நீயும் ஒரு மை மருவ குழலாளை
மங்கையரே புல்லுகையிலே மாண்டிடுவாய் என்று சொல்லி
மாமுனிவன் சாபமிட்டான் பாண்டு மகாராசனவர்
பாவம் வந்து பலித்ததென்று மின்பரவு மன்னன்
திருதராட்டினார் அன்புடனே பூவுலகை
ஆண்டிருந்த நாளதிலே மண்ணாளும் காங்கையனார்
மண்டலத்தோர் மெய்த்திடவே அன்னாள் தன்னிலே தான்
ஆனதிருதாட்டிதர்க்கு அழகுதிரு மலர் மாது
பொந்நிறம் போல் இலங்கிடவே காந்தாரி தன்னையன்று
கலியாணம் செய்தனராம் பாரிலுள்ளோர் தான் மகிழ
470 பாண்டுமகாராசனுக்கு காருலாவும் கூந்தல் நல்லாள்
கன்னிகுந்தாதேவியையும் குந்தி தேவி தனக்கிசய
கோதை வெயிலாள்தமையும் கஞ்சமலர் மன்னனுக்கு
கலியாணம் செய்தனராம் மார்பயிலும் காந்தாரி
மன்னர் திரிதராட்டுதர்க்கு கெர்ப்பபிணி தானாள் காண்
கிளிமொழியாள் காந்தாரிமானருட திருவயிற்றில்
வருசம் பன்னிரண்டாக தேன்மொழியாள் சுமந்தலுத்து
திரிந்தாளே காதால் காரிகையாள்குந்தா தேவி
கணவனுடன் ஏதுசொல்வாள் பாராளதரனுக்கு
பாலகனும் வேண்டாமா மாவேறும் பூங்கூந்தல்
480 மாதுநல்லாள் காந்தாரி பூவுலகையாளுதற்கு

புத்திரன் உண்டாகினாளே தாராரும் மன்னவனே
தாகமுடன் யெங்களை நீர் சேராமலிருந்துதான்
செப்புமென்றாள் தேன் மொழியாள் பார்புகழும்

## குந்தியின் பழையகதை

மாமுனியை நானொருநாள் பாராமல்யெய்தேனான்
பார்க்கயிலே மாமுனிவன் மாவேறும் பூங்கூந்தல்
மானாரை புல்லுகயிலே சாவாலே நீயும் என்று
சாபமிட்டார் மாமுனிவன் குந்தாதேவிதான் கேட்டு
கொற்றவனோடேது சொல்வாள் என்தகப்பானாருடனே
இயல்வாக மாமுனிவன் வந்தாரேமாமுனியும்
490 வரிசையுள்ள அய்யரிடம் எந்தனுடமனைதனிலே
இளைப்பாற வேணுமென்றார் மன்னுதமிழ் மன்னவனே
பசியாறயெந்தனக்கு கன்னியழியாதபெண்கள்
கறிசோறு வைக்க வேணும் யென்றுமுனிசொன்னதற்பின்
எங்களையா என்னையுந்தான் சோறுகறி உடன் சமைக்கச்
சொன்னார் காண் எங்களையா யேர் வேந்தர் மெய்த்திடவே
இயல்முனிவன் தான் மகிழ தார்வேந்தர் சோறுகறி
சமைத்திட்டேன் கண்டிரோ அன்னேரம் மாமுனிவன்
அதிபிரியமாய் மதித்து மின்னலே நீ உனக்கு
ஏது வேணும்என்று கேட்டார் அப்பொழுது நான்தானும்

## குந்தி கேட்ட வரம்

500 அருள்முனியைத் தெண்டனிட்டு மெய்ப்பான புத்திரர்கள்
வேணுமென்று நானுரைத்தேன் அஞ்சி பரலெடுத்து
அருள் முனிவன் தந்தருளி வஞ்சமற பூவுலகில்
மாதுகெங்கை என்றவளை அஞ்சிபேர் தனை நினைக்க
அப்போது அவர்வருவர் பைந்தொடியே வந்தவரை
பர்த்தாவென்றே நினைத்து மின்னனயே ஒவ்வொருத்தர்
விழுங்கினார் ஓர் பரலை அன்னேரம் புத்திரருண்டாய்
ஆயிழை மார்தான்போனார் சொன்னமுனி தன்னுரையை

## கர்ணன் பிறப்பு

சோதிக்க வேணுமென்று அன்னேரம் தன்னிலே
தான் ஆதித்தன் தனை நினைத்து வேண்டியொரு பரலுதன்னை

510 விழுங்கினேன் கண்டீரோ பூண்டதொரு பாங்கியரும்
பொற்பெரிய தாயாரும் கண்டே என் சின்னத்து
கலியாணம் செய்யுமுன்னே மிண்டாகவே பரலை
விழுங்கினாள் என்று சொல்லி தொண்டை தனை இறுக
தோழியர்கள் தான் பிடித்தார் தண்டமிழ் நூல் வல்லவரே
தலைவரே நீர் கேட்டருள்வீர் கண்டத்திலே பிடித்ததினால்
கன்னத்திலே தான் ஒதுங்க கன்னமது தான் வெடித்து
கன்னனும் வந்தே பிறந்தான் அந்நேரம் தன்நிலங்கள்
தந்தை தாய் இருபேரும் பர்தாவும் இல்லாமல்
பாலகனை பெற்றெடுத்தாள் புத்தி இல்லை என்றதினால்
520 போட்டு விட்டார் கண்டீரோ பெட்டகத்தில் பாலகனை
பிரியமுடன் அடைத்து வைத்து வைகையாற்றங்கரையருகில்
புதைத்து வைத்தார் பெட்டகத்தை தலை மூத்த மா முனிவன்
தந்த பரல் அஞ்சதிலே நாலு பரல் இருக்குது காண்
நாயகரே என்றுரைத்தாள் பாண்டு மகராஜன் அப்பொழுது

## தர்மன் பிறப்பு

பைந்தொடியே மைந்தர்களை உன்னியவர் தனை நினைந்து
ஒவியமே விழுங்கும் என்றார் எமதருமரை நினைத்து
ஏந்திழையாள் குந்தா தேவி வேண்டியொரு பரல் தன்னை
விழுங்கினாள் மெல்லி நல்லாள் மெல்லி நல்லாள் விழுங்கிடவே
மேதினி எல்லாம் தழைக்க தப்பாத சொல்லுடைய
530 தருமராஜன் பிறந்தனராம் தருமராஜன் பிறந்த தற்பின்
தார்குழலாள்பின்னும் ஒரு மேன்மையுள்ள பரலில் ஒன்று

## பீமன் பிறப்பு

விழுங்கவென்று மெல்லியரும் காற்றை நினைத்து அவள்
காரிகையாள் தான் விழுங்க வேற்றரசர் எண்ணினதால்
வீமன் வந்தே பிறந்தார் வீமன்வந்து பிறந்ததற்பின்
வேந்தன் பாண்டு மகாராஜன் தென்னன் பாண்டு மகாராஜன்
தேன் மொழியே விழுங்கும் என்றார் தேர்வேந்தன் தானுரைக்க
சேயிழையாள் குந்தாதேவி தேவேந்திரரை நினைத்து

## அர்ஜுனன் பிறப்பு

தேன் மொழியாள் விழுங்கிடவே வீசும் புகழ் வில்லில்நல்ல

விசையன் வந்தே பிறந்தான் பைந்தொடியாள் குந்தா தேவி
540 பாண்டு மகாராஜனுடன் எந்தனுட தங்கையர்க்கு
இயல் மதலை இல்லை என்றாள் குந்தாதேவி சொல்கேட்டு
கொற்றவனும் தான் மகிழ்ந்து வண்டமரும் பூங்குழலாள்
மாது வெயிலாள் தனக்கு இருந்த பிண்டம் ஒன்றதையும்

## நகுல சகாதேவன் பிறப்பு

இரு கூறாய் தான் பகுத்து கோதை வெயிலாள்கையிலே
கொடுத்தாளே பிண்டமதை மையம் வரும் கண்ணாளும்
வருணன்தனை நினைந்து பெண் கொடியாள் தான்
விழுங்க பிண்டமதில் நேர்பாதி நன்னநெறி சேர் வல்லவனாய்
நகுலன் வந்தே பிறந்தார் நகுலன் பிறந்த பின்பு
நாயகியாள் வெயிலாளும் நேர்பாதி தான் இருந்த
550 நேசமுள்ள பிண்டமதை அசுவனித்தேவதைகளை தான் நினைத்து
ஆயிழையாள் விழுங்குவாளாய்வாரார் குழல்மடவாள்
மங்கை நல்லாள் விழுங்கிடவே சகல கலை வல்லவனாய்
தாரணியோர் கொண்டாட போரால் சகாதேவன்
பிறந்தனன் காண் அப்பொழுதே.

## காந்தாரியின் செய்கை

காரியமாய் ஐபேர்கள் பிறந்த செய்தி எல்லாம்
கண்டபேர்கள் ஓடி வந்து காந்தாரிக்கு உரைக்க
சேர்ந்த புகழ் காந்தாரி திடு திடென ஓடி
சேயிழையாள் குந்தாதேவி அழகு
மாளிகைக்கு வந்து ஏன் தானோ தங்கையரே
560 என்னை நினையாமல் இளந்தலையாய் உனக்கொருவர்
துணை எதுவும் இல்லாமல் மாந்தளிர் போல் மேனி நல்லாள்
மயக்கம் வந்தபோது மலங்காதே என்று சொல்லி
உனைப்பிடிக்க ஒருவர் என்னையன்றி உனக்குதவி
வேறுதவி உண்டோ இப்போது எனக்கு நீ
ஆள் விடுத்தாயில்லை இல்லையே எந்தனக்கு
மெய்நோவு வந்தால் என்னிடத்தில் இப்போது
நீ வர வேண்டாம் சங்குவளை கையாளே
நீராடி வருமளவும் தங்கையரே பிள்ளைகளைப்
பார்த்திருப்பேன் இப்போ நீராடி மாற்றுடுக்க

570 குந்தா தேவி போக நேரிழையாள் காந்தாரி

## ஐவரையும் சோதித்தல்

பிள்ளை தன்னை எடுத்து தாலாட்டி தர்மன் தன்னை
தானெடுத்து பார்த்து தையல் நல்லாள் அற்பனென்று
மெல்லவே நினைத்தாள் பாராளும் பரி நகுலன்
தன்னையவள் எடுத்து பஞ்சி போல இருக்குதென்று
பார்தனிலே வைத்தாள் தாராரும் சகாதேவன்
தன்னையுமோ எடுத்து சற்றும் பிலம் இல்லை என்று
தானவளும் வைத்தாள் சூழ்சிக்கார காந்தாரி
திவவிஜயனையும் வைத்தாள் மிகுந்த பிலம் இவன் இல்லை
நீராட போன குந்தாதேவி வருமுன்னேபாவி நீலி

## காந்தாரி பீமனைக் கொல்ல முயற்சி

580 காந்தாரி தானும் நீலி காந்தாரி
மாபாவி தானும் வீமனையும் கொல்ல
வென்று மனந்தனிலே நினைத்து மிண்டத்தில்
நெல்லு தனை எடுத்து கூண்ட புகழ் வீமனுட
தொண்டைதனில் இட்டாள் அந்நேரம் நீராடி
குந்தா தேவி தானும் அழுத குரல் ஓசையது
ஆயிழையாள் கேட்டாள் ஆலங்கிளி கொண்டு
வந்து மிண்டக நெல்லை அழுத பிள்ளை இட்டு

## காந்தாரியின் சமாதானம்

அது பறந்து போச்சு சொல்லுங் கிளி கொண்டு
வந்த மிண்டக நெல்லை தொண்டையிலே இட்ட
590 தென்றாள் தோகை காந்தாரி போடி போடி காந்தாரி
பிள்ளை கொல்லி பாவி பேச்சினான் அறிவேண்டி
பேசாமல் போடி என்று சொல்ல மனமேங்கு
ஏந்திழை காந்தாரி எழுந்து தான் நடந்தாள்
அவளுடைய பதிக்கு இப்படியே சண்டையிட்டு
ஏந்திழை காந்தாரி எழுந்திருந்து தான் நடந்து
இவள்முகம் பாராமல் பொற் கொடியாள்
காந்தாரி வயறெறிந்து செல்ல பூனை முழித்தால் போல்
போனாள் தன் பதிக்கு வாடியவள் காந்தாரி

## வயிறெரிந்த காந்தாரி

வயறெரிந்து வந்து மாளிகைக்குள் வந்திருந்தாள்
600 மனத்துயரம் கொண்டு பேடி என்று நானிருந்தேன்
குந்தா தேவி இப்போ பூவை நல்லாள் மூணு
பிள்ளை பெற்றெடுத்தாள் இருளி என்று நானிருந்தேன்
ஏந்திழையாள் வெயிலாள் ரெண்டு பிள்ளை தன்னையவள்
மாறியுடன் பெற்றாள் ஆடிய அம்பரம் போல்
பதிமூன்று வருஷம் அம்புவியோர் தானறிய

## காந்தாரியின் கர்ப்பம் கலைதல்

சுமநது சடைத்தேனே கொடியவள் காந்தாரி
கொடும்துயரம் கொண்டு குத்தினாள் தன் வயிற்றில்
குதித்துதிரம் சாட கர்த்தனுட அருளாலே
கலங்கி மிக கெர்பம் கடலுடைந்து பாய்வதுபோல்
610 கலங்கி மிக பாய்ந்ததுவாம் அந்நேரம் கெர்ப்பமது
அழிந்துதிரம் சாடிய பின் மன்னவனும் அப்போது
மாமுனியை தானழைத்து என்ன செய்வோம் நாம் இதற்கு
இசல் முனியே என்று சொல்லி ஆவலுடன் சொல்ல மன்னன்
அருள்முனிவர் ஏது சொல்வார் மாவுலகில் மன்னவனே

## கௌரவர் பிறப்பு

மனிதருட உதிரமதை காவலரை ஒரு நூறு
கலசமதில் அடையுமென்றார் என்ற உரை கேட்டு மன்னன்
ஏந்திழையாள் கெர்பமதை உடனே தான் வாரியவர்
ஒரு நூறு கலசத்திலே வென்றியுடன் கட்டிவைத்தார்
வேந்தன் திருதராட்டிரன்மிஞ்சினதோர் உதிரமதை
620 தண்டமிழ் சேர் மார்பழகா சட்டியிலே கட்டிவைத்தார்
சங்கையுடன் அந்நேரம் பைந்தொடியே நீயும் இப்போ
பிலாவுதனை தழுவும் என்பார் முனிவன் சொல்படிக்கு
பிலாவுதனை தழுவும் என்றார் மைந்தர் ஒரு நூற்றுவரும்
வாய்த்ததொரு மின்னாரும் பூராயமாய் கலசமது
பொடுபோடென தான் வெடித்து சீரார் புவி மீதில்
திரியொதிரன் முதலாய் பேரான நூற்று வரும்
பேதையரும் தான் பிறந்தார் நூற்றுவர்கள் பிறந்த போது

நேரிழையாள் காந்தாரி மற்று நிகர் ஒவ்வாத
மங்கை நல்லாள் காந்தாரி குந்தா தேவிக்கு மூன்று குழந்தை
630 கோல வெயிலாள் ரெண்டு குழந்தை எஞ்சாமல் எந்தனக்கு
ஒருநூற்றொரு பிள்ளையுண்டே கொஞ்சி மிக எடுத்து கோதை

## எல்லோரும் கல்வி பயிலல்

நல்லாள் தான் வளர்த்தாள் குருகுலத்து குருக்களிடம்
கூண்ட நல்ல பிள்ளைகளும் பஞ்சவரும் நூற்றுவரும்
பள்ளி புகுந்து எழுத்து ஓத வஞ்சமற பல தொழிலும்
படித்து வரும் நாளதிலே ஐபேரும் பல தொழிலும்
அதிகமுள்ள வித்தைகளும் கைவசமாய் கற்றல்லவோ
கருத்தாக ஒரு நாளில் பொய்யான நூற்றுவர்கள்
புத்திகெட்டு மெய்ப்பாக மெய்மறந்து நூற்றுவர்கள்
வித்தைஎல்லாம் தெரியாமல் செய்த பல தொழில்கள்
640 எல்லாம் தெரியாமல் விளையாடி அகமகிழ்ந்து நூற்றுவரும்
அவர்கள் ஒன்றாய் தான் கூடி கூடியவர் பந்தடித்து
கூண்ட புகழ் பஞ்சவர்கள் விரட்டியே நூற்றுவரை
வீரமுள்ள பஞ்சவர்கள் வேளைகொண்ட பஞ்சவர்கள்
மிக்க புகழ் நூற்றுவரை சீற்றமுடன் பல நாளும்
சிறப்புடனே கானகத்தில் கற்றதொரு வில்லெடுத்து
கைத்திறமாய் விளையாடி அத்தருட அருளாலே
ஐபேரும் நூற்றுபேரும் ஒக்கவே தான் கூடி
உற்றபுகழ் பாலகர்கள் தங்கள் சரந்தொடுத்து
தானவர்கள் எய்யும் நேரம் எய்த அந்த சரங்கள் எல்லாம்
650 இயல்வானில் போகாமல் பொய்யாக போய் விடவே
புத்தி மறந்தங்கே நிற்க மெய் மருவும் துடைமார்பன்
போர் வேந்தன் தனக்கு வையகம் மெய்க்க
பல தொழிலும் வருத்தி வைத்த குருவான
குருவான துய்ய புகழ் வேந்தனவர்

## துரோணர் வருதல்

துரோணாச்சாரி தானும் செய்ய மன்னன் தன்னுடனே
சீறி மனம் வெறுப்பாக அவர்நாடும் விட்டு
பாஞ்சாலன் தனைபார்த்து போவோம் என்று நாடும் விட்டு
புத்திரரும் மனையாளும் உய்யும்படி வழி நடந்து

உற்ற குருநாடு தன்னில் வளர் நாட்டில் வந்தவர்கள்
660 வடவானின் கீழிருந்தா இருந்தார் இளைப்பாக
இசல்பெரிய துரோணரவர் வருந்தியவர் சடைத்திருக்கும்
வளமை தன்னிலன்றவரை போற புகழ் பஞ்சவரும்

## துரோணர் வாளியை எடுத்தல்

புகழ்பெரிய நூற்றுவரும் அரும் தினத்தில் வாளி தன்னை
அவரெடுக்க மாட்டாமல் யேற்றவர்கள் வாளி தன்னை
எடுக்க இதம் இல்லாமல் வல்லபுகள் வீமனுடன்
வாய்த்த புகழ் அருச்சுனனும் கவலைகொண்டு மனம் தடுமாறி
கரையில் நிற்கும் வேளையிலே பார்த்திருந்து துரோணருமோ
பரப்பரென எழுந்திருந்து ஏற்ற புகழ் கிணத்தடியில்
எய்தமன்னரிடத்தில் வந்தார் வந்து நின்று விசயனுடன்
670 வாய்த்த கையில் வில்லைவாங்கி ஊந்துமந்தயரும் கிணத்தில்
உடன் வாளியை குறித்து வந்து நின்று சரம் தொடுத்து
வாளி தன்மேல் எய்திடவே உந்திநின்று வாளிதன்னை
உயர் வானில் கொண்டேக எழும்பி உயர்ந்துவர
எற்ற அம்பு திருவாளியும் தாவியங்கே தான் வருமுன்
தன் கரத்தாலே பிடித்து பிடித்த திருவாளியையும்
பொருந்தும் சரத்தினையும் புகழ் விசையன் கையில்
வாய்த்த துரோணர் வில்தொழிலை கண்டவுடன்
விசயனைமிக கொண்டாடி நல்போரது பொருதுவாரும்
என்று கையிலிட்டு அப்போது திரியோதிரன்
680 அங்கேது வார்த்தை சொல்வான் எப்போதும் எங்களுக்கு

## துரோணர் குரு ஆதல்

எற்ற குரு ஆசாரியனார் மல்பொருதும் துரோணரவர்
ஞானி என்றேயழைக்க மெய்ப்புடைய வில்தோளிலும்
மிக்க பல ஆயுதமும் இப்பொழுது எங்களுக்கு
இனிவருத்தவேணு மென்றார் அப்போது நூற்றுவர்க்கும்
ஆனபுகார் பஞ்சவர்க்கும் செப்பமுள்ள வில்தொழிலும்
சிறந்த பல ஆயுதமும் ஒப்பமுடன் வருத்தி
உற்ற புகழ் பஞ்சவர்க்கு வெற்றியுள்ள ஆயுதமும்
வில்தொழிலும் மிகவும் படித்தார் பல தொழிலும்
பாரவாள் சுரிகை சொட்டை கன்றாமலேபடித்து

690 கருக அவர் அய்பேரும் நின்றான் திரியோதிரன்
வேர்க்கையுள்ள தம்பிமாரும் வல்லவிதம் வருத்திடிலும்
மறந்திடுவார் நூற்றுவர்கள் நல்லதென்று துரோணரும் தான்
நாடியவர் திறங்கள் தன்னை உள் மனதில் கண்டல்லவோ
உற்றபுகழ் ஆசாரி மேன்மையுள்ள பஞ்சவர்கள்

## பாண்டவர்களின் ஆட்சி

மேதினியை ஆள்வாரென்று உண்மைகெட்ட நூற்றுவர்கள்
ஒன்றும் அவர்படியார் தன்மனதிலே யறிந்து தான்
வருத்திவாற நாளில் திரிந்து துரியோதனர்க்கு
சிறப்பாக முடிசூட்டி ஆதியுட அருளாலே
அரசாள வைத்தபோது ஊக்கமுள்ளமன்னனுக்கு
700 உண்ணும் அன்னம் புழுவாய் தீர்க்கமுடன் போறதுகண்டு
திகைத்திருக்கும் நாளதிலே

## கர்ணனின் வரலாறு

வாக்குடையகுந்தா தேவி
மாது நல்லாள் கன்னமதில்
கன்னமதிலே பிறந்த
கதிர்மையுள்ள மன்னனைத்தான்
வன்னமுள்ள பெட்டகத்தில்
வைத்து ஆற்றில் புதைத்து வைத்தார்
ஆற்றிலே தான் புதைத்திருக்க
அலைகடல் போல் மாரிபெய்து
710 பேராற்றில் வெள்ளமது
பெருக்கிட்டு தான் வரவே
ஏற்றதோர் ஆற்று வெள்ளம்
இரைந்து மிகவே பிடுங்கி
கர்ணனங்கே இருந்த குன்று
கரையும்மண்கண்டிடவே
வன்னமுள்ள பெட்டகத்தை
வாரி வெள்ளம் கொண்டுவர
ஆற்றிலே நீர்ஆடி நின்ற
அதி திரியோதிரனும்
720 சித்தமுடனே பிடித்து

சிறப்பாய் மிகக் கொடுபோக
பெட்டகத்தை தான் திறக்க
பிள்ளைதனை கண்டனனே
இட்டமுடன் இவன் கலமேது
இவனாரு யென்றறியோம்
உன்றுபடா பத்திரத்தை
உள்ளெழுத்தை கண்டபோது
கூறுபடா குந்தாதேவி
குருகுலத்து மன்னனென்று
730 அந்தரத்தோர் மெய்த்திடவே
ஆதித்தன் மைந்தன் என்ன
இந்தவண்ணம் கண்டளவில்
ஏற்ற திரியோதனனும்
நல்ல தென்று கொண்டாடி
நலம் சிறந்த கோவில் கல்லில்
மெல்லவங்கே கொண்டாடி
வேண்டும் பாலூட்டி நன்றாய்
கொஞ்சியவர் தான் எடுத்து
கொண்டாடி தான் வளத்தார்
740 வஞ்சமற பாலகனும்
வளருகிற நாளதிலே
பொற்கலத்தில் அமுதளிக்க
புகழும் திரியோதிரர்க்கு
மிய்க்க ஒரு பிடிபிடித்து
மேவியுண்ணும் வேளையிலே
ஒக்கவங்கே அன்னமது
உண்ணும் முன்னே புழுவாகும்
சிக்கனவே புழுவாக
சிறப்புடைய கன்னனும்தான்
750 தவழ்ந்து வந்து பொற்கலத்தை
தானவரும் தொட்ட போது
உகர்ந்து வந்த பொற்கலத்தில்
உற்ற புழுமாறிடுமாம்
புழு மாற்றும் புண்ணியனை

புகழ்ந்துமடி மீதில் வைத்து
பழுதறவே தான் வளர்த்து
பற்றியுடன் முடி சூட்டி
நித்தம் கலம் பொன்னை எல்லாம்
நீ நிலத்தில் இரப்போர்க்கும்
760 கற்றவர்க்கும் ஈயுமென்றார்
கட்டளை இட்டு கொடுத்தான்

## சகோதரர்கள் விளையாடல்

அப்படியே கன்னனுடன்
ஆண்டதிரியோதிரனும்
இப்படியே தம்பிமாரும்
ஏழு சேனையுடன்
ஒப்பமுள்ள ஐபேரும்
உற்ற திரியோதிரனும்
மெய்ப்புடனே பந்தடித்து
விளையாடி வரும் நாளில்
770 நூற்றுவர்கள் ஒருபுறமும்
பஞ்சவர்கள் ஒருபுறமும்
சித்தமுடன் பந்தடித்தார்
திரியோதிரன் தன்னுடனே
காற்றனவே வீமராசன்
கடிதாக துரத்திடுவான்
மாத்தமாக நூற்றுவரும்
மாட்டாமல் தோற்றிடுவார்
சித்தம் எல்லாம் ரெண்டாகி
திரியோதிரனை கண்டல்லவோ
780 கூற்றுவன் காண் இவனெனவே
தனித்து மிகக் கசடுவைத்து
ஏற்ற முள்ள நூற்றுவர்கள்
இருக்கு மந்த அன்னாளில்

## துரோணர் மறைந்தார்

சித்தமுள்ள நூற்றுவர்கள்
திறம் அறிய வேணுமென்று

சூத்திரமாக துரோணரவர்
சூதானமாக யன்று
தேசம் விலகிச் சென்று
சென்றாரென்றார் ஆசாரியை
790 ஓந்தில் விழுங்கிச் சென்று
உற்ற துரோணா ஆசாரியே
வார்த்தையது விளம்பிச் சென்று
வையகத்தோர் தான் அறிய
யேற்றமுள்ள நூற்றுவர்கள்
ஏழு குறணி சேனையுடன்
தோற்றமுடன் கூடியவர்
துணுக்கனெவே தான் எழுந்து
வரிசையுள்ள ஆசானை
வகைப்படியே மிளவென்று
800 சீறி நீல கர்னனுடன்
சினத்திலே தானெழுந்து
வேந்தர் சேரா ஓந்தில் தேடி
வேலி எல்லாம் திரிவாராம்
கண்டாரே கருத்தையெல்லாம்
காவலர்கள் கைத்திறத்தை
வஞ்ச மொழி ஒன்று சொல்லி
மன்னவர்கள் கெணியாமல்
வெஞ்சல்மொழி யாசாரியரை
மீளவேணு மென்று சம்மதித்தார்

## பாண்டவர் படையுடன் புறப்படுதல்

810 ஆசானை ஓந்தில் விழுங்கிசென்று
அந்தவார்த்தையை ஐவரும் கேட்டதுமே
பாயும் பரிகரி தேருடன் சேனையும்
பத்தியாகவே வில்லாளி சூழவே
வில்லணியுடன் வேலணியும்
மிக்க நல்ல படைகள் நெருங்கவே
சொல்லவங்கே தொலையாதவீரரும்
துட்டர் வீரர் துடர்ந்து அங்கேவர
சல்லீட்டி சக்கரம் பாரவாள்

தாண்டு மந்த இரும்புலக்கையுடன்
820 வெல்லும் வெல்லொண்ணா பீரங்கிகளும்
வெண்பரிசை குடைகள் செருமவே
நெருங்கவே சின்னம்யெக்காளம் கொம்புதான்
நீதியாக தவிலோசை கொட்டவே
கொட்டு வாத்தியம் மல்லாரி சின்னமும்
கொம்பு தாரை டம்மானம் ஓசையும்
மெத்தமார்பன் மதயானை மீதிலே
மேவும் கையில் வாளும் யெடுத்தவர்
மெய்வருந்த மதகரி மீதேறி
மிக்க தரும்மரும் முன் நடக்கவே

## ஓந்தைத் தேடுதல்

830 கடுகவே தெண்டாயுதமும் எடுத்தனர்
பொய்யாகவே ஆசானை விழுங்கின
பூண்ட ஓந்திலை விரட்டி இடிக்கவே
செய்ய மன்னன் விசயனும் தேரேறி
செங்கையில் வில்லுசரம் ஏந்தி
வையகங்கள் திரை இட்டே நிற்க
வானம் பூமியும் ஒன்றாகவே முட்ட
பையவே தான் பரிக்கு நகுலனும்
பத்தியாக பரிசையும் வாளுமாய்
பாசமான பரிமீதிலே வர
840 திரியலர்கள் மணவாளனானதோர்
சங்கையுள்ளதோர் சகாதேவன் கரிமேலே
தானும் வேலுடன் சக்கரம் சூலமும்
தவமான வெடிகள் முழங்கிட
கோடிகோடி படைகள் அணிவர
கொன்றவர்கள் படைகள் நெருங்கவே
நெருங்கவே கானக கவரிகள் வீசவே
நீதியாய் தர்மர் ஆனைமீதிலவர்
எங்கள் ஆசானை விழுங்கும் ஓந்திலை
ஏது வண்ணம் இருக்கும் யென்றெண்ணியே
850 செங்கை வாள்வீரர் சேரப்படையதாய்
சிக்கனமாய் கரிபரிகாலாளும்

போய் யலையெங்கும் தேர் மேலேறியே
வந்தமன்னர் பவனியைக் கண்டபின்
மண்டதில் வலுவுள்ளோர் கொண்டாட

## துரோணர் வெளிப்பட்டார்

வீறான துரோணரொளித்தவர்
மெய்ப்பதாக படை முன்னே தோன்றினார்
தோன்றினார் துரோணர் வந்தபேரை
துங்கமான் துரோணரெனச் சொல்வார்
வேண்டிய துரோகங்கள் வேறுண்டோ
860 வெற்றிவேந்தரே வாருங்களென்பாராம்
உற்ற துரோணரை ஒந்திலும் வந்தல்லோ
உண்மையாக விழுங்கி சென்றோடினோம்
அந்த வார்த்தை கேட்டும்மை மீள்கவே
ஆண்டவனை தொழுதேகினார்

## துரோணரின் வாக்கு

சிந்தையாக துரத்தியே வந்ததோர்
திறமும் நல்ல வர்மம் அறிந்தவர்
மந்திரியாய் மனதிலே கண்டவர்
வாய்த்த பஞ்சவர் ராச்சியம் ஆள்வாராம்
விந்தையாகவே நூற்றுவர் ராச்சியம்
870 மேதினி தன்னையும் ஆளவும் மாட்டார்கள்
என்று கைத்திறம் புத்தியும் கண்டவர்
ஏற்ற வார்த்தை துரோணரும் சொல்லுவார்
நன்று நன்றென மன்னரைக் கொண்டாடி
நல்ல வார்த்தை உரைத்தாரே ஐபேர்க்கும்
நன்றியானதோர் பஞ்சவர் யாபேரும்
நாடியே விடை தான் கொடுத்தாரே
கொடுத்தார் விடை நூற்றுவர்க்கு அன்பாக
கொற்ற வேந்தர்கள் கோவில் கல்தானுமோ

## பாண்டவர் வலை கட்டல்

குருநாட்டில் பஞ்சவர்கள்
880 குறையறவே வாழ்ந்திருந்தார்

வெரும் குருநாடாண்டு
மிக்க பஞ்சபாண்டவர்கள்
சேனையுடன் வாழும் நாளில்
விரைந்தளஞ்சேர் பஞ்சவரும்
வேந்தன் திரியேதிரனும்
தாட்டிமையாய் தாங்களிலே
தானே வேட்டையாட வென்று
கொட்டாக படைதிரட்டி
குறித்தவலை எடுத்திடுவார்
890 பாசக் கயறெடுப்பாரும்
பலநாய்கள் பிடிப்பாரும்
நேரே வரம் பன்றிகுத்தும்
நேரிட்டு எடுப்பாரும்
தாக்குடைய நாய்பலதும்
தவறாமல் பிடிப்பாரும்
போதயெங்கும் பரந்தால் போல்
போர் வேந்தர் பெரும் படைகள்
முட்டுவரை முசல்வலையாம்
முடக்கு வலையடுக்குவலை
900 வாய்த்ததொரு அணிவலையாம்
வட்டவலை தட்டுடனே
மானுடனே மிளாபடிக்கும்
வலுவலையும் குந்தங்களும்
கானகத்தில் வேட்டையாடகன்
முன்படையும் வேடர்களும்
யேகினாரே நூற்றுவர்கள்
என் குறுணி சேனையுடன்
போனார்கள் திசைகள் எங்கும்
பொறுப்பதிலும் கடவரிலும்
910 கடவதிலும் தடவரையும் கண்ட கண்ட

## வேறு நடை

இடங்கள் எல்லாம் ஒரு தடவும் போடாமல்
ஓடி வலைகள் கட்டுவாராம் வரிசையுள்ள பஞ்சவர்க்கு
வலைகட்ட இடம் காணாமல் உரிமையுள்ள மன்னவர்கள்

ஒக்கவங்கே திகைத்து நின்றார் அரியோன் அருளாரே
ஐபேரும் போகும் நேரம் வரிசையுள்ள தர்மராஜன்
வார்த்தை இது சொல்லுவாராம் போராடு மார்பணிந்த
ஈஸ்பரனார் தம்மருளால் ஓராமல் கடவதெல்லாம்
ஒக்கஅவர் வளைந்து கொண்டார் கார் செறிவும் மன்னவரே
கடக்க வலைகெட்டும் என்றார் நாராயணர் தம்மருளால்
920 நமக்கு வரும் தம்பியரே என்றுரைக்க தர்மராஜன்
ஏற்ற புகழ் தம்பியரும் வென்றியுள்ள கடவுக் கப்பால்
மிகுந்த வலை கட்டுவராம் நூற்றுவர்கள் முன்வலையாம்
மொஞ்சி மிகமலை மிருகம் பாரமுள்ள கரடி புலி
பரந்த கிட மிளாவுடனே பார் பெரிய ஆளி சிங்கம்
பல நாயும் ஓரிகளும் ஏரியுடன் செந்நாயும்
ஏற்ற மிளாவுடனே சேர வலை கட்டுவாராம்
சென்றவர்கள் கொண்டு வந்து ஐவர் கடவலையில்

## பாண்டவர் மாமிசம் விற்றல்

அடர்ந்த பன்றி புல்வாயும் வெட்டியவர் காவியல்லோ
மிக்க பெரும் கடைதனிலே
930 கொண்டு வந்து கூறு வைத்து
கொள்ளவர்கள் விற்றிடவே
கருதியந்த நூற்றுவர்கள்
கடைத் தெருவில் இறைச்சியதை
காசி தனைக் கிறைச்சி வாங்க
கனபடையும் நூற்றுவரும்
வாசமுள்ள நூற்றுவர்கள்
வந்தார்கள் கோவில்கல்
அப்பொழுது தாயாரும்

## காந்தாரியின் கோபம்

அவர்களுக்கு அமுதளிக்க
வென்றிறைச்சி தின்றால்
வேட்டை என்ன உங்களுக்கு
940 கொன்றேகான உங்களுக்கு
கோழி பொரித்தெடுத்தேனே
குற்ற மற்ற குந்தா தேவி

அஞ்சு குஞ்சரத்தை பெற்றெடுத்தாள்
இத்தனைக்கோ பேறு பெற்றேன்
என் தலையின் எழுத்திதுவோ
மற்று நிகர் காந்தாரி
மக்கள் தனை தான்சினத்தாள்
மடற்றான் நாள் காலத்திலே
மறு படையும் வேடர்களும்
950 ஒக்க வலை தானெடுத்து
உசத்தி அவர்கானகத்தில்

## கௌரவர் வலை கட்டல்

சூழ்ந்தவலை கட்டிடவே
சுத்த புகழ் பஞ்சவர்கள்
கடவு கட்ட இடம் காணாமல்
கடவலையாய் கட்டுவாராம்
வீணாக நூற்றுவர்க்கும்
வீண் மிருகம் பட்டுவிழ
தின்னாத மிருகம் எல்லாம்
960 செந்நாயும் ஓரிகளும்
தின்னாத கிட மிளாவும் தான்
வலையில் பட்டறுத்து
பட்டறுத்து வேடரையும்
படைகளையும் வதைகள் செய்து
வெட்டு மன்னே மலை மிருகம்
ஓடி அங்கே போனதுவே
கெட்டோமே என்று சொல்லி
கிளைபெரிய நூற்றுவர்கள்
பாண்டவரின் இறச்சிக் கடை
வாட்டமற்ற பஞ்சவர்க்கு
970 மான் கலையும் புல்வாயும்
தட்டாமல் பட்டு விழ
தடம் பெரிய பஞ்சவர்க்கு
வெட்டியவர் கூறு செய்து
வித்தார்கள் கடை தனிலே
பண்டு போலே நூற்றுவர்கள்

பஞ்சவர்கள் கடையில் வந்து
கொண்டு அவர் இறைச்சிதனை
கொடுபோனார் கடைதோறும்

## காந்தாரியின் அறிவுரை

கண்டிருந்து காந்தாரி
980 கருத்தேது வார்த்தை சொல்வாள்
இன்று முதல் உங்களுக்கு
இனி வேட்டையாகாது
வாக்குடனே படை திரட்டி
மன்னன் திரியோதிரனும்
பண்டு போலே வேட்டையாட
பஞ்சவரும் நூற்றுவரும்
திரண்டு திறல் மணிமார்பன்

## விருத்தம்

சேவ்வரிவில் கூடவாராய் பொன் மாது புவி மாது
போர் மாது நாமாது நல்மாது சிறந்திலங்கும்
990 நல்ல குருநாடு தன்னில் வேட்டையாட பஞ்சவரும்
மிக்க புகழ் நூற்றுவரும் சேரவந்து கூடுவாராம்

## குறவன் பலாப்பழம் கொண்டு வருதல்

அங்கவர்க்கு பொதுவான
ஆன வஞ்சி தவக்குறவன்
தவக் குறவன் தன்னுடைய
தங்க பிலா தன் நாட்டில்
கனி பழுத்து தான் இருக்க
கண்டெடுத்து தவக் குறவன்
தொழில் விடுத்த நூற்றுவர்க்கும்
1000 தோற்றமுள்ள பஞ்சவர்க்கும்
வைத்து அவன் பலாப்பழத்தை
வரிசையுடன் தொழுது நின்றான்
அக்கனியை தான் எடுத்து
அவர் கீறி பார்ப்பளவில்
நோக்கமுள்ள பலாபழத்தில்

நூற்றஞ்சி சுளை இருக்க
இக்கணமே தான் இருக்க
ஏற்ற தருமர் ஏதுசொல்வார்

## தருமர் பங்கு வைத்தல்

சொல்லரிய பேர்பெரிய பிலாக்கனியை மிகுந்த
தம்பிமாரே நாம் ஆளுக்கு ஒரு சுளையாக
1010 அனுபவிப்போம் தம்பியரே ஆளேற்றம் உண்டாகில்
அவருடைய பாக்கியம்காண் கூறதனில் ஏற்றமதாய்
கொடுப்பதில்லை ஒருநாளும் வீமராசன் தானுரைக்க
மிகுத்த தருமர் ஏது சொல்வார் தாகம் உண்டு நூற்றுவர்க்கு
தர்மம் உண்டு தம்பிமாரே சீற்றமுள்ள உரைகேட்டு

## துரியோதரன் மறுத்தல்

துரியோதிரன் உரைப்பான் வேற்று மொழி கேட்டிலையோ
மிக்க புகழ் தம்பியரே வார்த்தைக்கு இவன் சூரன்
வலிமைக்கு வீமன் பலவான் வேட்டைக்கு இவன் கதிமை
இடுக்க இவன் துடக்கமுண்டு சேட்ட முண்டு நம்மளிலும்
திறம் உடையோன் வீமராசன் எந்தனக்கும் தம்பியர்க்கும்
1020 எல்லோர்க்கும் நேர் பாதியாம் அந்தமுள்ள பஞ்சவர்க்கும்
நூறுபேர்க்கும் நேர்பாதியாம் ஐபேரும் நாமுமாக
ஆளுமந்த தேசமெல்லாம் மெய்யாக நாம் கொடுத்தால்
வீரமுண்டோ எந்தனக்கு பொய்யான திரியோதிரன்
தான் புண்ணாக நெஞ்சமெல்லாம் மாறியே பஞ்சவரை
வலுப்பேசி நூற்றுவர்கள் சீறியந்த நூற்றுவர்கள்
கோவில் கல்குள் புகுந்தார் கர்ணன் துரியோதிரன்
காரியம் பறையும் மந்திரிமாரும் உன்னியே நூற்றுவரும்
கூடி உற்ற தர்மம் விசாரிப்பாராம் படையாலே பொருதாலும்
பஞ்ச பாண்டவரை வெல்வதில்லை பகையாலே இருந்தாலும்

## பாண்டவரை வெல்ல யோசனை

1030 பாண்டவரை வெல்வதற்கு எந்த எந்த உபாயம்
பாண்டவரை ஒழித்திடவே ஐபேரையும் வரவழைத்து
அதியதெரு நஞ்சிதனை சோற்றிலிட்டல்லவோ
ஐபேரை கொல்லவென்ன யளித்தாரானால்

ஆன பல முண்டோ அஞ்சி மணி முடி பஞ்சவரை
விருந்துண்ண வரவழைத்து வாற வழி தானறிந்து
உபாயமாக கொன்றிடலாம் பச்சயாத்தன் கரைதனிலே
பருங்கிடங்கு தானெடுத்து அதில் கிடங்கு தானெடுத்து
அஞ்சிகழு நிறுத்திடலாம் கழுவினுட மூடதிலே
கடுக கிங்கிலியரை நிறுத்திடலாம் வன்னக் கழு முனைதனிலே
1040 வாய்த்த முறிப்பாலம் நிறுத்திடலாம் நடு பாலத்தில் செல்லும் நேரம்
நாட்டி பொறியை தட்டிடலாம் பாராமல் சிவனெயென்று
சிவலோகம் சேருவார்கள் இந்த உபாயத்தை அழித்தாரானால்
இன்னும் சில உபாயமுண்டு பத்தடிக்கு முன்னே கொண்டு சென்று
பாரவில் பொறியை வைத்ததுண்டால் கல்பொறியும் வில்
பொறியும்

## வேறுநடை

பஞ்ச பாண்டவர் வரும் போது
பாரபொறிதனை தட்டிடலாம்
அந்த உபாயத்தை அழித்தாரானால்
ஆன பல பல உபாயமுண்டு
மண்டபக முகப்பில் போறபோது
1050 வாய்த்த வாள் பொறிகள் வைத்து
பஞ்ச பாண்டவர் வாற நேரம்
பாரவாளாலே குலைபடுவார்
அந்த உபாயம் அழித்தாரானால்
இன்னும் பல சில உபாயமுண்டு
முத்தா வெளியிலவர் வாற நேரம்
முறுகி வருகின்ற சாளுவனை
சாளுவன் என்ற நாய் தன்னுடைய
சங்கிலி பொறியை அவிழ்த்திடலாம்
இத்துப் புலியது தன்னைப் போலே
1060 இரு முறியாய் முறித்திடுமே
அந்த உபாயம் அழித்தாரானால்
அதிய பல சில உபாயமுண்டே
மண்டபத்தில் வரும் நேரம்
மாயகாந்த பொடி மருந்தை

ஏகாந்த பொடி மருந்தை
என் மார்பில் உறையணிந்து
பஞ்சபாண்டவர் வரும் நேரம்
பண்புடனே மிக தழுவ
கெட்டி தழுவுகின்ற நேரத்திலே
1070 கிருபையுடனவர் மாண்டிடுவார்
அந்த உபாயத்தை அழித்தாரானால்
அதிய பல சில உபாயமுண்டே
இருக்கு மந்த மண்டபத்தில்
இரும்பு நாராயம் நாட்டிடலாம்
இரும்பு நாராயம் தன் மீதில்
வெள்ளி தடுக்கது இட்டிடலாம்
வெள்ளித் தடுக்கிலே இருக்கும் போது
மிகுத்த நாராயம் தைத்து விடும்
அரகரா சிவனெயென்று
1080 ஐபேரும் மடிந்திடுவார்
அந்த உபாயத்தை அழித்தாரானால்
அதிய பல சில உபாயமுண்டே
ஆடியோடி ஐபேரும்
அவர்கள் வரும் வேளையிலே
எண்ணை காப்பு கொடுக்க வேணும்
ஏற்ற பஞ்ச பாண்டவர்க்கு
எண்ணை காப்பு சாற்றுதற்கு
எரியும் எண்ணைதனில் மருந்திடலாம்
அந்த உபாயத்தை அழித்தாரானால்
1090 ஆன பல சில உபாயமுண்டே
ஆடியோடி போவதின் முன்
அவர்கள் இங்கே வரும் போது
அமுது கறி கொடுக்க வேணும்
அதிய பஞ்ச பாண்டவர்க்கு
எண்ணை காப்பு சாற்றும் நேரம்
இரு கூறாய் பொடி படுவார்
அந்த உபாயத்தை அழித்தாரானால்
அதிய பல சில உபாயமுண்டே
பச்ச பாசாணம் பாம்பு தீண்ட

1100 பார பொடியை மருந்திடலாம்
ஆடி யோடியே வருவார்க்கு
அமுது படிகள் கொடுக்க வேணும்
அமுதுண்ண வரும் நேரத்திலே
அப்போதந்நேரம் பொடிபடுவார்
இந்த உபாயத்தை அழித்தாரானால்
இன்னும் பல சில உபாயமுண்டே
குளிக்குமந்த கடவதிலே
கொடிய கழுவஞ்சி நிறுத்திடலாம்
குளித்து மெள்ள மூழ்கையிலே
1110 கொடிய கழு கொன்றிடுமே
அரகரா சிவனெ என்பார்
ஐவர் பட்டு சிவலோகம் சேருவார்கள்

## காந்தாரியின் யோசனை

உபாயம் இப்படி நினைத்த போது
மனம் மகிழ்ந்தாள் காந்தாரி
தன்னுடைய மக்களுக்குத் தானும்
வளநாடு ஆளலாமே
வாடா என்னுடைய ஒட்டா நீ
வார்த்தை ஒன்று சொல்லக் கேளு
என என்னுட தம்புரானே
1120 என்னை வருத்தின கருமமென்ன
சீருக் குரு குல படைவீட்டில்
சிறந்த ஐபேரிடம் போகலாமோ
ஏது மொழி நல்ல தென்று
என்ன கருமங்கள் சொல்ல வேணும்
நானடி ஏன் போவதற்கு
ஏது கருமங்களெனக் கேட்டான்

## காந்தாரி பாண்டவரை அழைத்தல்

உங்களுட நல்ல பெரியம்மை தான்
உறுதியுடன் உங்களைக் காணாமல்
கண்கள் மெத்த கொதிக்கு தென்றும்
1130 கமல திருமுகம் வாடு தென்றும்

அதிய விருந்துண்ண ஐபேரையும்
அழைத்தோடி வாடா ஓட்டா என்றாள்

## ஓட்டன் பஞ்சவரை அடைதல்

அந்த மொழி கேட்ட ஓட்டனும் தான்
அன்புடனே கச்சை கெட்டி
வடிவாளை தோளில் வைத்தான்
அச்சப்படா தொங்கல் வழியோடி
அங்கு வள நாடுதனை கண்டார் தான்
பையென்பள்ளி பால மிட்டு
1140 பச்சையாத்தன் கரை கடந்தான்
தெய்வ பாண்டியன் கோட்டை விட்டு
சிறந்த சித்திரமனை கடந்து
குருக்க சித்திரம் பாவை நாடு
கூண்ட குத்தால பதி கடந்தான்
சீரும் குருகுல படை வீட்டில்
சென்றானே அந்த தூதுவனும்
சென்றயந்த தூதுவனை
திருக்கண்ணிலும் பாராமலிருந்தார்
ஏரான கிளர முள்ள

## பஞ்சவர் இருந்த நிலை

1150 எழுதிய சிம்மாசன மேடையிலே
வட்டாஞ்சி பொருதிருப்பார்
வாய்ப்படைகள் பொருதிருப்பார்
பிரிந்து வரும் பரித்திரளில்
பாயப் படித்ததோர் செம்மரியை
பாய் பலகை வைத்து
வகைப்படியிட்டு பாராட்டுவார்
சேவல் தன்னை கத்தி கெட்டி
சேவல் பாராட்டிடம் கொண்டிருப்பார்
வேண்டும் பரிசை சூது சொல்லி
1160 விருது ஞானிலே பொருதிடுவார்
கட்ட மண்ணிலே புரவி கெட்டி

கால் கட்டியதோர் சேவகர் தான்
சற்றே நேரம் சென்ற போது

## ஓட்டன் பஞ்சவரை அடைதல்

தாங்கள் திருமுன்னே ஓட்டன் சென்றான்
எங்கிருந்து வாறாய் நீ ஓட்டா
எங்களுக்குரை நீ என்று சொன்னார்
அச்சுதனே பச்சமாலே
அழகு மணி முடி தம்புரானே
வாளும் வளர் நாட்டு நின்றடி என்
1170 வாய்த்த விடை கொண்டு வந்தேன்
குரு நாட்டிலே நின்றடி என்
கூட்டி கொடு போக வந்தேன்
ஏது மொழி கருமமென்று
இன்னேரம் வந்தாய் நீ ஓட்டா

## ஓட்டன் பேசுதல்

கேளும் எந்தன் தம்புரானே
கிருபையுடன் வந்த கருமம் எல்லாம்
மிஞ்சும் புகழும்மை காந்தாரி
மிக்க புகழெய்வர் செய்தி எல்லாம்
அய்வருட முன்பில் வந்து
1180 அமுதுண்ண நீங்கள் வரவேண்டும் என்றாள்
என்ற மொழி தன்னை விட்டு
ஏது சொல்வான் ஓட்டனவன்
ஏதேது பாதையாக
வருவீர்கள் பஞ்சவர்கள்
என்ற மொழி கேட்ட போது

## பாண்டவரின் பதில்

சொல்வாரே பஞ்சவர்கள்
பச்சயாற்றன் கரை வழியாக
பஞ்சவர்கள் வருவோம்
இன்றைக்கு மூன்றாம் நாள்

1190 ஏற்றவளர் நாட்டிலே வருவோம்
என்ற பஞ்சவரை கைதொழுது

## ஓட்டன் திரும்புதல்

பாவினையாய் ஓட்டவன் காத்தோடும் தூரமெல்லாம்
காவலவன் ஓடுவானாம் அச்சபடா தொங்கல் வழி யோடி
அங்கு வளர் நாட்டிலே சொல்லுவானாம் போன கருமம் ஏதனவே
புதுமை உரையாட ஓட்டா நீ அடியேன் போன கரும மெல்லாம்
ஐபேரும் உரைத்தே நான்; நான் சொன்ன கருமமெல்லாம்
முகியுமோ தூதுவனே குரநாடு தன்னை எல்லாம்
கூட ஒரு குடைக்குள் ஆளலாமே என்ற மொழி கேட்டவுடன்
ஏதுரைப்பாள் காந்தாரி அந்நேரம் காந்தாரி

## காந்தாரி விஷம் சேகரித்தல்

1200 ஆளு விட்டாளே மருந்துகளுக்கு மூற்கண் பாம்பு நஞ்சதிலே
முன்னாழி நஞ்சி வரட்டெனவே நல்ல பாம்பு நஞ்சி விஷம்
நானாழி கூட வரட்டினவே இயல் காந்த பொடி மருந்தை
இப்போது கொடுவாரு மென்றாள் கடுவாய் நாக்கு நஞ்சி விசம்
கடுக கொடுவரட்டென்று பஞ்சபாண்டவர்க்குச் செய்யு மந்த
பார கரும்தொழிலை எல்லாம் வாய்ந்த கரும்தொழிலை எல்லாம்
மாயன் அருளாலே கண்டிருக்க வாசமெற்றக் கோவில்கல்லில்
வாங்கி கோடு போங்கே நூற்றுவரும் சொல்லி யரை நாழிகைக்குள்
செப்பமுடனரசர் வீற்றிருந்தார் காந்தாரி செய்தி அறிந்தாளே

## குந்தியின் மகிழ்ச்சி

ஆயிழையாளம்மை குந்தாதேவி
1210 எங்களுட நல்ல பெரியம்மை தான்
எங்களைக் காணவும் சிந்தையுற்று
கண்கள் மெத்த கொதிக்குதென்றும்
கமல திருமுகம் வாடுதென்றும்
அதிய விருந்துண்ண யமுதுகளும்
ஐபேர்க்கும் அங்கே சமைக்கவல்லோ
உரியவிருந்துக ளுண்ணவல்லோ
எங்களையும் அழைக்கவந்தான்
அந்தவார்த்தை கேட்டபோது

அஞ்சிமணி முடிபஞ்சவர்கள்
1220 அத்தனையும் கேட்கவல்லோ
அன்னை திருமனதை சோதித்தோம்
இன்றைக்கு மூன்றாம் நாள்
யேகும் பாடி நாங்கள் வாறேம் என்றார்
யேதுவழியாக நீங்கள்
யேது வழியாய் வாறோம் என்றும்
பச்சை யாற்றன் கரைவழியாய்
பச்சையாற்ற பரிவினுடன் நாங்கள்
வாறோம் யென்றோம் அந்த
வார்த்தையை கேட்டு ஒட்டனவன்
1230 அகமகிழ்ந் தெழுந்து நின்று
காத்தோடும் தூரம் எல்லாம்
கடுகவங்கே ஓடவானும் ஓடிஓடி
வழி நடந்து உற்றவள்
நாடுதன்னில் சென்றான் யெந்தனுட
வீமராசன் இன்றுவளர்
ஒட்டன் வந்த செய்தியெல்லாம்
உண்மையுடன் கேளுமம்மா
கிருபையுடன் கருமம் எல்லாம்
எங்களுட பெரியம்மைதான்

## குந்தி மறுத்துக் கூறல்

1240 எங்களையும் காணாமல்
கமலத்திருமுகம் வாடுதொறும்
அதிய விருந்துகள் அமுதுதர
அய்பேரையிங்கே அழைக்க வந்தேன்
அந்த மொழி தன்னை கேட்டபோது
அம்மை தாயாரும் திருவிளமாய்
சின்னவனே போகவேண்டாம்
அருச்சுனனும் வீமனுமாய்
ஆதிதொட்டிலில் உறங்கையிலே
பெரியம்மையுட செய்தியெல்லாம்
1250 பிரியமுடன் கேளு தர்மராஜா
பாலகனாய் நீங்கள் இருக்கையிலே

பார்க்கவந்தாளே காந்தாரி
அன்று வீமனும் தொட்டிலிலே
அருமையுடன் உறங்கையிலே
மிண்டக நெல்லெடுத்து
தொண்டை தனில் போட்டாள்
அழுதகுரல் கேட்டு ஓடிவந்து
அன்று பாலமுதூட்டும் நேரம்
முகம் சீறி கண் முழித்திருக்க
1260 தோழியர்கள் ஓடிவந்து
தொண்டையில் கையிட்டபோது
ஏழு மிண்டான நெல்லுதன்னை
எடுத்துவந்தார் தோழியர்கள்
அந்த நெல்லை கண்டபோது
ஆயிழை காந்தாரி சொல்வாளே
சொல்லைக் கேளாய் சோலைக்கிளி
தொடர்ந்து நெல்லைக் கொறிக்கயிலே
தொண்டையிலே விழுங்குதல்லோ
தங்கையரே என்றழுதாள்

## விருந்துண்ண வேண்டாம் எனல்

1270 அந்தமொழிசொல்லியவள்
அன்றுமுதல் பகையல்லவோ
பெரியம்மை மக்கள் நமக்கு
பெருவரப்பில் பாலியல்லோ
சித்தம்மை மக்கள் வீரம் நமக்கு
தெருத்தலையில் பல்லியல்லோ
வேண்டும் கருவூலம் தருகிலுமோ
விருந்துண்ண போகவேண்டாமே
அவர்களும் தானங்கிருப்பார்
அதினாலே குறைகளுண்டே
1280 வினைகள் மெத்த நினைத்திடுவாள்
விருந்துண்ண போக வேண்டாமே
அந்த மொழிதன்னை கேட்டபோது
அய்பேரும் தங்களில் கூடிநின்று
தர்க்கமிட்டு மன்னவர் பேசினரே

சம்சாரித்துவரும் நேரம் தன்னில்
பஞ்சவர்க்கு உதவியாக

## நாராயணர் வருதல் (வேறுநடை)

பாரளந்தமாயவனார் தக்க புகழ் நாராயணர்
தடியும் ஒரு குடையுமாக தள்ளாடும் கிழவரைப்போல்
தடியும் ஒரு குடையும் திருத்தடிபிரம்புமாக
1290 திருமார்பில் பூணு நூலும் தெண்டு நல்லது மண்டலமும்
திருகோவில் போன்று கொஞ்சும் நல்ல சடையுமாக
குஞ்சரம் போல் முகமும் நல்ல திருமுடியுமாக
நந்தியுடவடிவுமாக பஞ்சி போல் தலைவெளுத்து
பல்விழுந்த கிழவரைப் போல் நாதனுட திருவருளால்
நாராயணர் வந்து தோன்றி தோணுமந்த அச்சுதனார்
குருநாட்டு கோவில்கல்லில் வந்து நின்ற அச்சுதனார்
மன்னவர்கள் அடிதொழு அடிதொழு மன்னவர்முகம் நோக்கி
அவரேது சொல்வாராம் விருந்துண்ண போவதர்க்கு
விதனமுண்டோ உங்களுக்கு அந்தவார்த்தை கேட்டபோது
1300 அகமகிழ்ந்தார்கள் பஞ்சவர்கள் நாராயணர் வந்து நின்றதினால்
நமக்கு ஒரு தீங்குமில்லை கொல்லக் கொடுப்பாரோ நாராயணர்

## நாராயணரின் பதில்

அந்த வார்த்தையை கேட்டபோது
ஆதி நாராயணரும் சொல்வார்
வெற்றியுடன் சென்றுமுதுண்டு
விரைய குருநாட்டில் யெழுந்தருளும்
அந்தமொழி தன்னை கேட்டபோது
அதிய நீராளி கேட்டதிலே

## பஞ்சவர் புறப்படுதல்

பஞ்சவர்கள் எழுந்தருளி
பலவுடனே நீராட்டி
1310 குறித்து நன்றாய் குறியுமிட்டு
குங்குமத்தால் பொட்டுமிட்டு
துட்டராசன் கெட்டும் கெட்டி
சூரியன் போல் பொட்டு மிட்டு

வட்டபொட்டாம் திருமுகமாம்
வளர்கன்னத்தின்மேல் வீசையாம்
அமுதேற்றும் மண்டபத்தில்
ஐபேரும் யெழுந்தருளி
அமுதேற்று தான் பொலிந்து
அடக்காய் வெற்றிலையருந்தி
1320 இலையமுதுதான் பொலிந்து
ஏகாந்த சுகந்தமானார்
ஏகாந்த சுகந்தமாகி
ராசாதிராசர் ஐபேரும்
அரிய விருந்துண்ண போவதற்கு
அவர்கள் தா[illegible]கே விடை கொடுத்தார்

## பஞ்சவர் அணிகள் அணிதல்

கல்லறயை தான் திறந்து
கடுக பணி எடுப்பாராம்
முன்கைவளை யெடுத்தணிந்தார்
ஏழுவிதமாய் முன்கைவளை
1330 கிளர்ந்த விரலாளியிட்டார்
திருக்காதில் கடுக்கனிட்டார்
திசங்கவளை எடுத்தணிந்தார்
எழுத்தரிய பொன்னரைஞ்ஞாண்
இணங்கும் படி எடுத்தணிந்தார்

## பஞ்சவர் ஆயுதம் தரித்தல்

மூத்த தொரு தர்மராசன்
முன்சங்கு சக்கிரவாளெடுத்தார்
பிலத்துடைய வீமராசன்
பிரியமுடன் மனம் மகிழ்ந்து
ஏழானை எடுக்க ஒண்ணா
1340 இரும்புதெண்டாயுதம் எடுத்தார்
தெண்டாயுத மெடுத்து
திருத்தோளில் தரித்துக் கொண்டார்
ஆணழகன் விசயனுமோ
அஸ்திரங்கள் [illegible]ானெடுத்தார்

பரி நகுலன் சகாதேவன்
பார் பரிசையும் உடவாளும்
அஞ்சி மணி முடிபஞ்சவரும்
ஆயுதமும் தான் எடுத்தார்
அரிய விருந்துண்ண போவதர்க்கு
1350 ஐபேரும்விடை கேக்குறாராம்

## பஞ்சவர் விடை பெறுதல்

நாடளந்த அச்சுதரை
நமஸ்கரித்து தான் தொழுதார்
ஆக்கமுடன் பெற்ற தாயாரையும்
அடிதொழுது கைதொழுதார்
உதிக்கும் ஆதித்தன் ஒளிர்வதுபோல்
ஒளிவதாய் யெங்கும் இலங்கிடவே
அமுதுண்ண போவதர்க்கு
அதில் மூப்பாளுவேணுமென்றார்
விருந்துண்டிங்[illegible]வருமளவும்
1360 வீமனுக்கேற்ற [illegible]மென்றார்
மூப்பு வயதுக்கு நீங்கள் மூப்பு
தம்பிக்கொற்ற கருமமென்று
தரும திருவிளம் பற்றுவாராம்
உமையாள் பார்பதி திருநடைக்கே
உற்ற பஞ்சவர்கள் எழுந்தருள
நம்பியானை வரவழைத்து
நல்ல கதவையும் திறந்து
கைநிறைய பொன்னைவாரியிட்டு

## பஞ்சவர் காணிக்கை கொடுத்தல்

கணபதியை கை குவித்தார்
1370 மன்னன் காணிக்கை போடுவாராம்
கைதொழுவார்கள் நின்று
உமையாள் பார்பதி திரு நடையில்
ஒத்து சத்தியஞ் செய்தனராம்
சத்தியமும் செய்தல்லவோ
தக்க திருநடைவிட்டெழுந்தருளி

## பச்சையாறு பாலம்

பச்சை யாத்தன் கரைவழியே
பஞ்சபாண்டவர் செல்லும் நேரம்
ஒருநாளும் காண ஒண்ணா
உற்றகால் சிவடு மண்ணிளகி
கால்சுவடு கண்டிடத்தே
1380 கழகாணுதல்லோ அவ்வழிக்கே
மலங்காதே அண்ணன் மாரே
வாயமுண்டு என்கையிலே
அண்ணன்மார்கள் நால்பேரையும்
அவர் இருபிறமாய் நீக்கிவிட்டார்

## வீமன் பாலத்தைக் கடத்தல்

நீக்கிவிட்டுயெட்டிபார்க்க
நிக்குதல்லோ கழுவு அஞ்சி
ஊன்றுவாராம் தெண்டாயுதத்தை
தெண்டாயுதம் முழக்கம் கேட்டு
தெறித்து முறிப்பாலம் நகண்டு விழ
1390 அகமகிழ்ந்து கொண்டாடி
அக்கரைக்கே வீமன்தாண்டி
அண்ணரும் தம்பிமாரும்
அந்தவழிவர மாட்டாமல்
மனம்பதறி நிக்கும் நேரம்
வாசம் புகழ் பெற்ற வீமராசன்
தெண்டாயுதம் குறுக்கே வைத்து
சிறப்பாய் நால்பேரையும் கடத்திவிட்டார்

## பொறிகள் தடுத்தல்

அந்தபாலம் தனைக் கடந்து
அவர் பத்தடிக்கு முன்னேசெல்ல
1400 கல்பொறியும் வில்பொறியும்
கலந்து பொறி கடும்பொறியும்
மலங்காதே அண்ணன்மாரே
உபாயமுண்டு என்கையிலே

அண்ணன்மார்கள் நால்பேரையும்
அன்பாய் வீமன் பிறகேவிட்டு
எடுத்து தெண்டாயுதத்தாலே
இவர் தட்டி விட்டார் வில்பொறியை
கல்பொறியும் வில்பொறியும்
கைமேலே சிதறிடவே
1410 அந்தஉபாயம் தனையளித்து
ஆணி மண்டபத்தில் செல்லும் நேரம்
மண்டபத்தில் சித்திரங்கள்
கண்டீரோ அண்ணன் மாரே

## மந்திரவாளைத் தட்டுதல்

வைத்த நல்ல உபாயமெல்லாம்
வகையாலளித்தோமே அண்ணன் மாரே
வாளாலே குலைகள்பட்டு
மடிந்து விடுவோமெனவே
தங்களிலே மனம் சடைத்து
தாங்கள் நிக்கும் வேளையிலே
1420 தெண்டாயுதம் தனை யெடுத்து
சிறந்த மந்திரவாளை தட்டிவிட்டார்
பூமிபாதாளம் கொண்டேறி
பொடிபொடியாய் நொடிந்திடுமாம்
அந்த உபாயம் தனையளித்து
அகத்தே தொட்டிவாசல் விட்டு
அன்பாக செல்லும் நேரம்
இடத்தே தொட்டிதனை கடந்து
ஏவல் தொட்டி வாசல்விட்டார்
ஏவல் தொட்டி வாசல்விட்டு
1430 இன்பமுடன் மன்னவரும்
முத்தாவெளியிலே வாறநேரம்
முழங்குதல்லோ சாளுவனும்

## நாயை விரட்டுதல்

சாளுவனென்ற நாயினுட
சங்கிலியை பொறிகள் தட்டி

ஈத்துப்புலி தனைப்போலே
எழும்பியது முன்னேவர
இதமுடையபோர் வீமனுமே
இயல்பனையை தான் பிடுங்கி
சாளுவனுடவாய்தனிலே
1440 தக்கப்பனையது கொடுக்கும் நேரம்
நாயும் பனையுமாக
நாலாறு கண்டமிட
கண்டிரோ அண்ணன் மாரே
கடி நாயினுட் சோட்டமெல்லாம்
அந்த உபாயம் தனையளித்து

## விபத்து

அழகு மண்டபத்தில் செல்லும்நேரம்
மண்டபத்தில் சித்திரங்கள்
கண்டீரோ அண்ணன்மாரே
மண்டபத்தில் செல்லும் நேரம்
1450 மனம் மகிழ்ந்தாள் காந்தாரி
ஏகாந்தபொடி மருந்தை
எடுத்து நல்லா மிகவணிந்து
கெட்டி நன்றாய் மிகத் தழுவ
கிளிமொழியாளெழுந்திருந்து
எழுந்தருளிவரும் நேரம்
இன்பமுடன் பஞ்சவர்கள்
கண்டிருந்து காந்தாரி
கருதியவள் மனசிலுன்னி
கண்ணு ரண்டும் கொதிக்குதல்லோ
1460 கமலத்திருமுகம் வாடுதல்லோ
என்று சொல்லி காந்தாரி
எழுந்தருளி சொல்லும் நேரம்
அன்று அந்த வீமராசன்
அறிந்தேது வார்த்தை சொல்வார்
கேளும் அம்மை மாதாவே
கீர்த்தியான விசளமெல்லாம்

குருகுலத்து படைவீட்டில்
கூண்ட முறைகேளும் தாயாரே
பதினாறு வயது சென்றால்
1470 பாலகரை தாய் தொடுவதில்லை
பாலகரை தாய் தொட்டதுண்டால்
பாரோர்கள் நகைப்பாராம்
அசலிலுள்ளோர் கண்டு நிக்க
அம்மை மக்களை தொடவேண்டாம்
யென்று அந்த வீமராசன்
இசம்புவாரிம்மொழிகள்
அப்படியே வீமராசன்
அன்னாட்டு வளமையெல்லாம்

## இரும்புத் தூணுடைத்தல்

இப்படியே வீமராசன்
1480 இசம்பிடவே மனது கெட்டு
அந்த வார்த்தை கேட்டபோது
அம்மையவள் காந்தாரி
கட்டித்தழுகவே செல்லும் நேரம்
கல்லுதூணேடே சாய்ந்து கொண்டாள்
இரும்பு தூணோடே பதுங்கி கொண்டு
இன்பத்தோருடன் வீமனங்கு நின்றான்
வீமனென்று காந்தாரி
மிக்க கல்லுத் தான் தழுவ
இரும்பு தூணானதெல்லாம்
இருமறியாய் பொடிபடவே
கண்டிரோ அண்ணன் மாரே
1490 காந்தாரி செய்த உபாயமெல்லாம்
இரும்புத்தூண் பட்ட பாடுகண்டீர்
ஏற்றத்திரு மேனி யேதுபடும்
இன்னும் என்ன உபாயமுண்டோ
யேற்றவளர் நாட்டு கோவில் கல்லில்
கோவில்கல் முத்தா வெளிதனிலே
கொலுகு சிம்மாசன மண்டபத்தில்

## வெள்ளித் தடுக்கு விபத்து

ஏற்றவெள்ளித் தடுக்கஞ்சி கண்டார்
தடுக்கதிலே இருக்கவல்லோ
சற்றேநேரம் பொறுமேயென்றார்
1500 வெள்ளித்தடுக்கதின் கீழே
விரைய நாராயம் ஊன்றியல்லோ
மன்னவர்கள் வந்திருக்கும் நேரம்
வாய்த்த நாராயம் கொண்டேறி
வெள்ளித்தடுக்கின் மீதிருக்க
விரைய மன்னவர் செல்லும் நேரம்
மூத்தாக்கால்வசமில்லையே
முடி வேந்தர் அண்ணன்மாரே
இட மறியா அண்ணரே நீர்
எடுத்து தட்டி இருமை என்ன
1510 அந்த வார்த்தை கேட்ட போது
அவரும் தடுக்கை எடுத்து கொண்டார்
எடுத்த போதே தடுக்கின் கீழே
நாராய முனையை கண்டார்

## ஒரே தடுக்கில் அமருதல்

நன்று பெரியம்மையுட உபாய மெல்லாம்
நாராயணர் அருளால் பிழைத்து கொண்டோம்
தாரத்துடன் நன்றாய் தடுக்கு தட்டி
தாங்கள் கடக்க போட்டு விட்டார்
ஒரு தாய் பெற்ற மக்கள் நாங்கள்
ஒரு தடுக்கிலிருப்போ மென்றார்
1520 ஒரு தடுக்கில் இருப்போ மென்று
உற்றவர்கள் வீற்றிருந்தார்

## குந்தி அன்னமிடுதல்

மின்னும் புகழம்மை காந்தாரி
மேவி திருஉள்ளம் பற்றுவாளாம்
எந்தன் குந்தாதேவி மக்களுக்கு
ஏற்ற பசித் தாபம் மெத்த உண்டே

பசித் தாபம் மெத்த உண்டு
பரிவினுடன் வந்த பஞ்சவர்க்கு
இப்போ அன்னமிட வேணுமென்று

## எண்ணெயில் விஷம் கலத்தல்

எண்ணை காப்பு கொடுவா என்றார்
1530 ஏந்திழையாள் காந்தாரி
இன்பமுடன் சொன்னபோது
அப்பொழுது தேவிமார்கள்
அகமகிழ்ந்து அவர் ஏது சொல்வார்
பச்ச எண்ணை வேணுமோ தான்
காய்ந்த எண்ணை வேணுமோதான்
காய்ந்த எண்ணை வருகிலுமோ
கண்ணுக்கு மெத்த குளிமையல்லோ
பச்சஎண்ணை தந்ததுண்டால்
பஞ்சவர்க்கு ஆகாது
1540 அந்த வார்த்தை கேட்ட போது
அகமகிழ்ந்தாளே காந்தாரி
எடுத்தாளே கைக்கிடாரம்
ஏற்ற முத்தா வெளிதனிலே
மூன்று கல்லை தான் எடுத்து
முத்தா வெளியில் அண்டை கூட்டி
ஏற வைத்தாள் கிடாரமது
ஏற்ற புகழ் தேவி மார்கள்
எண்ணையது காய்க்கவென்று
ஏந்திழைமார் மனமகிழ்ந்து
1550 பாம்பு நெய் ஆழாக்கு
பாசாணம் நாவுரியும்
பாங்குடனே தான் கலந்தாள்
பச்ச நாவி ஆழாக்கு
கடுவா நாக்கும் பொடித்து
கடுகயவர் கூட இட்டு
முன்னாழி எண்ணையிலே
மூன்று நஞ்சி தான் கலந்து

கிடாரத்திலே எண்ணையிட்டு
காயுதல்லோ எண்ணையது
1560 கொப்புளித்து எண்ணையது
குமளியுட்டு காயுதல்லோ
கண்டீரோ அண்ணன்மாரே
எண்ணை காயும் புதுமை எல்லாம்
வெள்ளி நல்ல கிண்ணியிலே
விரய வங்கே கொண்டு வந்தார்
எங்கிருந்த எண்ணை காப்பு
இப்போ சாற்றுவோம் அண்ணன் மாரே

## பூதங்களின் சோலை

சீதேவி தோட்டத்திலே
சிறந்த பூங்காவனச் சோலையிலே
1570 பூங்காவனச் சோலையிலே
பூதம் ஏழு உண்டென்பாரே
ஏழுநல்ல பூதம் உண்டே
ஏற்ற பூங்காவனச் சோலையிலே
இன்று வாற பூதம் எல்லாம்
எண்ணையறியாத பூதம் உண்டோ
முன்னே வாற பூதத்துக்கு
முட்டு சங்கிலி போடுவேனான்
பின்னேவாற பூதத்துக்கு
பிற விலங்கு கைதனிலே
1580 கைதனிலே விலங்கு பூட்டி
கடுகவாற பூத மெல்லாம்
போக வேணும் அண்ணன்மாரே
பூங்காவனச் சோலையிலே
பூங்காவன சோலையிலே
போய் இருந்தார் பாண்டவர்கள்

## எண்ணையைச் சோதித்தல்

ஏண்ணை காப்பு சாற்றவல்லோ
இன்னும் சற்றே பொறுமெனவே
நாடளந்த அச்சுதனார்

நாட்டுக்கொரு முறை உண்டாக்கினார்
1590 வெள்ளுலக்கை வெள்ள முள்தம்
விரைய கஞ்சனுக்கு உண்மையல்லோ
மூன்று துள்ளி எண்ணை தன்னை
முந்தயவனுக்கு தெறித்தல்லவோ
பண்டை உள்ள முறைமை தன்னை
பஞ்சவர்கள் தள்ள வேண்டாம்
மூத்தார் தொட்டு தெறித்தாரல்லோ
நின்ற வான்பனையில்
வான்பனை ஓலை எல்லாம்
மடலோடே சாய்ந்து விழ
1600 இரண்டாம் துள்ளி தொட்டு தெறித்தார்
நாட்டமுடனவர் வாழையிலே
சிங்கன் வாழை இலைகள் எல்லாம்
தீயாக எரியுதல்லோ
மூணாமது தொட்டு தெறித்தாரல்லோ
முதுபூங்காவன சோலையிலே
பூங்காவன சோலை எல்லாம்
பூவுதிர்ந்து இலை கருகி
மிச்ச உள்ள எண்ணை எல்லாம்
மேவி தரைதனிலே ஊற்றுவாராம்

## பாண்டவர் குளிக்கச் செல்லல்

1610 எண்ணை தேய்த்தது போதும் போதும்
எழுந்திருங்கள் அண்ணரே நீர்
சுட்டித்தாளி தான் பறித்து
துங்க மணி முடி பஞ்சவர்கள்
தாளியரை புதனை சாற்றி
தந்திரமாய் கடவதிலே
கொற்றவர்கள் செல்லும் நேரம்
கடவதிலே நிறுத்தி இருந்து
கழுவ தெல்லாம் அறியாமல்
வீமராசன் மார்பளவில்
1620 மிக்க நல்ல கடவதிலே
நாராயணர் அருளாலே

நல்லதொரு தட்டானும்
சூழச் சூழ வருதல்லோ
சூட்ச முண்டு கடவதிலே
அந்த கடவதிலே
அதிய புகழ் தண்ணீரில்
தண்ணீரில் அஞ்சி தட்டான்
தானுமங்கே இருக்கக் கண்டான்
சூள சூள வருகுதல்லோ
1630 சூச்சமுண்டு கடவதிலே
தோச முண்டு கடவதிலே
ஆடுவது தட்டானுமல்ல

## பீமன் கழுவைப் பிடுங்குதல்

ஆதி நாராயணரல்லவோ
ஐபேர்களுக்கும் உதவி
நாராயணர் உதவியாகில்
நமக்கு ஒரு தீங்குமில்லை
கூட்டுக்கிளி போலே வளர்த்த நம்மை
கொல்லக் கொடுப்பாரோ நாராயணர்
நாமங்கறிய வீமராசன் சென்று
1640 நல்ல கழுவதை கண்டபோது
சிரித்து நன்றாய் கழுப்பிடுங்கி
தர்மர் முன்னே கொண்டு வைத்தார்
கொடு போவோம் அண்ணன்மாரே
கொடிய பெரியம்மை காணடென்
இந்த படியே கழுவதெல்லாம்
இதமாய் நாலு கடவிலும் உண்டே
வேற்றொருவர் ஆராகிலும்
வீணாய்க் கழுப்பட்டு போகாமல்
நலம் படவே கடவதெல்லாம்
1650 நாட்டுக் கழு வெல்லாம் தான் பிடுங்கி

## பாண்டவர் குளித்துப் புறப்படுதல்

நாட்டி நீராளி உபாய மெல்லாம்
நாமன் அளிக்கவே வேணுமென்று

புதுகடவு தனிலே நின்று
புகழுடன் பாசி தனை வலித்து
ஆன கழுவெல்லாம் வலித்து
அந்த அடவியிலே ஒதுக்குவாராம்
ஒரு தாய் பெற்ற மக்கள் நாங்கள்
ஓரிடத்தில் நின்று குளிக்க வேணும்
அப்பொழுது அஞ்சி பேரும்
1660 அடுக்கா நின்று குளித்தல்லவோ
குளித்து நன்றாய் குறியுமிட்டு
குங்குமத்தால் பொட்டு மிட்டு
துட்டராஜன் கெட்டுங் கெட்டி
சூரியன் போலே பொட்டு மிட்டு
வட்டபொட்டாம் திருமுகமும்
வாய் சந்திரன் போலழகாய்
அன்னம் போலோற்றருநடையும்
அழகு மணி முடி பஞ்சவர்கள்
பஞ்சவர்கள் அஞ்சி பேரும்
1670 பரிவினுடன் வந்தார் கோவில் கல்லில்
அமுதேறும் மண்டபத்தில்
ஐபேரும் எழுந்தருளி

## காந்தாரி பசி தீர்த்தல்

மின்னு புகழம்மை காந்தாரி
மங்கை திருவிளம் பற்றுவாளாம்
அதிய குருநாட்டு மக்களுக்கு
அன்பாய் பசி தீர்க்க வேணும் என்று
கடும் பசிகள் மெத்த உண்டு
கருதியமுது கொடுப்போ மென்றாள்
எந்த எந்த தளுகையிலே
ஏற்ற அமுது கொடுப்போம் என்றாள்
பண்டு பாண்டவர் உண்ணுமந்த
பாண னெற்ற தளுகையிலே
பாண்டுவன் என்ற தளுவை தன்னை
பாரில் ஒரு நாளும் எடுப்பதில்லை
அப்பொழுதே வீமராசன்

அவனெடுப்பேன் தளுகை என்றான்
என்ற மொழி கேட்டபோது
இன்பமுள்ள காந்தாரி
மாமனார் ஆண்ட காலத்திலே
1690 வரிசை புகழ் பெற்ற தளுகையது
பாண்டுவன் என்ற தளுகையிலே
படைத்துக் கொடுவாரும் அமுதை எல்லாம்
என்றப் பொழுதிலே தோழியர்கள்
எடுத்தார் பொன்னும் தளுகையது
கலமும் கொண்டு வைத்தார்
கருதி நன்றாய் தளுகையிலே
கடுவாய் நாக்கை தானுரைத்து
கலமும் அங்கே கொண்டு வைத்தாள்
அப்படி அஞ்சி கலமும் வைத்து
1700 அவரேது வார்த்தை சொல்வார்
இப்பொழுதே கலங்கள் அஞ்சும்

## ஐவரும் ஒரே கலத்தில் உண்ணுதல்

எடுக்க ஒண்ணாது காண்
அஞ்சு பேரும் ஒரு கலத்தில்
அமுது உண்போம் என உரைத்தார்
ஒருதாய் பெற்ற மக்கள் நாங்கள்
ஒரு கலத்தில் உண்போம் என்றார்
என்ற மொழி கேட்ட போது
ஏங்கி விட்டாள் காந்தாரி
முழுகாத தேவிமார்கள்
1710 முனிந்த முது விளம்ப வேணும்
எங்களுக்கு வைத்த தெல்லாம்
எத்தனை வகை கறிகள் உண்டு
நாலு பத்து இருபத்தொன்று கறி
நலம் பெறவே சமைத்ததுண்டு

## கறிகளை ஒன்றாகப் படைத்தல்

அந்த மொழிதனை கேட்ட போது
அழகு முடி மன்னர் அஞ்சி பேரும்

உண்டான கறிகள் எல்லாம்
ஒருக்காலே படையும் என்றார்
ஒருக்காலே படைப்பார் ஆகில்
1720 உள்ளது தான் சொல்லுகிறேன்
கறி மதுரம் அறிய ஒண்ணாது
காவலரே உங்களுக்கு
கறிமதுரம் அறிய ஒண்ணாதால்
கைமதுரம் அறிவேன் என்ன
எண்ண ஒண்ணா கறிகள் எல்லாம்
நான் அறிவேன் மாதாவே

## தயிர் கொடுத்தல்

வரிசை புகழ் பெற்ற பஞ்சவர்க்கு
வாய்த்த பால் தயிர் வேணும் என்றார்
நலமான பால் தயிர்தனிலே
1730 நஞ்சு விஷங்களை கலந்தாளே
வைத்த நல்ல தயிர் தனிலே
மாயவனார் அருளாலே

## தயிரில் முடி தெரிதல்

துண்டாக தலைமுடி தான்
தோன்றுதல்லோ தயிர் தனிலே
அப்பொழுது வீமராசன்
அவரேவ வார்த்தை சொல்வார்
அண்ணன்மாரே இருக்க வேணும்
அமுது தான் பொலிவதற்கு
தாமதமா நான் சொல்லுகிறேன்
1740 சற்றே நேரம் பொறுங்கோ வென்ன
அந்த மொழி கேட்ட மன்னவர்கள்
அகம் பதறி மனம் தளர்ந்து
மெய் தளர்ந்து இருக்கும் நேரம்
வீமராசன் அமுது தன்னை
உருட்டி நன்றாய் திரட்டியல்லோ
உற்ற சாளுவன் முன் போட்டார்

எனவே எந்தன் மக்கள் நீங்கள்
இந்த புத்தி சொன்னதாரு

## நாய்க்கு உணவு இடுதல்

கேளும் கேளும் எந்தன் தாயாரே
1750 கீர்த்தியான விசனம் எல்லாம்
தாய் பார்த்து இருந்தாலும்
நாய் பார்த்து இருக்கொண்ணாது
என்று சொல்லி வீமராசன்
திரட்டி விட்டார் சாளுவன் முன்
நீங்கள் அமுது உண்ணும் முன்னே
நின்ற நாய் முன்னே போட்டதென்ன
காந்தாரி கண்டு நிற்க
கன்னியர்கள் பார்த்து நிற்க
சோறுதின்ற சாளுவனும்
1760 சூழ சூழ வருகுதல்லோ
பன்னிரெண்டு வருஷம் உண்டு
பார நாய்க்கு பெரும் சுழலி
நாய் சுழலி பார்க்க வேண்டாம்
நன்றாய் பொசியும் அமுது தன்னை
சோறு தின்ற சாளுவனும்
தென் மடலாய் விழுந்து பட்டுதல்லோ
பட்டு சரிந்து சேர்ந்துதல்லோ
பார சாளுவன் என்ற நாயும்
நன்றாய் அமுதுண்ட புதுமை எல்லாம்
1770 நாயகரே கை விளக்கும் என்றார்
என்ற மொழி தன்னை கேட்ட போது

## நாய் இறந்தது

ஏந்திழையாள் காந்தாரி
நாய் செத்து கிடந்ததுண்டால்
நல் மக்களே ஏது குறை
தாய் செத்து கிடக்கிலுமோ
தாகனில்லை எங்களுக்கு
நாய் செத்து கிடந்த துணடால்

நாங்கள் அமுது உண்பதில்லை
கைவிளக்கு எடுத்திருந்தால்

## வெற்றிலை கொடுத்தல்

1780 காவலர்கள் அஞ்சி பேரும்
தட்டத்திலே வெற்றிலையும்
அடைக்காய் கொண்டு வைத்தார்
அடைக்காயும் சுண்ணாம்பும்
அன்பாக தான் எடுத்து
எரிதுளசி பொடி மருந்தை
இயல்பாக தான் தடவி
சுண்ணாம்பும் கற்பூரமும்
சூதானம் செய்து வைத்தார்
வேண்டியந்த வீமராசன்
1790 விரையாய் கீழ் மடியில் வைத்தார்
தன் மடியில் இருந்த தொரு
அடைக்காய் வெற்றிலையும்
அண்ணன்மார்க்கும் தான் கொடுத்து
அவரிலைய அமுது பொசித்தார்
இலையமுது தான் பொலிந்து
ஏகாந்த சுகந்த மானார்
ராஜஜீ ராஜாக்கார் ஐந்து பேரும்
குரு நாட்டில் போவதல்லால்
கொற்றவரே தங்க வேண்டாம்
1800 அகமெலிந்து உடனே ஏது சொல்வாள்
இன்றைக்கு அவதரித்து
நாளை காலைக்கு போகலாமே

## பாண்டவருக்கு படுக்கை தரல்

வட்டவணை தலைக்கணையும்
வாய்த்த பஞ்சி மெத்தை உண்டு
பஞ்சவர்ண மெத்தை உண்டு
பாராட்ட தேவி உண்டு
பூவிலும்பூ மெல்லியுண்டே
பூமாலை தேவி உண்டு

1810 அஞ்சி நல்ல தேவி மாரை
அலங்கரித்து தருவேன் என்றாள்
தோழிமாருட பாசங்கண்டு
சுகமாய் எழுந்தருளி போகும் என்றார்
அந்த வார்த்தை கேட்ட போது
அஞ்சி மணி முடி பாண்டவரும்
அத்தனையும் விட்டு விட்டு
ஐபேரே நீங்கள் போக வேண்டாம்
இன்றைக்கு அவதரித்து
எழுந்தருளி போகும் என்றாள்

## காந்தாரி தோழிகளிடம் வேண்டுதல்

1820 மின்னும் புகழம்மை காந்தாரி
விரைய திருவிளம் பற்றுவாளாம்
வாரும் எந்தன் தோழி பெண்ணே
வார்த்தை ஒன்று சொல்லக் கேளும்
வாய்த்த நல்ல உபாயம் எல்லாம்
வகையால் அழித்தானே வீமராசன்
உங்களுட உபாயத்திற்கு
உள்ள ஐவர் அகப்படுவார்
உறக்கத்திலே உருட்டி தட்டி
ஒன்று கொன்று தரலாமென்ன

## பெண்கள் ஐவரிடம் போக மறுத்தல்

1830 குருகுலத்து மன்னன் என்றும்
குந்தா தேவி பெற்ற மக்கள் என்றும்
நாராயணருட மருமகனல்லோ
நன்றியுள்ள பஞ்சவர்கள்
கட்டியங்கே அடிப்பாரே
கண்டால் சுணை கெடுப்பாரே
ஐவருட பக்கத்திலே
பெண்கள் நாங்கள் போவதில்லை
அரையுடைய இசலழகும்
ஆலம் இலை சாயலுற்ற
1840 அமந்த நல்ல வயறழகும்

## தோழியரின் அழகு

மஞ்சணைகளும் புனுகும்
வலத்தோளிலே தப்பும்
கொங்கை தனங்கள் ரெண்டும்
கொற்ற குலம்போல் அழகு கொஞ்ச
இந்து நுதல் பெண் கொடியாள்
இடையினுட இசலழகும்
காரைகள் பூணுமந்த
கழுத்தினுட இசலழகும்
நாகரும் வடிவழகும்
1850 நாடியுட இசலழகும்
அஞ்சி வர்ண கிளியினுட
அன்ன நடை ஒழுங்கழகும்
குமிழ் பழம் சாயலுற்ற
கருநாக பழமது போல்
கண்ணுருட்டும் மொழியழகும்
தேய் பிறை ஒளியழகும்
சிறந்த நெற்றி இசலழகும்
தென்னங் குலையது போல்
தேவி மாருட முடியழகும்

## பெண்களின் சூழ்ச்சி

1860 கழுத்தறுக்கும் கருவி தன்னை
கருதி கொண்டைக்குள் ஒழித்து வைத்தாள்
அணியும் பணிவகை அணிந்தல்லவோ
அழகன் வீமன் முன்பில் சென்றாள்
சொருகின குழலொடெற்றி
துடியிடை மார் வடிவாக
நடையோடு பணிந்து வளரும்
நாணயமான மடவார்கள்
அன்னநடை தேவியர்கள்
ஆசார கை வீச்சழகாம்
1870 அழகு வன்ன குயில் மடவாள்
அழகாய் அஞ்சி பேர் வரவே

பூங்கா வனமது தனிலே
பொற்கோழி நடையது போல்
ஆலமர நிழலதிலே
அன்னம் நடந்ததுபோல்
கண்டீரோ அண்ணன் மாரே
பெண்கள் வார புதுமை கண்டு
பேதலிக்க பட வேண்டாம்
சற்றே நேரம் பொறுத்திடுங்கோ
1880 தாகமுடன் உறுதி சொல்லுகிறேன்

## பூமாலையின் விரகதாபம்

என்ன, என்ன பூமாலை
இவ்வடிவு கொண்டதெல்லாம்
நேற்றும் உண்டோ இவ்விசனம்
நீங்கள் கேட்ட துண்டோ பூமாலை
தேரோட்டம் தானும் உண்டோ
தேவி திருநாள் நடப்பும் உண்டோ
உல்லாசம் மருக மச்சாவி
உம்மோடே மருக வந்தோம்
என்னோடே மருகிலுமோ
1890 இன்னும் ஒரு குறை நான் சொல்லுகிறேன்
என்ன ஒரு குறை சொல்லப் போறீர்
என்னுடைய மச்சாவி
சேலை குலைத்து வாடி
சிறு பருவட்டம் சாற்றி வாடி
சேலை குலைத்து வந்தால்
சேரும் பெண்களுக்கழகல்லவோ
உள்ள இடலழகும்
உனக்கும் எனக்கும் போதுமே தான்
தோராய காரரும் நீர்
1900 துன்பவிடை காரர் என்றாள்
தோராய் கோட்டி கொண்டால்
தோற்றுப் பேர்வேனோ மாளிகையில்
குருகுலத்து வீமன் என்றும்
குந்திரிதேவி மைந்தன் என்றும்

தோராய் காரர் என்றும்
சொல்லும் மொழி கேட்டிருப்பேன்
உம்முடைய அண்ணர் திரியோதினர்
ஒரு குற்றம் சொன்னதில்லை
மண்ணதிலே இருந்து கொண்டு
1910 மாறிப்பேசவும் நீதி உண்டோ
பெண்ணே குறை பறைவார்களோ
பேராசையுள்ள மன்னவர்கள்
சேலை குலைத்துடுத்து வந்தாள்
சிறிய பருவட்டம் சாற்றி வந்தாள்
இனி வாரும் மச்சாவி
என்னோமே மருகவல்லோ
கூந்தல் குலைத்து வாடி
கொடியிடையே பூமாலை
கூந்தல் குலைக்கச் சொன்ன போது
1920 கொடியிடையாள் மெய் தளர்ந்து
உலையிலிட்ட மெழுகது போல்
உருகி விட்டாள் பூமாலை
அலையில் இட்ட துரும்பானாள்
அம்புபட்ட மான் போலே
ஒருத்திக் கொருத்தி முகம் பார்த்து
உற்றவர்கள் ஏது சொல்வாள்
அப்பொழுதே சொன்னேன் நான்
அங்கவரும் காரியம் தான்
அச்சுதனார் கையில் நின்று
1930 அன்பக மனம் மகிழ்ந்து
பொன்னிட்ட கட்டிலை
பொற்புடனே அவர்கள் வாங்கி
கட்டிலும் கையும் ஆக
கருதி அவர் முடுகுவாராம்

## பூமாலையின் ஆயுதம் வெளிப்படல்

தயங்காதே பூமாலை
தக்க கூந்தலைக் குலையுமென்ன
சாற்று மெல்ல சரிந்து நின்று

தக்க கூந்தலை விழுந்து தல்லோ
குலைகள் செய்யும் கருவி யது
1940 கருவி விழுந்ததை அறியாமல்
காலைவைத்து மறைத்து கொண்டாள்
என்ன எந்தன் பூமாலை
காலை கொண்டு மறைத்ததென்ன
கேளும் எந்தன் மச்சாவி
கீர்த்தியான வார்த்தை எல்லாம்
நாட்டமுடன் பாதி இரவில்
நடுக்கூறு சாமத்திலே
பூந்தோட்டம் தன்னிலேதான்
பூமுடியே சென்றிடத்தில்
1950 பூவும் அந்த கருவியையும்
புனைந்து கொண்டேன் கூந்தலிலே
ஆரும் அறியாமல் புனைந்து விட்டேன்
அடியாள் நான் மச்சாவி
அறிவேன் அறிவேன் பூமாலை
ஆசார வார்த்தை எல்லாம்
உறக்கத்திலே உருட்டி தட்டி
உடனே கொல்ல வந்த செய்தி எல்லாம்
போதும் போதும் பூமாலை
பொறுதியுடன் வாரும் உபசரிக்க
1960 சற்றே பொறுக கெட்டு மண்டபத்தை
தக்க கூந்தலை வகுந்து கெட்டி
கல்லு தூணோடே வகுந்து கெட்டி
கடுக உபசரித்தார் பூமாலையை

## பூமாலையை அடித்தல்

உள்ளும் புறமும் பூமாலையை
ஒன்று ரெண்டு அடி அடித்தனரே
அடிகளது படும் நேரம்
அபயம் என்று புலம்பலுற்றாள்
கூட வந்த நாலுபேரும்
கொடி இடைமார் ஓடி விட்டாள்

1970 கழுத்தணிதான் உடன்தெறிக்க
கருதியவள் அடிகள் பட்டு
கண்டதுண்ட படையெனவே
கட்டி அங்கே அடித்தனராம்
உம்முடைய பெரியம்மைதான்
உற்ற பிழை செய்த தெல்லாம்
என்னை நீர் அடிக்க வேண்டாம்
எந்தன் குருகுலத்து வடிவழிக்க
மேடையிலே இருந்து அந்த
விஜயனுமோ தானிமகி
1980 ஆணையிட்டு கொண்டபோது

## பஞ்சவர் பூமாலையைக் கவர்ந்து செல்லல்

அன்றவரும் கெட்டவிழ்த்து
கல்தூணில் கெட்டவிழ்த்து
காந்தாரி முன்னே கொடு போற நேரம்
என்ன எந்தன் மக்களே நீர்
இன்று சிறை கொண்டு போறதென்ன
எங்களுக்கு தந்த பெண்ணை
இனி நாங்கள் விடுவதில்லை
திரியோதிரன் தான் அறிகில்
சிறந்த படை கொடுவருவான்
1990 என்றாலும் ஒருபோரு
போருதொழிய விடுவதில்லை
வாளும் வளர் நாடு தான் கடந்து
வட்டப்பாறை தன்னை விட்டார்
பச்சையாற்றன் கரை கடந்து
பாரரசன் எல்லை விட்டு
குருக்கள் சித்திர மடங்கடந்து

## பஞ்சவர் குருநாட்டுக்கு வருதல்

குருநாடடில் செல்லுவாராம்
பல சக்கர முடி மன்னன்
பார்வேந்தன் தேவியரே

2000 அரிய விருந்துண்ண அழைத்ததுவும்
ஐபேர் சிறை கொண்டு போனதுவும்
அரவக் கொடியோன் ஆண்ட
திரு தம்பிமார்களுடன்
நகரிழந்தாலும் பொறுப்பே நான்
நகரிழந்தாலும் பொறுப்பே நான்
தேவி மாரை இழந்து நானும்
சீர்மை தானில்லை இனி நமக்கு
தர்மர் தம்பிமாரை என்றுரைத்தால்

## துரியன் படை திரட்டல்

சேனை குதிரை படையோடே
2010 சென்று பார்த்திடுவோம் தம்பிமாரே
திவட்டுக்காரன் திரியோதிரன்
தேரும்பரிகரி தனைதிலித்தான்
படைகள் திலித்த தோர்விசளமெல்லாம்
பண்பாய் அறிந்தாளே காந்தாரி
காந்தாரி தானறிந்து
கருமமுற்று ஒருவார்த்தை சொல்வாள்

## காந்தாரி தடுத்தல்

வேந்தனே உந்தன்பெரும் படையை
விறுதே கொண்டு களையவேண்டாம்
கல்லல்லவோ வீமராசன்
2020 காகமல்லோ நூறு பேரும்
கல்லெடுக்க காகம் பறந்தால் போல்
கருதி ஒளிப்பீரே நூறு போக
புத்திதனை யென்று சொல்லக் கேளாய்
மாத்தானைவெல்ல ஒரு

## வீமனுக்கு பால் குடம் கட்டச் சொல்லல்

உபாயமுண்டு இனி நமக்கு
ஆனைப்பிலக்காரன் வீமனுக்கு
அறுதிபால் குடம் கட்டவேணும்
நம்முடைய அடியானல்லோ

நாகத்துட னொற்ற தவக்குறவன்
2030 தென்காஞ்சி மேன்மலையில்
தீரன் திருவஞ்சி தவக்குறவன்
ஐவருட அடிமை யல்லோ
அவனுடைய தவக்குறத்தி
தவக்குறத்தி அறியாமல்

## ஓட்டனை வரவழைத்தல்

தக்கரகசியங்கள் பேச வேணும் என்று
ஒட்டனைத் தான் வரவழைத்தும்
தக்க கருமங்கள் சொல்லுவாராம்
அஞ்சித்தலையுள்ள ஆடரவம்
அறுதி பால்குடம் கட்ட வேணுமாம்
மிஞ்சும் புகழ்மை காந்தாரி
2040 விரையவங்கேஓட்டனிடம் வாழ்த்தி
செப்புக்குடத்தையும் கையில்கொடுத்து
சிறப்புடனே விடை கொடுத்தார்
கடுகி ஒட்டன் வழி நடந்து
கனத்ததன்கூரை உள் புகுந்தான்
தன் கூரை உள்புகுந்து
தானவனும் பசியாறி

## ஓட்டன் புறப்படல்

கச்சைகெட்டி எண்ணையிட்டு
கடுக உடைவாளை தோளில்வைத்தான்
அச்சப்பட தொங்கல்வழி நடந்து
2050 அன்று வளநாடு அவன் கடந்தான்

## ஓட்டன் வழி நடத்தல்

பச்சை யாத்தன் கரைகடந்து
பாரசமுத்திரவழி கடந்து
குருக்க சித்திர வழிகடந்து
கூண்டமலையடி வாரம் வந்தான்
பச்சமலை பவளமலை பாறமலை
எறும்புகள் நுழைய நுழைய ஒண்ணா

என்ணிருஞ்சிமலை கடந்தான்
பிராந்துகள் பறக்க ஒண்ணா
பாரமலையடவி விட்டான்
2060 நாகங்கள் வாழுமந்த
நல்லமலை சோலை விட்டான்
பூ மருவும் சோலை விட்டு
பூங்காவனம் தான் கடந்து
தென் காஞ்சிமலை மேலே
சென்றவனும் தோணுவானாம்
வனங்கள் கண்டபோதிலேதான்
மலை மிருகம் நம்மை தின்றிடுமே
என்று ஒட்டன் மனதிலெண்ணி

## ஓட்டன் குறவனைக் காணுதல்

தவக்குறவா தவக்குறவா
2070 யென்று ஒன்று ரண்டு சத்தமிட்டான்
கூப்பிட்ட சத்தம் தான் கேட்டு
விரைந்தவனோடி வெளியில் வந்தான்
ஒளித்து வனத்திலே நானிருக்க
ஒருவர் தானிங்கே விளித்தாரோ
சித்தம் புகழ் நல்ல சுரிகையுமாய்
திட்டனவே ஓடிவெளியில் வந்தான்
கற்றவித்தை யுள்ளவனே
கண்டு வித்தையுள்ளவனே
கண்டு மகிழ்ந்தானே ஒட்டனும்தான்
2080 நீர்தானிங்கே வந்ததென்ன
நினைத்த கருமங்கள் சொல்லுமென்றார்
ஆருடைய ஒட்டனென்று
அறிவுரை சொல்வாய்யென மொழிந்தான்

## ஓட்டன் தன்னை அறிமுகப்படுத்த

பாருலகையாண்டிருக்கும்
பலசக்கர முடையமன்னன்
திரியோதிரன் தம்புரனார்
செய்தியுள்ள ஒட்டனென்றார்

அவருடைய அடிமையல்லா
பாராண்டவருட அடிமையலோ

## ஓட்டன் குறவனிடம் செய்தி கூறல்

2090 பார்புகழும் நல்ல தவக்குறத்தி
தவக்குறத்தியறியாமல்
தக்கக்கருமங்கள் பேசவேணும்
அஞ்சி தலையுள்ள ஆடரவம்
அரிய பால் குடம் கட்டவேணும்
விரையகொடுவர் வேணுமென்றான்
வையத்தார் பதினெட்டு உபாயமெல்லாம்
வகையாலளித்தானே வீமராசன்
அதியவிருந்துண்ண அழைத்ததுவும்
அம்மணி முடிதம்புரானே
2100 தேவிமாரை சிறை கொடுபோனதக்கு
தீங்குதனையங்கே கெட்டி விட்டார்
அந்தவார்த்தை கேட்டபோது

## குறவன் புறப்படுதல்

தவக்குறவனும் கூரைக்குள்ளே
தன் கூரைக்குள் தான்புகுந்தான்
தாகமெல்லாம் தான்தீர்த்து
பாலும் பழம் பஞ்சா சர்க்கரையும்
பஞ்சமிர்தம் தானெடுத்தான்
நாகமது பிடிக்கவென்று
நாகமலை மீதில்வந்தான்

## குறவன் குழல் ஊதுதல்

2110 அஞ்சிதலையுள்ள ஆடரவம்
வாழுகின்ற மரமூட்டில்
வந்தானே தவக்குறவன்
சீங்குழலை தானெடுத்து
சிலராகம் வாசிப்பானாம்
மரத்தினுட மேட்டில் நின்று
வந்து வெளியில் நின்று ஆடிடுமாம்

அஞ்சு தலையுள்ள நாகமது
ஆடும்புதுமைகள் கண்டபோது
தாராட்டி அருகழைத்து
2120 தன் கையால் பாலூட்டி
பாலும் பழம்பஞ்சாரை
பஞ்சாமுர்தம் தனையூட்டி

## பாம்பைப் பிடித்தல்

ஆடியலுத்து தலை சாய்த்து
அவனருகே ஒதுங்கிடுமாம்
வாழமலை தவக்குறவன்
உபாயமுடன் தலை பிடித்தான்
செப்புக்குடத்தில் அடைத்துவைத்து
சிமிழ்பூட்டு பூட்டி வைத்தான்
பூட்டி செப்புக்குடமெடுத்து
2130 பெரியமலை தான் கடந்தான்
உன்னுடன் நான் போறத்தாக்கால்
உறுதிசொல்லாய் ஒட்டாநீ
என்னுடன் நீர் வந்தாக்கால்
ஏது வருமோதிருமனது
உன்நினைத்ததோர் கருமமெல்லாம்
உடன்முகித்து தான் தருவேன்

## ஓட்டன் பால்குடம் எடுத்தல்

வன்னிமணிபாலூட்டி
வாங்கியே நான்வருவே னென்றான்
காண்டவன் சோலைவிட்டு
2140 கதலிவனங்கடந்து
பூண்டதொரு அடவிகளும்
புகழ்பெறவே தான் கடந்து
பால்குடத்தை கொண்டுவைத்து
பரிவினுடன் தொழுது நின்றான்
பால்குடத்தை கண்டபோது
பண்பாய் மகிழ்ந்தாள் காந்தாரி

## குறவன் பாம்பாட்டுதல்

அஞ்சிதலையுள்ள ஆடரவம்
ஆடும்புதுமைகள் காணவேணும்
காந்தாரிதானுரைக்க
2150 கடுகவஞ்சி தவக்குறவன்
வட்டசங்கிலிதான் கழற்றி
வெட்டாவெளியிலேயே ஏகலுற்றான்
கடிபடாமல் தவக்குறவன்
தாராட்டி நன்றாய் தானழைத்தான்
அஞ்சித்தலையுள்ள ஆடரவம்
ஆடும்புதுமைகள் கண்டபோது
ஆடும்புதுமை போதும் தவக்குறவா
அடையுமா குடமதிலே
நஞ்சுவிசம்கொண்ட நாகத்துக்கு
2160 நாலுதலை நின்று ஆடுவதும்
பங்கம் சொல்லியே பால்(ு ங்கள்
கெட்டிவிடவென்று தானினைத்து
ஏழு நாள் பட்டினியிட்டு நாகத்தை
ஏகி விட்டால் நன்றனவே
எட்டாம் நாள் வெள்ளிக் கிழமையிலே
பால்குடம் விடவேணும் குருநாட்டில்
அஞ்சிமணிமுடிபாண்டவர்கள்
ஐபேர்க்கும் அஞ்சிபால்குடந்தான்
நல்லதொரு சீனி நல்கிழங்கும்
2170 கூடநாலுபேர்க்கு வேணுமென்ன
வெல்லும்படியே தான் பால்குடங்கள்

## நாகம் விஷம் கக்குதல்

பற்றியாய நாகம் பரந்தபால்குடம்
கெட்டின பரமர்தம் ஏதனவே
ஏழு மணி இட்டநாகமதை
ஏகினார் நன்றல்லவோ
இப்படியே சமைத்து விட்டார்கள்
இன்பமுடன் பால்குடம் குருநாட்டில்

அஞ்சிதலை பிடிபடவே
அதிலே ஒருதலைசுற்றிக் கடித்திடவும்
2180 நஞ்சிவிசம்பட்டு சிவலோகம்
சேருவார்கள் பஞ்சவர்கள்

## காந்தாரி குறவர்க்குப் பரிசளித்தல்

அந்த மொழி கேட்டு காந்தாரி
தாயாரும்மனம் மகிழ்ந்தாள்
சிந்தைமகிழ்ந்து நல்லகுறவனுக்கு
திரவியம்தான் கொடுத்தாள்
பண்டுபோல் தவக்குறவன்
பழையவனம் புகுந்தான்
ஐபேர் பாண்டவர்க்கு பதிவானா
பால்குடம் கொட்டிட புதுமை எல்லாம்
2190 பாரறிய வசைகள் பேசி
பால்குடம்கெட்டுவாராம்

## வீமன் பேரில் பழி

குருகுலத்து வீமனென்றும்
குந்தா தேவிபெற்ற மைந்தனென்றும்
அரியவிருந்துண்ண அளித்தாரென்றும்
அண்ணன் மாருட தேவியாரை
சிறைகள் கொண்டு போனதர்க்கு
தீங்காகவங்கே கெட்டிவிட்டார்
தருமருக்கு நேரிளைய
தார் வேந்தன் போர்வீமன்
2200 வன்னமொத்த பால் குடத்தை
வாக்குடன் வீமன் அவிளாவிட்டால்
சொன்னதெல்லாம் சமுர்தமென்று
சுனாக்கேடாம் யென்று சொல்லி
வன்னதிரு நீட்டெழுதி
வாய்த்தபால் குடத்தில் சாற்றுவாராம்
பால்குடத்தில் சாற்றுவாராம்
பாவினையாய் திரியோதனனும்
தம்பிமார்கள் தான் மகிழ்ந்து

தாயாரும் தான்மகிழ்ந்து
2210 வாழும் வளர்நாட்டு திரியோதிரன்
வன்னபால்குடம் கெட்டி விட்டபோது
வளமையுடன் கெட்டின பால்குடம்தான்
வருகுதெனச்சொல்லி மாயவனார்
உலகை யளந்தவன் திருவருளால்

## பூமாலையின் கனவு

ஒருசொற்பனம் கண்டேனென்றாள்
முன்வாயில் முத்துதிறந்து
முந்தியிலே முடியக் கண்டேன்
மாங்கிலியம் இழை உருகி
மடிமேலே விளவும் கண்டேன்
2220 சுற்றுமாற மாளிகையில்
சூழவைத்ததோர் நீராவியும்
நீராவீ தடமிடிந்து
நிக்கக்கண்டேன் பார்த்தாலே
தாண்டும்பரி நிற்கும்
பந்தியிலே பந்தியிலே
தக்கநல்லபுரவியுட
தண்டை வெட்டிக் கொண்டு
போக்குகண்டேன் தலைத்தென் அடக்கால
தேனே புரவிபட்டுவிழுந்ததெல்லாம்
2230 புகழும் அரசர்க்கு தீங்கவல்லவோ
அலறிவிளக்கண்டேன் நான்
அண்டையிலே நின்றபிலா
வாசலிலே நின்றதொரு
வான்பனையும் யிருகூறாய்
மோகமதுவந்தல்லவே
முறிந்துவிளக்கண்டேன்நான்
வாழும் வளர்நாட்டு திரியோதிரன்
வன்னப்பால்குடம் கெட்டிவிட்டபோது
வளமையுடன் கெட்டினபால்குடம்தான்
2240 வருகுதெனச் செல்லி மாயவனார்
உலகையளந்தவன் திருவருளால்

ஒரு நாகத்தின் புதுமை கண்டேன்
வாளும் முடி வேந்தர் பார்த்தாவும்
வந்தபால்குடம் விளக்கக்கண்டேன்
தலைகாலு அற்றி பிடிக்கக் கண்டேன்
நாகம் ஒருதலை கடிக்கக் கண்டேன்
நாலு பேரும் நின்று புலம்பக் கண்டேன்
நாங்கள் படும்பாடு கண்டிலையோ
சிவயோகம் நீர் சேரக்கண்டேன்
2250 திரும்பி உயிர்வந்து மீளக்கண்டேன்
திருமதிலும்மாளியலும்
சிங்காசனமும் கோவில் கல்லும்
அரவக்கொடியோன் திரியோதனன்
அடித்து தீ வைக்க கண்டேன்
கண்ட கனாவத்தனையும்
காலம் பொல்லாது மன்னவர்க்கு
பொல்லாது யென்றுசொல்லி
பூமாலை வருந்திடவே
வெல்லாது கண்டகனா
2260 விதித்த விதி தப்பாது என்றார்

## வீமனின் பதில்

அப்பொழுதுதேவீ மராசன்
அவரும் அங்கே வார்த்தைசொல்வார்
வேற்றுமையாய் கண்டதர்க்கு
வேதனைகள் படவும் வேண்டாம்
இப்புதுமை கண்டதெல்லாம்
என்தலையில்விதித்த விதி
பொல்லாப்பு வந்திடினும்
பொறுக்காமல் என்ன செய்வோம்
பேய்க்கனவு கண்டு நீயும்
2270 பேதலிக்க வேண்டாமடி
விதித்தவிதியறியாமல்
வீண்துயரம்படவும் வேண்டாம்

## ஓட்டனை அழைத்தல்

சொல்பனங்கண்டிருக்க
கோலகுருகுல நாடதிலே
அற்புதமாய் ஓட்டனைத்தான்
அழைத்துவர சொல்லும்மென்றார்
இப்பொழுதேகுரு நாட்டுக்கு

## ஐவரும் பால்குடம் பெறுதல்

இந்த பால்குடம் போகட்டென்றார்
அப்பொழுதே அஞ்சி பால்குடத்தை
2280 ஐயர்பாண்டவர்க்கு கொடுத்துவிட்டார்
பச்சையாத்தன் கரைகடந்து
பாரசமுத்தாம் மான் கடந்து
குருக்க சித்திரவழி கடந்து
குருநாட்டில் செல்லுவானாம்
பஞ்சபாண்டவர் திருமுன்பிலே
பால்குடம் வைத்தார் அடிதொழுதார்
அஞ்சி மணிமுடி பஞ்சவரும்
அதியபால்குடம் நோக்கிக் கண்டார்
நாலுமணிமுடி பாண்டவரும்
2290 நடுங்கி திருமனம் பதறி நின்றார்
காலம் முழுத்துதே இனி நமக்கு
வாழும் வளர் நாட்டுதிரி யோதிரன்
வன்னபால்குடம் கெட்டினபோது
உள்ளி உலகாளும் அரவக்கொடியோன்
உலகறிய கெட்டிவிட்டான் பால்குடத்தை
அஞ்சிதலையுள்ள பால்குடத்தை

## பாற்குடத்துக்கு அனுமதி

அரவக்கொடியோனும் வரவேவிட்டான்
எழுதும்திரு நீட்டு வாசகங்கள்
எடுத்துதிரு நீட்டை வாசிப்பாராம்
வாசித்து திருநீட்டிலுள்ள
2300 வாசகங்களை கேள்பாராம்

குருகுலத்தில் வீமனென்றும்

## நீட்டிலே விபரம்

குந்தா தேவி பெற்ற மன்னரென்றும்
அதியவிருந்துண்ண அழைத்தாரென்றும்
சிறைகள்கொண்டு போனதர்க்கு
திறம் பார்க்கவே கெட்டிவிட்டோம்
அரியயுடையமைத்துனக்கு
ஆண்மை தானில்லை
அவிள்க்காவிட்டால் தருமருக்கு
தார்வேந்தன் போர்வீமன்
2310 வன்னமொற்றபால்குடத்தை
வாகுடனே அளிக்காவிட்டால்
சொன்னதுதான்சமுதர்மமென்று
சுணக்கேடாம் என்று சொல்லி
வன்னமுள்ள நீட்டெழுதி
வாய்த்தபால்குடத்தில் வந்ததென்றார்
மகிமையுடன் கெட்டிபால்குடத்தில்
மாயனுடபேரும் யெழுதுவாராம்
பூசலிலே எழுதிவரும் வீமராசன்

## விருத்தம்

தாமரை கைதொழுதார் நமக்கு பங்கம் சொல்லி
2320 வந்த பால்குடத்தை நான் தானும் அவிழாமல் விடுவேனோ
பங்கம் சொல்ல வந்த பால்குடத்தை
பாருலகில் நான் அவிழ்க்க பதறலாமோ
தீங்கெல்லாம் எந்தன் முன்னன் திரியோதரன்

## வீமன் உரை

திரும்ப விட இனி நமக்கு மகிமை உண்டோ
வாரும் எந்தனுட தம்பிமாரே
வார்த்தை தனை ஒன்று நீங்கள் கேளும்
கூட்டுகிளி போலே நீங்கள் வாழ்ந்திருந்து
குருநாட்டை கொடாது எங்கோ தம்பிமாரே
தாய்மாரே என்னை சொல்லி வருந்த வேண்டாம்

2330 தர்மம் உள்ள அண்ணரை கைவிட்டிடாதே
பால்குடத்தை அவிழ்ப்பதற்கு குற்றமில்லை
படுவதுவும் நிச்சயமாம் பாரோரறிய
ஆள்வரில்லை அட்டமத்தில் சனியுடன் தொட்டால்
அநேகம் எல்லாம் கருதினாலும் விதி விடுமோ
பத்தாம் சன பிடித்த பலன் தான் போமோ
பயந்து நான் பால்குடத்தை அவிழாவிட்டால்
தப்பாமல் பால்குடத்தை நான் அவிழ்த்தால்
தளராதே என் அண்ணரே என் தம்பிமாரே
இப்பொழுதே பால்குடத்தை நான் அவிழ்த்தால்
2340 இறந்தாக்கால் நான் சொல்லுகிறேன் தம்பியரே
சுட்டெரித்து களையாதே அண்ணே எந்தனுட
சேர்க்கையுள்ள வஞ்சி தன்னை பணிகள் செய்து
கற்ற கடமை முடியோன் தன்னருளினாலே
கண்ணிலொரு காலம் காண விதியுண்டானால்
பெற்றதொரு மாதாவுக்கும் அண்ணருக்கும்
பிரியமுள்ள தம்பிமாரை காண்பதற்கும்
கூட்டுக் கிளிபோல் வளர்த்த அச்சுதனார்
கொடு வருவார் என்னை இங்கே குருநாட்டில்
மலங்காதே என்னுடைய மாதாவே

## மாதாவின் புலம்பல்

2350 மற்றுமுள்ள நான்கு பேர்க்கும் செப்பலுற்றார்
செப்பின தோர் வார்த்தை கேட்டு மாதாவும்
திரியோதனன் வீமனையும் கெடுத்தானே
நினைந்தாயோ அச்சுதனே பச்சமாலே
நீர்உதவி செய்ய வேணும் வீமனுக்கு
புலம்பியே மாதாவும் நாலுபேரும்
போற்றியே வீமனைத்தான் காத்தருளும்
காத்தருளும் எங்களுட வீமனைத்தான்
கண்ணனே திருமாலே கைவிடாதே

## மாயவர் வருதல்

சேர்த்தருளும் அச்சுதரே பச்சமாலே
2360 சேட்டம் அழிந்தால் இனி

நாங்கள் காணமாட்டோம்
குந்தாதேவி படுகிற மயக்கம் கண்டு
கோபாலர் மாயமாய் வந்து நின்றார்
வந்து நின்ற அச்சுதரை மன்னவர்கள்
வந்து பாண்டவர்கள் அடி தொழுதார்
தொழுத பாண்டவர்களுட முகத்தைப் பார்த்து
சொல் பெரிய நாராயணர் ஏது சொல்வார்

## மாயவரின் வாக்குறுதி

மலங்காதே தங்கையரே குந்தாதேவி
மன்னவனை நானும் பட கொடுப்பதில்லை
2370 பிடித்த சனியினுடைய பயனும் இப்போ
பொல்லாது எந்தனுட ஐபேருக்கும்
எடுத்த சனி யதினுடைய பலன்கள் இப்போ
யாண்ட காலமாய் இருந்தால்
அதின் மூலம் பட்ட பாடு
கேக்க நீரும் அரசரே விதனம் என்ன
பத்தாம் சனி பிடித்த காலம் தன்னில்
பதி குலைக்கும் உயிரிறக்கும் பாரார் அறிய
விதித்த விதி ஒருவருக்கும் தப்பாது
விதனப்பட வேண்டாம் பாண்டவரே
2380 ஐந்து தலையுள்ள அரவம் தொட்டு

## மாயவரின் அடைக்கலம்

ஆணழகன் வீமன் இறந்து விட்டால்
மிஞ்சும் கட்டி மீண்டும் கொடு வருவேன்
வீமனை இன்னகரில் காண வைப்பேன்
வைத்து அரசாளும் ராஜ்ஜியத்தில்
மற்ற ராஜ்ஜியம் மெய்க்கவே தான்
குருகுலத்தில் ஒருத்தி கண்டு
கொடு போவாள் வீமனையும்
கொண்டு சென்றால் வீமனுந்தான்
கொடி இடையே மாலை இட்டு
2390 புத்திரனும் புகழும் உண்டாய்

போர்களும் பொருது வென்று
அரக்கு மாளிகையில் அனல் கொடுக்க
அன்று வீமனை நான் கொடு வருவேன்
அரவக் கொடியோனை காக்க மாட்டேன்
ஐபேரையும் நான் காத்தும் கொள்வேன்

## தருமர் ஆறுதல்

மலங்காதே வீமா என்று
மாயவரும் எழுந்தருளி
கலங்காமல் பாண்டவரும்
கை தொழுது நமஸ்கரித்தான்
2400 நாமம் திரு கையால் தொழுதார்

## வேறு நடை

வாராய் எந்தனும் தம்பிமாரே
வார்த்தை ஒன்று கேளுமென்ன
சகாதேவன் பரி நகுலன்
தம்பியருச்சுன பெருமாளே
சீரும் திரவியம் மாளியலும்
சிங்காசனங்களும் கோவில் கல்லும்
பாரில் சில நாடும் உண்டு
படையும் படைத் தேரும் உண்டு
முன்னும் வெங்கல கொடி தேரும்
2410 முன்னேறி பொருது கொண்டு
இருக்க வேணும் எந்தன் தம்பிமாரே
ஏக பொருதங்கே ஆண்டிருவும்
முன்னை அச்சுதனார் காத்துக் கொள்வார்
முடிமன்னர் பெரும் சேனை எல்லாம்
பொன்னு மணி முடி தம்பிமாரே
புகழ்ந்து நீங்கள் இருங்கள் என்று சொல்லி
அண்ணருட சொல்லை தவறாதே
அதிய தர்மங்களை குறையாதே
கண்ணில் நீரது உதிர்ந்து நின்று
2420 காவல் வாங்க பட்டு உரைக்க

ஆசையுடன் பெற்ற மாதாவையும்
அமுத உத்தம்மை அவர்தனையும்
வர்மம் வையாதே அவர்களையும்
வைத்து ரெட்சிப்பாய் நீ விஜயா
கை தொழுதார் மூத்த அண்ணரையும்
கடிய வீமனைப் பார்த்தும் அங்கே
மேலும் மொழி சொல்லுவாராம்
மிக்க புகழ் தர்மராஜன்

## வீமன் பேசுதல்

ஆர்த்த சில வடிவழகா
2430 அரசே உந்தனுயிர் மாளவுந்தான்
கோத்திரத்தை இழப்பேனா
குருகுலத்தில் பிறந்த தர்மா
பால்குடத்தை நான் அவிழ்த்தால்
பழுதில்லை காண் வீமா ராஜா
பழுதில்லை காண் என்று சொல்லி
பால் குடத்தை முடுகுவாராம்
சகாதேவன் பரி நகுலன்
தனக் கென்று முடுகுவாராம்
எனக் கென்று முடுகுவாராம்
2450 தம்பி அர்ச்சுனப் பெருமாளும்
எனக்கு வந்த பால்குடத்தை
என் தம்பிமார்கள் அவிழ்க்க வேண்டாம்
மலங்காதே தம்பிமாரே
வரும் விதிக்கு அஞ்சுவதோ
அப்பொழுது தர்மராஜன்
அவரேது சொல்லுவாராம்
இப்பொழுது தம்பி வீமா
இந்த பால்குடத்ாலே இறந்தால்
மோட்சமது கிடையாது
2460 முடி மன்னா தம்பிமாரே
பாக்கியங்கள் செய்தில்லையோ
படைபொருது பட்டு விழா

ஊக்க முடன் பெற்றெடுத்த
தாயாரை கை தொழுதார்
தாயாரையும் கை தொழுது
தம்பிமார்களை கையமத்தி
நாடளந்த அச்சுதரை
நாமம் திருகையால்
கனி தன்னை எடுத்து தின்ன
2470 கண் குத்தினாய் விருந்திடுமாம்
நல்ல கனியுட புதுமை எல்லாம்
நாமம் திருக்கையால் எடுத்தெறிந்தார்
மாயவரை கைதொழுது வீமராஜன்

## பால்குடத்தை எடுத்தல்

பால்குடத்தின் அருகில்சென்று
பூட்டு எல்லாம் தான் கழத்துவாராம்
வட்ட சங்கிலிகள் நின்றுபார்த்து
வகைபடி பார்த்தான் கையைவிட்டு
அஞ்சித் தலையுள்ள அரவத்தையும்
அதிய கையால் மிகப்பிடித்தார்
2480 பிடித்த தலை நாலும் அகப்படவே

## பாம்பு கடித்தல்

பிரிந்த தலை ஒன்று கடித்திடுமாம்
கடித்த நாகத்தின் படம் சிதற
கையால் பிடித்தவர் வெளியில் போட்டார்
நிலத்தோடே கடித்த கடிவாயும்
நீதியுடன் மன்னன் தான் தளர்ந்து
கடித்த விஷம் கொண்டு ஏறும் முன்னே
பிடித்தார் ஞாயிறஞ்சும் நாராயணர்
அடைத்தார் உயிர் தன்னை சிவ சங்குக்குள்
ஆதி நாராயணர் அப்பொழுது
2490 தாங்கும் உயிரஞ்சும் காலு கொண்டு
சகலமாய் அவன் நின்று கொண்டார்
அதிய விஷம் கொள்ள அய்ந்தது அய்ந்து

## வீமன் இறத்தல்

அண்ணர் மடி தனில் சாய்ந்து விழ
சாய்ந்து விழுந்தவரை தான் எடுத்து
ஐவர் மடியில் வைத்து தான் புலம்ப
அசந்தாயோ தம்பி வீமா நீ
அதியகுருநாட்டை மறந்தாயோ
பட்டுக்கிடக்கின்ற தம்பியைப் பார்த்து
பாராதிருக்கையாலை முகத்தறைந்தார்
2500 தயங்கி உடைந்த குளங்கரை போல்

## தருமரும் குந்தியும் புலம்பல்

சிந்தை தளர்ந்தாரே தர்ம ராஜன்
வேங்கை இடைபட்ட மானானேன்
வெள்ள அகப்பட்ட வெருடு மானானேன்
பாங்குத் திருமேனில் முகந்து கொண்டு
பஞ்சவர் சத்தமாய் புலம்பி நின்றார்
குந்தா தேவியம்மை வெயிலாளும்
கோடை இடை யொத்தா வீமா நீ தான்
கஞ்ச முகத்தாளம்மை குந்தாதேவி
கதறிப் புலம்பி விழுந்தழுதாள்
2510 கொஞ்சும் திருமேனி முக வடிவு கண்டு
கூந்தல் குலையவே மோதிடுவாள்
ஆண் அழகா எந்தன் அரசே நீ
ஆனைப் பலங்கள் என்றிருந்தேனே
நாளும் பொழுதிலும் காத்துக் கொண்டு
நாராயணரே எந்தன் வீமனைத்தான்
ஆளும் தேசத்தில் இருந்தோமே
அரவக் கொடியோனை இடங்கள் வைத்து
தயங்க வைத்திரோ மாயவரே
தாழ்த்தி மகிழ்ந்தீரோ எங்களையும்
2520 மருகனை பட கொடுத்தீரோ
வார்த்தைதனை சொல்லி வாடிடவே

## மாயவன் ஆறுதல் கூறல்

கார்வண்ணனார் வந்து தோணுவாராம்
கார் முடிபெற்ற நல் மருகனுக்கு
அன்று ஒரு குறை வாராமல்
அதிய அழகுள்ள மன்னனைத்தான்
அதிய விஷம் மீண்டு கொடு வருவேன்
தாளினைப் போற்றும் பாண்டவர்க்கு
சற்றும் ஒரு குறை வாராமல்
ஆளில் அழகனை வஞ்சியில் ஏற்ற
2530 அழகாய் சமைக்கட்டும் சடுதியிலே
தவங்கள் இது நல்ல வீமனுக்கு
சற்று நேரம் நீங்கள் பொறுத்திடுங்கோ
மனம் தளராதே குந்தாதேவி
மன்னவர்க்கவர் புத்தி சொல்லி
காத்துக் கொள்ளும் அச்சுதரே
என்று கை தொழுதாள் நாலு பேரும்
பார்த்திருந்தால் அண்ணனைத்தான்
நமக்குறுதி கருமம் எல்லாம்

## அருச்சுனன் ஆறுதல்

அண்ணருட திருக் கண்ணீரைத்தான்
2540 அடிபணிந்து அரிச்சுனரும் துடைத்து
அக மலங்கி அழ வேண்டாம்
அச்சுதனார் விஷம் மீண்டு கொள்வார்
அரவம் தனை விட்ட அரவக் கொடியோன்
அண்ணர் இறந்ததை அறிந்திடிகில்
பல சக்கர பெரும் படையோடே
பார அறைகளெல்லாம் தீயைவைப்பான்
வஞ்சிப்பணி செய்ய வேணுமென்று
மாந்தர் வேந்தர்களை வரவழைத்தான்
முந்தயவர் செய்த உபாயத்துக்கு
2550 முழுதும் அகப்பட்டானில்லை வீமன்
இன்று அவர் செய்தவாய்த்தாலே
இறந்து போனானே வலுவீமன்

சிந்தை மேய்க்கவே பட்டாரே
திரியோதிரன்மனது மெய்க்க
அஞ்சிதலையுள்ள ஆடரவம் தொட்டு
அண்ணர் இறந்தாரே ஆசாரியே

## மரம் வெட்டுதல்

மிஞ்சும் புகழ் நல்ல வஞ்சிதன்னை
மேவும்படி செய்துதாரும் என்றார்
வந்துநின்றதோர் ஆசாரிமார்
2560 வாய்த்தமழு கோடாலி கொண்டு
வாசலிலே நின்ற மரத்தை வெட்டி
வஞ்சி சமைக்கவே பணிகள் செய்தார்
வஞ்சி சமைத்திட பலகையது
வகைவகையாய் சேர்த்து வைத்தார்
வைத்த பலகை தனையெடுத்து
வாய்த்த வஞ்சி பணிமுகித்தார்

## வஞ்சி பணிமுடித்தல்

வஞ்சி பணி செய்து முகிந்தபோது
வாய்த்த வஞ்சியில் எழுதுவாராம்
அரனாருடதிரு உருவை
2570 அதிய வஞ்சியிலே எழுதுவாராம்
மாயவனார் திரு உருவை
மறுபிறத்தில் எழுதுவாராம்
ஆளிசிங்கம் புள்ளெழுதி
அதிய தாருவும் மயிலும் எழுதி
அஞ்சி தலையுள்ள ஆடரவம்
அதியசிகரில் எழுதுவாராம்
நஞ்சி விசம் கொண்ட நாகமதை
நல்லுருவாக எழுதுவாராம்
பூட்டும் தாளும் பூராயமாய்
2580 புகழ் பெற வஞ்சியில் தைத்திடுவாராம்
சித்தத்துடன் நல்ல வீமனுக்கு
சிறப்பாக வஞ்சி பணிமுகித்தார்

## வஞ்சிலைய அடக்குதல்

வஞ்சிபணியது முகிந்து நன்றாய்
மாந்தை வேந்தர்ரேது சொல்வார்
தங்கள் உயிரொன்றும் அழியாமலே
சடுதியில் வஞ்சி யடக்கம் செய்தார்
மிஞ்சும் புகழ் நல்ல தம்புரானே
விரையக் கடலோடே எழுந்தருள
அருச்சுனன் புத்தி தனை மறந்து
2590 அண்ணர்திருமேனி அலங்கரித்தார்
ஆண்மையுடனே யொத்த பணியணிந்து

## பிணத்தை நீராட்டல்

அழகுபெற நல்ல வீமனைத்தான்
தாசிமார்களை முகம் நோக்கி
சடுதியில் நீராட்டவேணுமென்றார்
நீல புனுகுடன் வாடை சாற்றி நீராட்டி
நெற்றியிலே திலாதமிட்டு
நேசமுடன் மணங்கள்வீச
பூசிமுடித்தாரே அண்ணருக்கு
பொருந்தும் பணிவகை அலங்கரிக்க

## வீமனின் பிணத்தை அலங்கரித்தல்

2600 கைக்குவளை கெச்சம் இட்டார்
காதுக்கிணங்க கடுக்கனிட்டார்
பொன் விளக்கொளிபோல்
வேண்டும் பணிவகை யலங்கரித்தார்
பொன்னரிய திருமேனியிலே
பூட்டியணிந்தார் ஆபரணம்
பொன்னரிய சவடியிட்டு
பொற்பணிகள் தனையணிந்தார்
உதித்த கதிரவன் ஒளிவதுபோல்
ஒளிலம்போல் எங்கே வீசிடுமாம்
2610 பத்தியொற்றதோர் வீமனைத்தான்
பாரவஞ்சியின் உள்கிடத்தி

பத்துலெச்சம் விளக்கெரிய
பாரிலிணங்கவே கிரிகை செய்தார்
தெண்டாயுதம் வஞ்சிதனிலே வைத்தால்
சிறந்த கடலதில் தாழ்ந்து விடும்
எடுத்து கோவிக்கல்லுக்குள்ளே வைத்தார்
என்று சொல்லியே தர்மராசன்
எடுத்து கோவில் கல்லுக்குள் ளேவைத்தார்
வஞ்சியிலே பொன்னு மெத்தை யிட்ட
2620 வாய்த்த தலவாணி தானும் வைத்தார்
கோலம் எழுதிய வீமனை கிடத்தி

## குந்தி புலம்பல்

சந்தமுடன் பெற்றமாதாவும்
தன்மகனுடைய அழகைக் கண்டு
அழகு திருக்கையை தானெடுத்து
அன்னத்திருமுகத்தோடே
தானணைத்தாள்
பாரிலெங்கும் கீர்த்தியுள்ள
பலசக்கர முடைய மன்னா
ஆறி இருப்பேனே என்மகனே
2630 அரசே நான் கூடிவருவேனென்றாள்
தேறி இருந்தேனே என் மகனே
திரியோதிரன் பாவி கெடுத்தானே
செல்ல தெண்டாயுதம் பிடிக்கும் கையோ
சினத்துவரும்போரை நெறுத்தும் கையோ
ஆனைக்கரிய பிலம் பிடித்தகையோ
அரசர்தனைகயங்கே நெறுத்தும் கையோ
சேனைப் படைக்காரன் திரியோதிரன்
செறுத்து பொருதங்கே ஆண்டிருந்தோம்
ஆண்டமகனே யென்னாலமுர்தே
2640 ஆனைவிலம் உள்ள என் மகனே
உரிமை மகனே யென் உற்றமகனே
உன்னை மறக்கவும் மாட்டேனென்றாள்
தாயாரையும் மறந்தாயோ

தனம் பிறவியையும் மறந்தாயோ
ஆசையுள்ள உன்னண்ணரையும்
அய்யய்யோ இங்கே விட்டுவிட்டு
உச்சிதானங்கே முகந்து கொண்டு
உள்ளங்கைதன்னை கண்ணி லொத்தி
தெளியாமலே என்ன செய்வோம்
2650 சேர்த்துறக்கவும் மதிவருமோ
ஆராத்துயரங்கள் ஆறும்படி
அன்ன நடையாளும் யெழுந்தருளி
கோவில் கல்லில் எழுந்தருளி
குந்தா தேவியம்மை தாயாரும்
அருகிலிருந்ததோர் தோழியர்கள்
அனேகமெல்லாம் சென்று செல்ல
ரெண்டு கையிலும் பணிமாற
நாங்கள் காதல் கொண்டேவருவோம்
நெஞ்சறிய இருத்திவைத்து
2660 நீண்டகடலோடே எழுந்தருள
வஞ்சியிலே நீயும் எழுந்தருளி
வரவும் காணவும் மதிவருமோ
தேவிமார்சொல்லி யழுதிடவே
சென்று விசயனும் கையமர்த்தி
மாயவனாருடதிருவருளால்
மாயத்திருவாளி பார்த்து திரு நீட்டெழுதி
திருநீட்டெழுதி வஞ்சி தன்னில்
சிறப்பாய் உள்வைத்து அலங்கரித்தார்

## வஞ்சிக்கு வடம் பூட்டுதல்

சீனி பூட்டதுதான் பூட்டி
2670 சிறந்தவஞ்சி கடலில் இறக்குதர்க்கு
உலகையளந்தவர் திருவருளால்
உடனே வஞ்சி வடம் தொடவே
பச்சமாலவர் திருவருளால்
பாரவஞ்சி வடம் பூட்டி
உலகையளந்தவர் வடம் தொடவே

உற்றார் வஞ்சி வடம் பிடிக்க
வடமது தொட்டு வஞ்சிவலிக்க
மாயவனாருட திருவருளாலே
நலமோடு இருபிறம் மடவார்கள் வரவே
2680 நல்ல தோர்சங்கொலி தொனிகள் முழங்க
ஆரவாரத்தோடே வஞ்சிவிடவே
அன்பொடு இருபிறம் தொனிகள் வகுத்தாள்

## வஞ்சியின் பின்னே தேர்கள்

முத்துதேருகள் இருபிறம் வரவே
முகில் தேரு களிருபிறம்வரவே
பச்ச தேருகளிருபிறம் வரவே
பகழ தேருகளிருபிறம் வரவே
இந்திரனுக்கிணை ஒப்பமெனவே
இசல்பேறு தேருகளிருபிறம் வரவே
சந்திரனுக்கிணை ஒப்பபெனவே
2690 சகல தேருகளிருபிறம் வரவே
மேல்நெடுந்தெரு வீதியில் வரவே
மெய்க்கவே வஞ்சிவலித்தவர் செல்ல
ஆனை மேலேடம்மானம் தொனிகள் முழங்க
அதிரவே சங்கொலி தொனிகள் முழங்க
கிடுபிடிதாரை யோடு தம்பட்டம்
கீர்த்தியுடன் நல்ல முரசு முழங்க
சங்கோ தாளம் யெங்கும் முழங்க
சகலபேர் வஞ்சி தொட்டுவலிக்க
முத்துக்கடலுட வெளியதும் விட்டு
2700 முகிலக்கடலினோடே வரவே
சொல்பாற்கடலுட வெளி
சிறகுகள் தட்டும் பறவைகள் போலே
நாகக் கடலு வெளியதுவிட்டு
நல்ல தோர்வஞ்சி பாய்ந்துவரவே
இப்படிவஞ்சி ஓடிவரவே
இசல்வேறுமாயன் திருவருளாலே

## நாகலோகத்தில் வஞ்சி

நாராயணருட சொல்வது கேட்டு
நாகக்கடலில் நெறுத்திவிட்டாரே
கடலதிலே நெறுத்தி வைத்து
2710 கார்வண்ணணார்எழுந்தருள
சேர்த்துவஞ்சி கடலில் நெறுத்தி
திருமாலும்தான் நடந்தார்
முன்னே சொன்ன விசனத்துக்கு
முகிக்கவேணும் கருமம் மென்ன
நாகப்பெரும் தீவதிலே

## நாககன்னி

நல்ல நாகப்பட்டணத்தில்
அந்த நாகப்பட்டணத்தில்
அதியமுள்ள கும்பகராசன்
நாகக் கன்னிதானிருக்க
2720 நல்மாமன் மகளிருக்க
நான்வேறே பெண் தேடுவேனோ
அன்ன நடையொற்ற தேன் மொழியாள்
ஆயிழை மேல்காதல் கொண்டு
பொன்மாலை சூடவேணுமென்று
பொருத்தம் முகிழ்த்தும் கேள்ப்பதற்கு
பாவாலே பரல்கமுகி
புனத்தில் வாளும் இரிசியோடே
பொருத்தம் முகிழ்த்தம் சொல்லுமென்றார்

## சோதிடம் பார்த்தல்

பாலாலே பரல் கமுகி
2730 பலகையிலே நிறுத்துவானாம்
அட்ட மங்கலம் கீறி
ஆதிசாஸ்திரம் பார்த்தான்
மாலையிட பொருத்தமது
மகா இருசி செப்பிடவே
காலமது பொல்லாது

காதல் கொண்ட கும்பகராசா
மாலையிட நினைந்த தெல்லாம்
மன்னா உனக்கு முகியாது
சூதுக்கு போகும் போது
2740 தோற்றிடுவாய் மன்னவனே
வாது சொல்லி உங்களிலே
வைத்த சூது அத்தனையும்
வெல்லாமல் மீண்டுவருவாய்
மன்னா நீ போகாதே
முறைக்குரிய கூறியவள் என்றாலும்
முகியாது இக்கருமம்
கரைக்கண்டனார் கல்பனையால்
காரியங்கள் வேறே என்றார்
நாககன்னி பெண் கொடியை
2750 நகரி மெய்க்க ஒருவன் வந்து
ஏற்ற புகழ் மன்னவனே
இளம் மயிலே இப்பொழுது
பூசலிலே பொருது வெல்லும்
பேரரசர் வேறே என்றால்
தாகமுகம் அறியாமல்

## கும்பகராசன் புறப்பாடல்

தன்னுடைய அமைச்சர்களை
கூட்டுவாராம் பெரும் படையை
குறித்தாராம் விருதுகளை
வாட்டமில்லா படை கடத்தி
2760 மன்னவரும் எழுந்தருளி
ஆனைமேல்டம்மானம்
அதிகவேதான் முழங்க
சேனைப்படையோடே கும்பகராசன்
சென்றான் மாமனுட கோவில் கல்லில்
மாமனை வந்து முகம் காட்டி
மன்னவரும் அங்கே ஏது சொல்வார்
மாமனும் திருமகளை
மணம் செய்ய வேணு மென்றான்

யென்று சொல்லி கும்பகராசன்
2770 யெழுந்தருளி வந்தாரே

## நாககன்னியின் நிபந்தனை

நாககன்னி இடமதிலே கும்பகராசன்
நல்லமணி கொட்டாரமதிலே வந்தான்
மச்சாவி என்னை நீர் மாலையிட வந்தீர்
வந்து அடக்கி சூது பொருது நீரென்னை வென்றால்
மாலையிட்டு நம்மளிலே வாழ்வதுவும் உண்டு
மங்கை நல்வாள் நாககன்னி
வார்த்தையது சொல்வாள்

## கும்பகன் சூது விளையாடல்

விசனமுற்று கும்பகராசனுமோ வருந்தி
விரும்பினான் ஒரு சூது பொருவேனின்று
2780 பொருவேனான் ஒரு சூது அணிதிரையும் யொன்று
போயிருந்தார் சூதாடும் மண்டபமதிலே
சித்திர பொற்பலகையதின் மேலே
சென்றிருந்தான் கும்பகராசன்
சீருடன் ஆளிகள் தன்னை நெறுத்தி
வைத்ததொரு சூது நிரத்தியழகாய்

## பணயப் பொருட்கள்

மந்திரி காலாள் படையது வைத்தார்
பல பல யானை குதிரைகள் வைத்தார்
பச்சிகள் சிங்கம் யானைகள் வைத்தார்
ஆனைக்கிடையிலே அரசனைவைத்தார்
2790 அன்னம் சிறுகிளி அணியிலே வைத்தார்
காலாளும் பல சேனையதொக்க
கணக்கின் படியே வைத்து நிறுத்தி
இசல்வாய் போர் பொரும் புதுமைகளெல்லாம்
இருவரும் பொருகிற புதுமைகள் பாராய்

## இருவரும் விளையாடுதல்

கனபடையும் சில மந்திரி மாரும்

கண்டு மகிழ்ந்தவர் சிந்தை தெளிந்தார்
முந்திபொருகிற கும்பகராசன்
முடகவே அணியை இறக்கிபொரவே
சிந்தை தெளிந்தாள் நாககன்னி குழலாள்
2800 சிலசில் அணியை அடைத்து பொரவே
திசை திசை தோறும் அணிகளையெல்லாம்
திகையது முட்டவே அணியை அடைத்தார்
போக கொடு நீக்கும்செயலும் அழிந்து
போரும் இழந்தாள் கும்பகராசன்

## நாக கன்னியின் முடிவு

அப்பொழுதே நாககன்னி
அவளேது வார்த்தை சொல்வாள்
இப்பொழுதே மாலையிட்டு
இனிமையுடன் வாழ்ந்திருக்க
தோற்றவரை மாலையிட்டால்
2810 தோசமல்லோ மச்சாவி
வாழ்வதில்லை மச்சாவி உம்மோடே
மச்சாவி நீர் போவுமென்றாள்
ஒத்துதில்லை நம்மளிலே
ஒவ்வாது இக்கருமம்
வல்லாத அருங்கயத்தில்
வாகாக ஒரு பூவை கண்டால்
கரையில் நின்றுகை காட்ட கையில்
வராதோ மச்சாவி
வெல்லாதருமம் ஒன்றும்
2820 விரும்பாதே நீர் மச்சாவி
வல்லாது நம்மணிலே
வாழ்வதில்லை போகுமென்றார்
அதிவேகம் கொள்ளுவாராம்

## கும்பகன் கோபம்

அப்பொழுதே கும்பகராசன்
இப்பொழுது உன்னை வந்து
இம்மங்கிலியம் தான் பூண்டால்

ஒப்பெரிய நாககன்னி
உன்னையுமே வாழ ஒட்டேன்
வாழ ஒட்டேன் உன்னையும் நான்

## கும்பகன் சாபமிடுதல்

2830 மங்கிலியம் தரிக்க ஒட்டேன்
மங்கிலியம் தரியாமல்
மாயகெர்ப்பம் தரியாமல்
படுசவத்திற்கு மாலையிட்டு
படுவாயென்று சாபமிட்டான்
சாபமிட்டு கும்பகராசன்
தன் கோவில்கல்லில் எழுந்தருளி
சாபமிட்டதோர் படிகளெல்லாம்

## தந்தையின் ஆறுதல்

தன்னுடைய அய்யர் அறிந்தபோது
மலங்காதே நல்மகளே
2840 மாளிகையில் போயிருப்பாய்
கலங்காதே நாககன்னி
கரும முற்றவார்த்தை கேளாய்
உண்டிருக்கத் திரவியமும்
உடுத்திருக்க ஆடைதுகில்
பூண்டிருக்க ஆபரணம்
பொருந்தும்படி நாககன்னி
நாககன்னி மாறிவிட்டாள்
மாறி விட்டு நாககன்னி
மாளிகையில் வந்திருந்தாள்

## மாயன் உருமாறி வருதல்

உருமாறி வந்ததொரு மாயவனார்
2850 மாற்றியவர் பண்டாரவேசம் கொண்டார்
வீரதண்டை வெங்கல சிலம்பணிந்து
மெய்யில் திருமார்பில் பூணூலணிந்தார்
பாரங்கும் நடைபயிலும் நாராயணர்தான்
பாரவன்ன தோடணிந்தங்கெழுந்தருள

## நாகராசா திருவளமை

நாகப்பட்டண கோவில்கல்லில்
நாகக்கன்னி குழலால்
நாகராசாவின் திருமகள் வளமைகேளும்
நாமென்று செப்பு மந்த வளமைகேளும்
நாகக்கன்னி கோவில்கல்லும் இதுவோ என்ன
2860 வாசலிலே வர்ண கொடியும்
கொடியும் கெட்டி
மங்கைக் குழலாளுடைய
உண்மைசொல்வாய்
கோவில் கல்லில் விருதும்
கொடியுமென்ன
குறும்படக்கி இருந்து உலகை
ஆளும் நாளில்
மெய்ப்புடைய வாசலில்
கொடியும் கெட்டி
2870 வீரியமாய் வாழ்ந்திருக்கும் நாககன்னி

## நாககன்னி மாயவரிடம் பேசுதல்

கோவில்கல்குள் புகுந்து நாககன்னி
கொற்றவன் திருவடியை வந்து கண்டாள்
மாயவர் திருவடியை கண்டபோது
மலங்கி மனது நெஞ்சம் கலங்கிநின்றாள்
ஆசைகொள்ள வந்த பண்டாரத்தோடே
அறிவித்தாள் அவளிருந்த உண்மை எல்லாம்
முப்பத்திரண்டு ராசாக்களோடே
முந்திவந்து அடக்கினார்கள் சூதுபொரவே
அப்பொழுது அவர் சூது
2880 பொருத சூதுயெல்லாம்
அவர் தோற்றும் போனார்கள் தம்புரானே
விருது சொல்லி சூதுகள் பொருத போது
மெல்லா தேவிருதிழந்து தோற்றுபோனார்

## பண்டாரத்தை சூதிட அழைத்தல்

தன்னை வென்றிடுகில் கருதி ஒரு சூது
கைமேலேகைவளைகள் போடவாயென்றாள்
வன்னக்கிளிமொழியாள் நாககன்னி
மெய்யொற்ற மெய்யுடைய உருவைக்கண்டு
பொன்னுமணி சூடம் மன்னவர்க்கு
பூதலத்தில் உன்னை வந்து மாலையிட
2890 உன்னுடன் சூதாடும் புதுமையெல்லாம்
ஒரு சூது நம்மளிலே போரு செய்வோம்
ஆண்டருளும் தம்புரானே போலே வந்து
ஆசையுன்னி ஒரு சூது போர்வென்றிடுகில்
நீரும் நம்மை மாலையிட வேணுமென்ன
வாதுசொல்லி போருகள் செய்தாலும்
மாட்டேனே நாககன்னி ஒன்று கேளாய்
மனதுக் கிணங்கினதோர் மணவாளனே
மாலையிட கொடுவாறேன் மனம் மகிழ
உனக்கு சதிசூது பொருதிருக்க
2900 உலகம் மேய்க்க மாலையிட்டு வாழ்ந்திருக்க

## நாராயணன் வாக்குறுதி

இமைக்கு முன்னே கொடுவாறேன் உன்னிடத்தில்
இன்று உள்ளம் தளராதே இருவுமென்ன
நன்மையுடன் வாதா பொருதிருக்க
நாராயணர் மாயம்கொண்டே எழுந்தருள
நன்மையுடனவள் வாதாடி வாழ்ந்திருக்க
பொன் மாலை சூட்டி வைப்பேன் பெண்கொடியே
புகழாக உன்தனையும் இப்போ என்றார்

## விருத்தம்

நாராயணர்வடம் தொட்ட
தோர்வஞ்சிதானும்
2910 நல்லதோர் நாககடலது வழியாய்
வஞ்சி வந்ததோர் புதுமையே

நாககன்னியோடே மனம்
மகிழ்ந்து தோழிமார் அறிவிப்பாரோ

## (வேறு) திரவியம் வருதல்

அன்னயரும் சொன்னபடியாலே ஒருவஞ்சி
அலைகடலின்அருகேவந்த
திரவியங்கள் பாராய்
முன்னவரும் கப்பலிலே திரவியங்கள் பாராய்
முழுவாரம் நமக்கென்று
அய்யாவல்லோ சொன்னார்
2920 வாருமென்று மாந்தையர்கள் தோணி
கொண்டு செல்ல
வஞ்சியேத்தி பிடியுமென்று
வாணுதலாள்சொல்ல
பழையவஞ்சிவடம் பிடிக்க
தோணி கொண்டு வரவே
பார்த்து வஞ்சி அலைகடலில்
பண்பாயங்கே போக
எரிகடலில் போனவஞ்சி
இனியார்தான் கடவார்
2930 என்று சொல்லி மாந்தையரும்
யெழுந்தல்லவோ நின்றார்
போகும் எந்தன் மாந்தையரே
புத்தி சலியாதே
பொன்னாத தோணிகளை
இங்கேகொடுவானீ
நமக்கு விதியாக
வந்தவஞ்சி யதுவானால்
நம்மிடத்தில் வராமல்
போறதுவும் இல்லை
2940 உள்ளசையில் வஞ்சிவரும் புதுமைகண்டு
ஒருமதி நினைந்து இசம்புமுறை பார்த்தாள்
பட்டுடுத்து பல்விளக்கி
பத்தி யொத்த குழலாள்

பரமனுட திருவருளை தானினைந்து கொண்டாள்
திட்டெனவே எழுந்திருந்து
திரையருகேசென்று
தேன்மொழியாள் மாயவரை
கை தொழுது நின்றாள்
முந்தியின் மேல் அரைஞாணம்
2950 முத்து வடம்புரள
முகில்வர்ணன் திருவருளால்
முன்வினை சேவித்தாள்
அந்தி மதியைச்சுடும் அயன் மாலுமறிய
அலைகடல் நீர் கோரி அவள்
சேவித்தெரிந்தாள்

## வஞ்சியை இழுத்தல்

எரிகடலில் போனவஞ்சி யெதிரிட்டுவரவே
எல்லோரும் மனமகிழ
கரைகடுத்து வருமாம்
கரைகடுத்த வஞ்சிதனை
2960 கய்யதினால் பிடித்து
கரைக்கேற்றிகொடுவாரும்
கருவலங்கள்காண
இதத்துடனே வடம் பிடித்து
எல்லோரும் இழுக்க
ஏதாலும் வஞ்சிவந்து கரைகடுத்ததில்லை
கணக்கினுடன் ஆனைவிட்டு
வலித்தாக்கால்வஞ்சி
கரைவாறதல்லாமல் கைவடத்தில் வருமோ
ஆனைவிட்டுவடம்பிடிக்க அற்றுவடம் சிதற
2970 அலைகடலைவிட்டு வஞ்சி வாறதுவும் இல்லை
கானமயில் பெண் கொடியாள் கரையருகேசென்று
கையதினால் வடம் தொடவே
கரைக்கடுத்து வருமாம்
தேன்மொழியாள் நாககன்னி
செப்பிடுவாளொன்று

## மாந்தயரை அழைத்தல்

செய்தியுடன் பூட்டவிழ்க்க
மாந்தயரை அழைத்தாள்
அழைத்தவுடன் மாந்தையரும்
வஞ்சிதன்னை கண்டு
2980 ஆண்டவனார் அருளாலே
வந்த வஞ்சியென்ன
வம்முசத்தில் கண்ணாளர்
தொட்டபணி யல்லால்
வகைப்படியே நாங்கள்
இது கண்டிருப்பதில்லை
கண்குளிர கண்டு கன
திரவியங்களெல்லாம்
கருத்தாலே திருமனது
மகிழ இனிவேண்டாம்

## மாந்தயர் மயங்கல்

2990 களவதினால் வந்தவஞ்சி கருவலங்களல்ல
கண்டவனும் மனம் மகிழ்ந்து
சிந்தையுற்று சொன்னான்
அழகு மணி உருவெடுத்தும்
வஞ்சியிலே பூட்டும்
அடியேனிந்த மாய
திருவெளி பூட்டும் அறியேன்
வஞ்சிதனில் பூட்டினுட
வகையும் அறியாமல்
வல்லமையாய் மாந்தையரும்
3000 மனம் அஞ்சிலித்து நின்றார்
கொஞ்சும் கிளிமொழியாரும் வளர் நாககன்னி
கொற்றவனை கைதொழுது நாககன்னிதானும்
இறப்பேனிந்த பூட்டு
நெகிழாது இருந்ததுண்டால்
உலகளந்தோன் அருளாலே சேவித்துஎறிய
உடனேசீனி பூட்டும் நெகிழ்ந்து வரவே

நெகிழ்ந்து கையில் பூட்டு
வர நாககன்னிதானும்

## நாககன்னி வஞ்சி பார்த்தல்

நெடுமாலை கைதொழுது
3010 உடனருகே நின்றாள்
கருவலங்கள் உண்டோ
இந்த வஞ்சியிலே என்ன
காதல் கொண்டநாககன்னி
கருத்துடனே பார்த்தாள்
வீரவாளி பட்டாலே மூடாவு கண்டு
வீரமணி விளக்கெரியும்
புதுமைகளை கண்டாள்
பாரளந்தமாலோ பள்ளி
கொண்டபெருமானே
3020 பாவியெந்தன் எண்ணமாய்
இருந்தபலன் என்ன
ஆராலும் இந்த வஞ்சி
வந்ததொரு புதுமை
அறிவோம் என்று வீரவாளி
பட்டெடுத்து பார்த்தாள்
மறுமுகங்கள் காணாத
நாககன்னி தானும்
வன்னத்திருமுகத்தினுட
வடிவு தன்னைக்கண்டாள்
3030 கூறுகொண்ட உமைபாகர்
திருபங்கனார் மகனே
குருகுலத்து வீமனுட
வடிவுகளோ என்ன
ஆதித்தன் உதித்த
கதிர் வீசும் வகைபோலே
அலைகடலில் பள்ளி கொண்ட
மாயவரோ என்ன
பாவித்தானே நானொருபெண்

இப்படியே இருக்க
3040 பத்திதன்னை அழிக்கவந்த
பண்டாரமே என்னை
முத்துவடம் பூண்டிருந்த
பண்டாரத்தோடே
முகம்பார்த்து நானும்
சென்று பேசி இருந்தேனே
சற்றும் ஒருமதியறிந்து
நானிருந்தேனில்லை
தலையிலெழுத்தின்படி
வாழ்வேனென்றாலும்
3050 மறுமுகங்களை காணாமல்
நானும் வாழ்ந்திருந்தேன்
மங்கையர்கள் தன்னுடனே
வசையேச்சி கேக்கா
வம்முசங்கள் குலத்தானதோர்
மன்னவரை அறியவென்ன
மாது நல்லாள் நாககன்னி
மங்கையரும் சொல்லிடுவாள்
அன்னநடை பெண் கொடியாள்
அதியதிருமேனி கண்ட போது
3060 பொன்னின் வடிவேற்ற திருமேனி
பொருந்தும் உறக்கத்தின் வடிவுகண்டு
கன்னிமொழியாள் நாககன்னி
கைபிடித்து பார்த்தாள் வரைதோறும்
வன்னத்திருமேனி குளுந்திடவே
மங்கைநல்லாளும் மனம்மகிழ்ந்தாள்
ஆவியுமில்லை உசிப்புமில்லை
அசந்தபடுசவம் தானிது என்றாள்

## முனிவரின் பதில்

மகாஇருசி நாககன்னி யோடேது சொல்வார்
வாய்த்த பஞ்சவர் தானிது என்றார்
3070 ஏகம்படியாலே நாககன்னி இறப்பேன்
உன்கூட நானும் என்றாள்

பிழைத்தாரே யாகிலுமோ
போர்குலம் அறிய வேணுமென்றாள்
வஞ்சி தனில் வந்த திருநீட்டை
மங்கை நல்லாளும் கண்டபோது

## நீட்டில் செய்தி

வாசித்தாள் திருநீட்டை
அற்றொருவர் அறியாமல்
குருகுலத்தில் வீமனென்றும்
குந்தாதேவி பெற்றமைந்தனென்றும்
3080 தாடாளன் போர் வீமனென்றும்
தருமருக்கு நேரிளையோன்
வன்ன மொற்ற குருநாட்டில்
மாயன் அருளாலே இருந்தவர்தான்
பாண்டவர்க்கும் நூற்றுவர்க்கும்
பகையாய் ஐபேரும் வாழ்ந்திருந்தார்
பாவிதிரியோதனனும்
பால்குடம் கெட்டி விட்டதிலே
அஞ்சி தலையுள்ள ஆடரவம்
அதிய குடம் தனில் வந்ததினால்
3090 ஆடரவத்தை அறியாமல்
ஆனைபிலம் உள்ள வீமராசன்
ஆதிநாராயணர் அருளாலே
அவிழ்த்தபடியாலே இவர் இறந்தார்
நாகம்கடி கொண்டு வந்ததென்று
நாககன்னியும் தானறிந்தாள்
பஞ்சபாண்டவர் கோத்திரத்தில்
பழுதொன்றில்லாத வீமராசன்
என்று வாசித்து கண்டபோது

## நாககன்னியின் பழைய செய்தி

யேது சொல்லுவாள் நாககன்னி
3100 தஞ்சம் இவரோடே காதல் கொண்டேன்
தானும் அபாண்டம் நினைப்பேனோ
முந்தி வந்த மச்சாவி

முழுத்தத்துடன் வந்தார் மாலையிட
என் தலையில் எழுத்தின்படி
இந்த படுசவம் எனக்கமைத்தான்
முந்தைய அவரிட்ட சாபத்தினால்
முழுதும் இருந்த லோகத்திலே
இழுக்கல்லவோ இந்த உலகத்துக்கு
ஏச்சுக்கேட்டு நான் இருப்பேனோ
3110 தாழ்ச்சை வர வேண்டாம் இனி எனவே
தையல் நல்லாளும் மனம் மகிழ்ந்தாள்

## கன்னியின் முடிவு

தவறி இருப்பேனோ இவரை விட்டு
சாவேன் இவருட கூட வென்றாள்
அண்மையில் நின்ற தோழியோடே
அநேகம் எல்லாம் சொல்லிடுவாள்
மீண்டும் ஒரு நல் முகூர்த்தத்திலே
முறை கூறிய தோர் மச்சாவி
நன்மை கூறியதோர் மச்சாவி
நகையாமல் பொருதொழத்தீர்
3120 தின்மையுடனே பொருதொழத்தீர்
தீதாக வந்து முடிந்துதென்ன
அன்று அவரிட்ட சாபத்தாலே

## தோழியின் பேச்சு

அலைச்சல் பிடித்துதே நாககன்னி
இன்று உனக்கிது குணமாச்சே
இருந்து மதி கேடு நினைத்தாயே
வல்லாத படு சவத்தோடே
மாச்சால் படுவது நீதியல்ல
வெல்லாத படு சவத்தோடே
விழுவாய் நீயும் படு சவத்தாலே
அந்தரத்தில் வடிவை கண்டு
ஆசைப் பட்டாலும் விதி விடுமோ
3130 கோத்திரத்தை நீயும் அறியாமல்
கூடி பட்டு போக நினைத்தாயே

பேதகம் நினையாதே பெண்கொடியே
பெரிய கடலோடே போகட்டென்றாள்

## கன்னியின் உறுதி

வார்த்தை இனி ஒன்றும் பேசாதே
மங்கையரே நீங்கள் போகும் என்றாள்
சேர்த்தருளும் தம்புரானே எனக்கு
சிரசில் எழுத்தின் படி வந்தபடும் சவம்தான்
எழுத்தின் படியாலே நாககன்னி
இறப்பேனான் என்று புலம்பிடுவாள்
3140 ஆதிபரனாரும் அறிந்தில்லையோ
அம்மையுமை தானும் அறிந்தில்லையோ
அரசர் பட்ட படுகளத்தில்
அரனாரே வந்து தோன்றாயோ
தலையிட்ட விதிப்படியே
சந்திரரோ சூரியனோ
உயிரோடே வந்தல்லவோ

## பிணத்துக்கு மாலையிடுவதா?

உலகறிய மாலையிட
உலகமெல்லாம் எனை நகைக்க
ஒரு சவத்தை ஏவி விட்டார்
3150 படுசவத்தை பார்க்க ஒரு
பாவி நான் பிறந்திருந்தேனோ
விடுமதியே பெண்கொடியே
வேறு மதி ஒன்றும் நினையாதே
படு மயக்கம் படுவாயென்றே
பைந் தொடியே உனக்குரியார்
சாப மிட்டு அவரிருக்க
தம்பி உண்டு அவர்க்கிளைய
மாலையிட்டு வாழ்ந்திருக்க
வாழ் மயிலே உனக்கு நன்று
3160 போட்டு விட்டு நிற்பதுண்டோ
தேட்டம் உண்டே இனி நமக்கு
செயலின் படி வாழ்வதற்கு

வாட்டம் இல்லை இனி நமக்கு
வந்த படி நன்றெனவே
பாடு பட்டு இச்சவத்தை
பார்த்துக் கொண்டு மீள்வதற்கு
நாடு மெய்க்க கொடுத்திடலாம்
நல்ல விஷகாரியர்க்கு
ஆகிலும் இந்த படுசவத்தில்
3170 அரவுகடி மீண்டு தாரும் என்றாள்
நாகப் பட்டண நகரியிலே
நாட்டில் நாலில் ஒன்றும்
கொடுப்பேன் என்றாள்

## விஷகாரியரை அழைத்தல்

ஊரில் உள்ள விஷக் காரியரை
உடனழைத்து வாரும் என்றாள்
உடனழைத்து கொடு வாருங்கோ
உண்மை யுள்ள விஷகாரியரை
அரவக்கொடி வந்ததுண்டோ
அக்கடலினூடே தான்
3180 கொடுமதியால் வந்ததுண்டோ
கேள்வியுள்ள பட்டணத்தில்
வஞ்சிகண்டு நாககன்னி
மனமகிழ்ந்தங்கு எழுந்தருள
கொஞ்சும் மயில் தரையில் வந்து
கொண்டு சென்ற தோணி கண்டு
எரிகடலில் போன வஞ்சி
எழும்பி பறந்தோடி வர
ஆரியக்கரை கடுத்த தன்று
அகமெல்லாம் தான் குளிர
3190 மற்றொரு ரகசியமாய்
வஞ்சி தனில் உள்ளகத்தே
பொற்கொடியே தம்முடைய
பூண்ட புத்தியினுட உண்மை கண்டாள்
வஞ்சியிலே வந்த படுசவத்தில்

வன்னப் பணிவகை பூட்டு எல்லாம்
வந்த விஷகாரி விஷம் மீண்டிடுகில்
வாகு பெற நான்கொடுப்பேன் என்றாள்
அந்த மொழி கேட்ட விஷகாரியர்கள்
அன்பினுடன் சென்றார் திருமுன்பிலே

## வீமனின் உடலை பரிசோதித்தல்

3200 ஆளில் அழகிய வீமனுட
அதிய திருமேனி நோக்கி கண்டார்
சிரசில் தல நாரெடுத்து
சிறப்பாய் பார்த்தான் அடக்கமது
நாசியிலே பார்த்தார்கள்
நாசியில் அடக்க மில்லை; நாககன்னி
எழுந்து வந்து கன்னானாச்சே
இவர்க்கு கடி கொண்ட தென்ன
ஆராகிலும் மீண்டிடுமோ
அழகு முடி மன்னன் வீமனைத்தான்
3210 பாராளும் முடிவேந்தன்
பஞ்ச பாண்டவரில் வீமனைத்தான்
நாககன்னியும் அருளாலே
நாகம் மீண்டு விடும் அல்லாமல்
வேறு ஒரு விஷ காரியர்கள்
மீள்வது சத்தருமை உண்டும்
கைதேருலே எழுந்தருளி
நாககன்னி அங்கே நின்றதுலே
வந்த விஷகாரி எல்லோரும்
வல்லமையாய் ஒதுங்கி நின்றார்
3220 இந்த வகையுன்னி ஆளுவானேன்
இச்சை தனையும் மறந்து விட்டாய்
கடுக இச்சை வெறுத்து விட்டாய்
காலம் மானதையும் அரசை விட்டு
உடைய மணவாளன் இருக்க
ஒரு சவத்தோடே மாச்சல் பட
விதிகள் பொல்லாது நாககன்னி

விஷகாரியர்கள் என மொழிந்தார்
நொந்த விஷக்காரி முகம் பார்த்து

## ஐந்து தலை நாகத்தை நினைத்தல்

மொழிந்தாள் நாககன்னி அவளோடை
3230 இளந்தலை தலையாய் ஐவர்களை
என்று நீங்கள் பேச வேண்டாம்
வார்த்தை கேடாக நினைப்பேனோ
வன்மை குழலாளும் விடை கொடுத்தாள்
காத்தருளும் அச்சுதரே
கல்பனையால் வந்துனக்கு
பார்தேன் பல பல உபாயமெல்லாம்
பாரளந்தோன் அருளாலே
அச்சுதனே பச்சமாலே
அருளும் என்றாள் நாககன்னி
3240 அருளும் என்று சொல்லி புலம்பி நிற்க
ஐந்து தலை நாகத்தை தான் நினைத்தாள்
ஆயிரத்தெட்டு நாகத்துக்கு
பாலூட்டி அருமையாய் வளர்த்தேன் நான்
நன்றாக நான் வளர்த்ததோர்
நாகங்கள் உண்டோ வென்று
நாககன்னி தாயார் ஞானமணிக் குழல்
வாசித்தாள் வாசனையாய் நினைத்தாள்

## நாகத்தை வரவழைத்தல்

சிறப்பாய் நாகத்தை வரவழைக்க வென்று
சீங்குழலை கையில் எடுத்தாள்
3250 சிந்தையுடனே மனது மகிழ்ந்தவள்
சீங்குழல் வாசிக்கவே
வாசித்தாள் நாககன்னி
குழல் வாசனையாய்
மாதா வல்லோ அழைத்தாள்
நம்மை யென்று நாகங்கள் எல்லாம்
ஆயிரத்தெட்டு நாகமும் சென்று

அடைவியில் கூடிடுமாம்
சேரவேயுள்ள ஐந்தலை நாகமும்
சென்று புறப்படுமாம்
3260 ஆயிரத்தெட்டு நாகமும் சென்று
அதிய குடையிடவே
சேவித்து தாங்கள் பக்க குடையிட்டு
ஆடும் படம் விரித்து செல்லும்
சேவித்து செல்லும் புதுமையை கண்டவள்
சிந்தை மனம் மகிழ்ந்தாள் பாரிலே உள்ளதோர்
ஐந்தலை நாகத்தை பார்த்தவள் சொல்வாள்
நானின்று பாலரை அழைத்த உடனே வந்தீர்
தாகமாய் உள்ளதோர்
நாகம் தான் சென்று குடையிடவே

## நாகங்களின் கேள்வி

3270 தாகமாய் எங்களை அழைத்த கருமம்
சலிப்புத் தான் ஏதெனவே
பாலிலே உற்ற திருமேனி
வாடிய மனதில் கவலை என்ன
பாலூட்டி நீ தான்
வளர்த்த ஒருமைக்கு
பழுதொன்றும் வராமல்
தாயரே உன்னுட உண்மையதை
தானே நீ சொல்லும் என்றார்
ஏந்திழை நாககன்னி அப்போது
3280 இசைந்து மொழி உழைப்பார்
பாலூட்டி உங்களை நானும் வளர்த்தேனே
பதவிகள் ஏது சொல்வீர்
தாயே உன்னுட உள்ளத்தின் உண்மையை
தான் நீ சொல்லும் என்றார்
ஏந்திழை நாககன்னி அப்போது
இசைந்து மொழி உரைப்பாள்
என்ற பொழுதிலே நாகங்கள் எல்லாம்
எழுந்து பணிந்து சென்று

ஏலங்குழலாளே தாயாரே
3290 உங்களுக்கு ஏது மனக்கவலை
தாயாரே உம்முடன் உள்ள மலக்கத்தை
சடுதியில் செப்பு செப்பும் என்றார்

## நாககன்னி பதில்

பரலொத்த மொழியாரும்
நாகத்தை பார்த்து
பரமாத்தி ஏது சொல்வாள்
பல்பனாபன் திருவருளால்
வந்தபடுசவம்
பார்க்க வேணுமென்ன
சேவித்து நின்றதோர் நாகத்தோடே
3300 எதிர் பேசினாள் நாககன்னி
தேன்மொழி தன்னுட
மலக்கத்தைக் கண்டு
சென்று நாகம் எல்லாம்
நாகத்தில் பொல்லாத
நாககன்னி நின்ற நாமத்தை தீர்ரோ
நாங்களேது வகை செய்ய வேணு மென்று
நாக கன்னி இடத்தில்
கேட்டுதோ நாகங்கள்
சேர அடங்கவும் கிருபையுடனே தான்
3310 கிருபையுடனே நாககன்னி குரல்
கேட்டந்த வாசகத்தை பாலூட்டி உங்களை
நானும் வளர்த்தேனே பாவங்கள் தீரவென்று
பைந்தொடி யாளந்த நாககன்னி தானும்
பார்த்தங்கே செப்பலுற்றாள்

## நாககன்னி வேண்டுகோள்

தோகை நல்லாள் நாககன்னி
அவள் சொல்லுவாளேது மொழி
விசமீண்டுதராவிட்டால்
நானுங்களை வளர்த்தது வீணெனவே
மெல்லி நல்லாளந்த

3320 நாககன்னி குழல்
மிகவே மனம் சோர்ந்து
பாவியே நானின்று உன்னுடன்கட்டை
சேர்வேனெனவே தான்
பைந்தொடியானந்த
நாககன்னிதானும்
பதறியே செப்பலுற்றாள்
முன்னாலே வந்ததோர்
மச்சாவி தான் போனார்
முகூர்த்தம் சேராமல்
3330 பொன்னுமணி முடி சூடியமச்சாவி
போனாரே சாபமிட்டு
சாபங்கள் வந்து பலித்திது எந்தன்
தலையில் விதிப்படியோ
சங்கையுடனந்த மங்கை குழலாளும்
சம்பிமுகம் கோடி

## நாகங்களின் முடிவும் செயலும்

தானங்கிருந்த நாகங்களெல்லாம்
தந்திரமாய் கூடி
சங்கையுடனந்த
தாயை வணங்கி
3340 தானேது வார்த்தை செப்ப
ஒன்றும் அஞ்சாதே தாயாரே இப்போ
உள்ள விசத்தையெல்லாம்
ஒரு நொடி தன்னிலே
மீள்கிறோம் இப்போ
ஒருமித்து நாகம் எல்லாம்
மங்கை நல்லாள் நாகக்கன்னி மகிழவே
வந்துதல்லோ நாகமெல்லாம்
ஒரு நாகம் ஐந்தில்நாகம் தான்சென்று
உச்சி வகுந்தூத
3350 உச்சியிலுள்ள விசங்களை எல்லாம்
ஒக்க இறக்கிடுமாம்

பச்சை முகில்வர்ணன்
தானங்கே எதிர்வந்த
பாம்பினம் பார்த்து நிக்க
ஒரு நாகம் தான் சென்றங்கே நின்று
உடனே செவியிலூத
சற்றும் விசம் கிடவாத வண்ணம்
தலைநாகம் ஊதிடுமாம்
கடித்தக் கடிவாயில் நஞ்சி விசங்கள்
3360 கறந்தபடியே கண்டு
கருத்துடனே சென்று
நாக கன்னி குழல்
கண்டு மனம் மகிழ்ந்து
அம்மாகேளென்று ஐந்தலை நாகம்
அகமகிழ்ந்தேது சொல்லும்
எங்களினம் தொட்ட நஞ்சி விசத்தை
இப்போது தான் மீண்டோம்
சங்கையுடையதோர் நாககன்னியுட
3370 சங்கடம் தான் தீர
சங்கடம் தீரவே தண்ணீரை ஓதியே
தலைநாகம் தான் தொளிக்க
சடுதியில் வந்து தொளிக்க
சடுதியில் வந்து பாருமென்று
அந்த தலைநாகம் செப்பிடவே
அந்த மொழி கேட்டு நாககன்னியும்
அன்பாய் மனம் மகிழ்ந்து
மாயன் அருளாலே நாககன்னியவள்
மந்திரங்கள் தான் சேவிக்க
சிந்தை தெளித்து
3380 திருநீற்றைவாரி
திருமுத்தோடே எறிந்தாள்
கருத்தாக திருநீற்றை
வாரியெறிந்ததை கண்டு
உயிரெங்கும் பரந்து ஊழிவிதியுந்த
ஒண்ணுதல் நாககன்னி

## வீமன் உயிர்பெறல்

ஒளித்தே இருந்த உயிர்கள் பரந்து
உற்றநல்ல வீமனுக்கு
திருக்கண் திறக்கவே
மயக்கம் தெளிந்து தான்
3390 தேன்மொழியாளும் கண்டு
மயக்கமோ தானிந்த
வடிவுள்ள திருமேனி
மயங்கி கிடப்பதென்ன
நீட்டின காலை சுருக்காமல் கிடப்பது
நீதியோ தானெனவே
எந்தன் மனது மகிழ
யெழுந்தருளும்
என்று சேவித்தெறிந்தாள்
மயக்கம் தெளிந்து மன்னன் திருக்கண்ணால்
3400 வையகம் நோக்கக்கண்டார்
உறங்கி முழித்தாய் போல்வீமராசனும்
உயிர்பெற்றெழுந்தார்
உதிக்கின்ன கதிரவன்
ஒளியது போலே
உலகத்தார் கண்டு மொய்க்க
ஒருகுற்றம் வாராமல் உடையவனருளாளே
உயிர்பெற்றெழுந்திருந்தார்
சரியொற்ற தனத்தாளும்
தவமொற்றவருட
3410 வடிவொற்றவருட அழகைக்கண்டு
ஆதித்தன் போலவே
அழ கொற்ற திருமேனி
வடிவொற்றாளாகிதென்றாள்
தேவி தன்படை சூழவே
திருமேனியை தொழுது
சிறப்புற்ற அழகைக் கண்டு

## வீமனின் கேள்வி

நாடேது சீர்மை நகருக்கோ தென்று
நலமுடன் கேள்க்கலுற்றார்
அண்ணரெங்கே தம்பி எங்கே
3420 அடுத்த சித்தம்மை அவர்தானெங்கே
கண்ணின் மணி யொற்ற
அண்ணரெங்கே
கரி பரி காலாளும் எங்கே
யீன்றெடுத்த மாதா வெங்கே
இயலொற்ற தம்பிமார்தானெங்கே
மாயமாய் இந்த கடல் கடந்து
மதிமயங்கின மயக்கமென்ன
ஆள்கடல் நாடும் நகரும்
அவருடைய பேர் தானுரைத்தநள்

## நாககன்னி வீமனிடம் பேசியது

3430 அப்போது நாககன்னி
அவளேது வார்த்தை சொல்வாள்
இப்போது நாடு நகரிகளும்
யெந்தன் பெருமைகள் கேளுமென்ன
நாககப்பட்டண நகரிது காண்
நாகராசாவின் திருமகளானநான்
காதலுடன் மேய்க்க ஆண்டிருந்த
காதலினால் வளத்த பெண் நானொருத்தி
மறுமுகங்கள் காணாமல்
வையங்கள் மேய்த்திடவே
3440 மங்கையரில் நானொருத்தி
மாளுவேனுடன் கட்டையில்
இறந்து போகிலென்னுயிரிறப்பேன்
ஈசனருளாலே மெய்யேசொன்னேன்
காதல் கொண்டு நான் விசமீண்டீர்
காசினி உமக்கு வேண்டாமென்றாள்
மாயனருளாலே வந்ததாக்கு
மற்றும் பலதொன்று நினைக்க வேண்டாம்

இசலழகன் வீமனைத்தான்
இலக்கமொற்ற படையோடே
3450 கருதி வைத்தாள் நாககன்னி
இவள் விச மீண்ட செய்தியெல்லாம்

## நாகராசன் செய்தி அறிதல்

அறிந்த பொழுதிலே நாகராசன்
அழகு திரு உண்மை மகள் செய்த
அன்பினுடன் கேட்டு மனம் மகிழ்ந்து
ஆச்சரியப்பட்டு நின்று
நல்முகூர்த்தம் பிறந்தவனை
நகரி மேய்க்க வாழ்ந்திருக்க
கண்ணின் மணிபோலே வந்ததுக்கு
கல்பினைகள் நன்று காணும்
3460 வன்னமொற்ற பெண்தனை போல்
வையகத்தில் ஒருவரில்லை
நன்மை செய்யும் பேர்களுக்கு
ஞாயமுண்டோயென உரைத்தார்
குருகுலத்து வீமனென்றால்

## மதகரி வருதல்

குறி வெள்ளானை யறிந்திடுமே
அரியதொரு படை சேகரித்து
அழகு வீமனை அறிந்திடும் காண்
வெள்ளானனை நல்ல மதகரியை
விரைவுனுடனங்கே வரவழைத்தார்
3470 நெற்றியிலே பட்டம் கெட்டி
நேர்பிறை போல் மை எழுதி
கொம்புரண்டு பொன்னாலமுத்தி
கொளுமாம்பு நாலும்
வெள்ளரி சதங்கை பூட்டி
குலங்கள் அறியவே மதகரியை
கொற்ற முடிமன்னன் வீமனென்றால்
வனம்பொன் முடிவேந்தன் வீமனென்றால்

வாங்கிக்கொடு போகவேணுமென்று
கண்கள் தனை கெட்டி ஏகிவிட்டால்
3480 கனத்தபெரும் படை நடுவே
தங்களது தினத்தை நீக்கிவைத்து

## யானை வீமனை வணங்கல்

தர்மருட தம்பி வீமனைத்தான்
துங்க மதவானை தான் வணங்கி
துதிகையதினால் வீமனைத்தான்
கொம்பிலமுத்தின பொன்னது போல்
கொண்டங்கிறக்குமாம் திருமுன்பிலே
அன்பினுடனவர் கொண்டாடி
ஆச்சரியப்பட்டார் ராசன்
குருகுலத்து வீமனுக்கு
3490 குறைகளில்லை நாககன்னி
அந்த நேரத்தில் கண்டு நின்றோர்
அல்லாரும் யேது சொல்வார்
அதியதொரு முகிழ்த்த மெல்லாம்

## பீமனின் பலம் சோதனை

அவர் தமக்கு முக்கியமென்றார்
அரியகுரு குலத்து வீமனென்றால்
ஆனைப்பிலம் உண்டே என்பாரும்
ஆயிரம் கோட்டை எள்ளும்
ஆயிரம் கோட்டை மண்ணும்
பாரசுருணையில் கெட்டிவைத்து
3500 பார்வேந்தன் திருமுன்பிலே
எல்லோரும் கண்டுநிற்க
இசல்வாக வீமனுந்தான்
ஆனைபிலம் உள்ளவீமராசன்
ஆகாசத்தில் எடுத்தெறிந்தார்
ஆகாசத்தில் போய் மீண்டுவர
அந்த சுரணையை தட்டிவிட்டார்
பிஞ்சிவிமுந்தல்லோ எள்ளும் மண்ணும்

பெரியமலை போலே குவிந்திடுமாம்
எள்ளு வேறே மணல்வேறே
3510 குருகுலத்து வீமனென்றார்
மெல்ல எழுந்தருளி வீமராச்ன்
விசாரித்தார் பல புத்திகள் தான்
என்னோடிவர் விட்ட பாதத்துக்கு
என்னை ஈஸ்வரர் வகுத்தபடி
முன்னே ஒரு குணம் செய்த நான்

## பீமன் எறும்புகளைக் காத்தல்

மூட்டை எறும்பின் கூட்டோடே
கூட்டோடு எறும்பின் இனத்தை
கொடுபோக காவேரி யாற்றில்
தொண்டாயுதம் குறுக்கே வைத்து
3520 செறுத்து எறும்பினம் உயிர்மீண்டேன்
உயிர் மீண்டு உதவி செய்தேன் நான்
உடனே எனக்கு வந்து உதவாயோ
அந்த வார்த்தை கேட்ட போது
அச்சுதன் தன் அருளினாலே
வந்து கூடுதே எறும்பினங்கள்
மன்னன் வீமனுக்கு உதவி செய்ய
சொல்லி அரை நாழிகையில்
துரந்து வெவ்வேறாய் குவித்திடுமாம்
நல்ல முடிவேந்தன் இவர் தானென்று
3530 நமக்கினி வந்த கருமம் என்ன
எல்லா தொழில்கள் செய்தாலும்
ஏராது இவர்க் கென்று என மொழிந்தார்
நன்று இவருட வளமை எல்லாம்
நாராயணருட அருளாலே
போருகள் பொருதாலும்
போருது வெல்ல இவரிடத்தில்
என்று தான் சொல்ல கேட்டிருந்தாள்
ஏற்ற புகழ் நல்ல நாககன்னி
நட்பும் இவருட நன்மை எல்லாம்

3540 நாராயணர் நண்பரல்லோ
எண்ணாமல் இவர் தம்மோடே
இருந்து சூது ஒன்று பொர வேணும்

## வீமன் கன்னியிடம் உரையாடல்

அந்த மொழி கேட்ட வீமராஜன்
அன்ன நடையாள் தன் முகம் பார்த்து
மின்னும் மொழியாளே நாககன்னி
விளம்பும் வார்த்தையை கேளும் என்றார்
சிந்து மாஞ்சோலை தனிலிருந்தோம்
சிறந்த முசட்டையும் காய் கிழங்கும்
கண்டகனி எல்லாம் தான் புசித்து
3550 கானவனத்திலே தானிருந்தோம்
கானவனத்திலும் காடதிலும்
கான வனத்திலும் தானிருந்தோம்
சூது பொரவும் நானறியேன்
துலங்கும் புகழ் நல்ல நாககன்னி
வகையறியேன் நாககன்னி
வந்து பொரவென்று எனையழைத்தாய்
மாட்டேன் இதுக்குனான் வெல்லுவேனே
வசங்கள் அறியேன் சூது பொர
தேனே பொருவது நான் அறியேன்
3560 சிவனே அருள் தாரும் அச்சுதரே
வாட்டம் இனி என்ன நாககன்னி
வாழும் உயிரைநீ மீண்டுதந்தாய்
தோற்றுப் போனாலும் நாககன்னி
துயரம் இல்லை என மொழிந்தான்
சற்றே பொருவீர்மா உலகில்
சடுதி ஒரு சூது நிரத்தும் என்றாள்
வெற்றி மணி முடி வீமன் என்றும்
விரைய அவரை தொழுதிருந்தார்
சீருடனே அணி தானும் நிரத்தி
3570 சித்திர முற்ற பொற்பலகையிலே

## வீமனும் கன்னியும் சூது விளையாடல்

வைத்த தொரு சூது நிரத்தி அழகாய்
மந்திரி காலாளும் படைகளும் வைத்தார்
ஆனைக்கிடையிலே அரசரை வைத்தார்
அதனிடையில் சில மந்திரி வைத்தார்
காலாள் தன்னுடவன்னம் தொனிக்க
கணக்கின் படியே வைத்து நிரத்தி
இனியல்லோ பொருகிற புதுமைகள் பாராய்
இருபேர் பொருகிற குதிரை பாராய்
கனபடை சில மந்திரி மாரும்
3580 கண்டு மகிழ்ந்தவர் சிந்தை தெளிந்தார்
குஞ்சம் இடையிலே குதிரைகள் சேரும்
கொடியும் விருதும் கூடவே சேரும்
கஞ்சமலர் குரல் நாககன்னி தான்
கடுகவே அணியை அடைத்தவள் பொருதாள்
காலாள் மந்திரி சேர இறங்கி
கருதியே அவள்தான் போருது பொருதாள்
நலமொடு வீமன் பொருகிற புதுமை
நன்நுதலாளும் கண்டு மகிழ
மதியாமல் வைத்த திசையது முட்ட
3590 வாய்த்த அணியுடன் பொருகிற குரலாள்
வகையோடு பொருதிட மதிகளும் இல்லை

## நாககன்னி தோற்றல்

மறுபடி வீமராஜனும் பொரவே
மந்திரி காலாளும் அப்படி வைத்தார்
ஆனைக் கிடையில் அரசர்கள் படவே
அதனிடையில் சில மந்திரி படவே
சீறின மந்திரிகளு மார்களும் படவே
திசையது முட்டவே அணிகள் அடைத்தார்
அணிகள் அடைத்தால் இனி என்ன போரு
அரசரை அடைத்தால் இனி என்ன பேரு
3600 போக கொடு நிலையும் போரும் இழந்து
போரும் இழக்க அணியை அடைத்தார்

தக்க தோர் வீமன் போரது வெல்ல
தையல் நல்லாள் நாககன்னி குழலாள்
தானவள் போர் தோற்றாளே
சூது பொருது தோற்றமே என்ன
தோகை நல்லாள் நாககன்னி
வாது பெருவார்கள் பலதும் உண்டு
வாதும் வலுவும் உம்மைப்போல் உண்டோ

## நாககன்னி பாராட்டுதல்

என்னைப் போல் சூது பொருவதெல்லாம்
3610 இறையவருட அருளல்லவோ
வண்மை இருந்தெல்லாம் அறிந்து கொண்டார்
மற்றொருவர் வெல்ல பொருவாரில்லை
உம்மைப் போலிந்த உலகு தன்னில்
உற்ற சூது பொர ஆளும் உண்டோ
மனம் பதைத்ததொன்றும் நினையாமல்
மங்கை குழலாளம்மை மனம் மகிழ்ந்தாள்

## பீமன் மாமனைப் பணிதல்

போற்றும் படியொற்ற மாமனையும்
பொன்னும் முடிவீமன் கைதொழுதார்
மாலையிட்டாரும் அங்கு அப்படி அருளும்
3620 மாமனையும் சென்று முகம் காட்டி
வேல்விழி ஒத்த நாககன்னி
விதியாள் படி என்று வந்திருந்தார்
பார்த்து பாடுபட்டு விஷம் மீண்டேன்
படி அருளவே வேணும் என்றாள்
தாயார் தந்தையும் மனமகிழ்ந்து
சம்மதித்துக் கொண்டார் அப்பொழுது

## நகரை அலங்கரித்தல்

தென்றல் வீசும் அந்த தெருத்தோறும்
சிறப்பாய் மாணிக்க கால் நாட்டி
பருத்த வயிரத்தால் கால் நாட்டி

3630 பக்க கம்புகள் வளை சேர்த்தான்
குங்குமப் பூவால் அலங்கரித்து
கோலம் செய்தார் அப்பொழுது
கோலம் பசும் பொன்னின் தகடடித்து
கொற்ற மணி பந்தல் அலங்கரித்தார்
தைதல் சிலர் கொண்டு சிகரு தன்னில்
தக்க உருவது எழுதுவாராம்
சாந்தாலே தரை மெழுகி
சந்தணத்தால் கோலம் இட்டார்
முத்தாலே நிற மரக்கால்
3640 முழுதும் பட்டால் அலங்கரித்தார்
மாமன்மயார் மொழியாரும்
மாமன் பாதத்தை வணங்க வென்ன
பத்தி தோறும் விளக்கேற்றி
சந்திரன் ஒளிவது போல்
பாங்கியர் வந்து பக்கம் நிற்க
பாகல் வான்னுளி போல் நின்றார்
மங்கை கல்யாணம் காணவென்று
மந்திரிமார் வந்து புடை சூழ
கண்டு மடவார்கள் எல்லோரும்
3650 கனக மணி பொன்னு மண்டபத்தை
பொன்னு மணி முடி மண்டபத்தை
போற்றி நின்று புகழ்ந்தனராம்

## நாககன்னியை மணக்க தயாராதல்

மன்னன் வீமனும் எழுந்தருள
மங்கை கல்யாணம் செய்ய வென்ன
திரு மஞ்சண நீராட்டி
தேவாரங்கள் தான் கூட்டி
துட்டராஜன் கெட்டுங் கெட்டி
சூரியன் போல் பொட்டு மிட்டு
விடிய உதிக்கின்ற கதிரவன்போல்
3660 மேனி எங்கும் ஒளி வீசிடுமாம்
பந்தலிலே எழுந்தருள

பணி மாற வெடி சுடவே
தவுல் முரசு எக்காளம்
தாரை சின்னம் கைமணியாம்

## நாககன்னி ஒப்பனை செய்தல்

சிந்தை மகிழ்ந்து நாகக் கன்னியை
திரு மஞ்சன நீருமாட்டி
சேயிழை நாக கன்னியர்க்கு
செப்பெடுத்து சிறப்பாக
மஞ்சனை சவ்வாது வாடையது
3670 மார்பிலங்க மிகப்பூசி
காலாழி பீலி இட்டு
கையில் வளை காப்பணிந்து
அஞ்சுவர்ண பதக்கனிட்டு
ஆபரண மாலை இட்டு
கொஞ்சும் மொழி நாககன்னி
பொன்கொடி போல் அழகாய்
முத்து வடம் தரித்தாள்
மோகன மாலை பதக்கன் இட்டு
பந்தலிலே எழுந்தருளி
3680 பாவையர்கள் குரவையிட
வாத்தியங்கள் பல முழங்க
வந்தாளே பந்தலுக்குள்

## திருமண ஊர்வலம்

அதிய பொன்மணி மண்டபத்தில்
அழகொடு தேருகள் இருபுறம் வரவே
முத்து தேருகள் இருபுறம் வரவே
முகில் தேருகள் இருபுறம் வரவே
சந்திரனுக்கிணை ஒப்பதோடும்
சகல தேர்கள் இருபுறம் வரவே
இந்திரனுக்கிணை ஒப்பதோடும்
3690 இணை இணை தேருகள் இருபுறம் வரவே
மாலையிடும் மண்டபம் அதிலே

வந்தார் இந்திரன் ஒளிவது போல
அந்நேரத்தில் வீமன் தனையும்
அழகொடு மந்திரி மார்களும் சேர
நாகராஜனுட சேனைத் தளமும்
நாட்டில் இருக்கும் சேனைப் படையும்
ஈஸ்பரனாருட திருவருளாலே
இட்ட காவணம் மண்டகமதிலே
குரு குலத்து வீமன் தன்னை இருத்தி

## வீமன் தாலி கட்டல்

3700 கொடி இடை நாககன்னி அப்போது
பொன் மாலையது தன்னை எடுத்து
புகழுடன் வீமராசன் செப்பை திறக்க
சித்திர பொன்னும் செப்பை திறந்து
திருமங்கிலியம் யெடுப்பாராம்
நாராயணருட திருவருளாலே
நாககன்னியவளை மாலையிடவே
வீமன் தானும் மாலையிடவே
மிகவே மடவார் குரவையொலிக்க
இந்திரலோகம் மண்டபமதிலே
3710 இசல் பெறு வீமனும் ஏந்திழையாளும்
ஈஸ்வரனாருட திருவருளாலே
இசல் பெறு மண்டபத்தில் இருந்தார்
பொன்னு மணி முடி வீமனும்
பூவை நாககன்னி மாலையிட்டார்
மன்னன் வீமனும் மாலையிட்டு
வாழ்ந்திருந்தார் மாளிகையில்
மாலையிட்ட தோர் விசனமெல்லாம்

## கும்பகராசன் கோபமடைதல்

மன்னன் கும்பகராஜன் தான் கேட்டான்
காலம் இம்மட்டுக்கு இருந்த பெண்ணை
3720 கைபிடித்தவர் உண்டாச்சே
பாரவெடி என்ன முழக்கம் என்ன

பார வாத்தியம் கேட்டு தென்ன
ஆரவார மென்ன திடரும் என்ன
அதிர முழக்கங்கள் வெடிகள் என்ன
சாபமிட்டுப் போன படியறிந்து
தள்ளுதல் செய்தார் உண்டாச்சே
மாலையிட்ட உயிர் தனையே தான்
மற்றும் பல வித கேடாயே தான்
காலமே சென்று அறிந்து வாடா
3730 கண்டு கொள்ளலாம் கருமம் எல்லாம்

## ஓட்டனின் கேள்வி

என்று ஓட்டன் தன்னை வரவழைத்து
உற்ற கருமங்கள் அறிந்து வாடா
திட்டென ஓட்டன் மிகத்தொழுது
செய்தி அறிந்து ஓடி வாறேனென்ன
நாகப்பட்டிண நகரிலே
நாகராஜாவை முகம் காட்டி
நல்ல திருமுகம் கண்ட போது
நலமாய் உரைத்தானே வார்த்தை எல்லாம்
என்னுடைய தம்புரானே
3740 இந்த கேள்விகள் வருவானேன்
மானக்கேடுகள் செய்தீரோ
மருகன் திரு மனதறியாமல்
செய்தீரோ நீர் கல்யாணம்
திருமருகனை அறியாமல்
அதிய சண்டை விளைத்தீரோ
அவருடை திரு மாமனல்லோ
வேந்தன் கும்பகராஜன் அங்கிருக்க
வேறொருவர் இங்கு உண்டாச்சோ
கலகம் விளைவதொன்றும் அறியாமல்
3750 கருதி ஒருவரை தானினைத்தாள்
சண்டையிட வேண்டாம் தம்புரானே
சடுதி கடலைதான் கடக்கச் சொல்லும்
கண்டதுண்டமாக வெட்டுமுன்னே

கடலை கடப்பது கருமமென்ன
கொஞ்சமென்று நீர் நினைக்க வேண்டாம்
குலத்துக்கு இழுக்கல்லோ தம்புரானே
தஞ்சம் இவர்க்கிங்கே ஒருவரில்லை
சண்டைவிளையாதே போகச் சொல்லும்
கண்டிருக்க வேண்டாம் கருமமெல்லாம்
3760 கடலைகடத்திடும் யென மொழிந்தார்

## வீமனின் பதில்

உண்டு நமக்கே நீரும்பெரியோரென்று
உண்மை நினையாமல் நன்மை செய்தீர்
முந்த ஒலை நான் விட்டேனில்லை
முகிழ்த்தத்துடன் வந்து மாலையிட
என்னோடே வந்து சினத்தாக்கால்
எழுத்தின்படி வருமோ என மொழிந்தார்
முன்னே மாலையிட வந்தவர்தான்
முறைக்குரியவர் தானல்லவோ
அன்று சூதுசெய்த தெல்லாம்
3770 அவருடைய விதிவசம் தான்
யென்று யெழுத்தின்படி போமே
இறைவருட அருளல்லவோ

## பழையகதை கூறுதல்

நாராயணருட அருளாலே
நாகக்கடலோடே வந்தவஞ்சி
ஆராலும் கரையடுக்க ஒண்ணா
அதிய தோணிசொல்ல அருங்கடலில்
பாரத்திரவியம் போகுதென்ன
பலரும் உரைத்தவார்த்தை கேட்டு
அன்னையரும் சொன்னபடியாகும்
3780 அரிய கடலருகே சென்று நின்றாள்
முன்னே கடலோடே வந்தவஞ்சி
முழுதும் படியாக வார்த்தை செப்ப
அந்தவஞ்சி கரைக்கருகவேதான்
அவனியுள்ள பலசனங்கள்

ஆனைகள் வலித்திடவராமல்
அதிய மாயவர் அருளாலே
வாழும் நாககன்னியவள்
மனதில் நினைந்துவடம் தொடவே
வஞ்சியது அன்னேரம்
3790 வருகுதல்லோ கடலைவிட்டு
வந்துகரை சோ்ந்திடுமாம்
வரிசையுள்ள மாந்தையர்கள் காண
சேர்ந்த புகழ் மாந்தையர்கள்
திகைத்தார் பூட்டவிழ்க்க மாட்டாமல்
மாயன் அருள் பெற்ற நாககன்னி
வஞ்சி தன்னில் பூட்டவிழ்த்தாள்
வஞ்சியுள்ளே பார்ப்பளவில்
வஞ்சபடுசவம் இருக்கக் கண்டாள்
பஞ்சியில் பற்றிய நெருப்பது போல்
3800 பார்த்தாளந்த படுசவத்தை
வாழ்ந்தாலும் நான் இவரோடே
மரிக்கிலும் நான் இச்சவத்தை
உலகையளந்தவர் திருவருளால்
உடன்கட்டை சேர்வேனானென மொழிந்தாள்
கறந்தபாலது உகந்தவர் போல்
கல்பித்தவனுடவிதிப்படியே
ஆயிரத்தெட்டு நாகத்துக்கும்
ராசவாயுள்ள நாகமுண்டும்
மைந்தருக்கு ஒரு கலம்பால்
3810 வண்மையுடன் கொடுத்துவந்தாள்
பைந்தொடியாள் நாககன்னி
பால் வார்த்து வளர்த்ததொரு
ஆயிரத்தெட்டு நாகத்தையும்
அறிக்கை செய்து வரவழைத்து
நாகமது வந்து விசமீண்டு
நாராயணருட திருவருளால்
பாதம் தனை பற்றி பாம்பினுட
பைந்தொடியாள் விசமீண்டு கொண்டாள்

## வீமன் நடந்தது கூறல்

மீண்டாளவ ளோடே போரும் செய்தேன்
3820 மிக்க எள்ளு சுறுணை வைத்தாள்
பொருத சூததனையும் வென்று
பிலத்தாலே என்னை எடுத்தெறிந்தான்
மாலை வைக்க வேணுமென்று
வையகம் எல்லாம் பேராச்சே
சூரத்தன் உள்ள படைகளெல்லாம்
நாமன்றறியாமல் வந்ததர்க்கு
பேச இனிவேண்டாம் பூதலத்தில்
பெரியோர்கள் செய்த வினைகளெல்லாம்
மாயன் அருளாலே வந்ததர்க்கு
3830 மனதுக்கேற்றதை செய்யச் சொல்லும்
கலகமினி சற்றும் வையாமல்
கடுக போய் சொல்லும் என மொழிந்தார்
பால் குடித்தவர் அவரல்லவோ
பார்த்துக் கொள்ளலாம் கருமம் எல்லாம்
காலத்தே கடலை கடத்திவிடும்
காசினியிலிருந்து வாழஓட்டார்
வாழ ஓட்டார் உண்ண ஓட்டார்
மங்கிலியம் தரித்த மன்னவனை
கண்டு நீயவர் தம்மோடே
3840 கரும மிதுவென்று பேசவேணும்
உண்டோ அவர்க்கங்கே காணவென்று
உரைத்தபடி கேட்டார் வீமராசன்
கண்டீரோ ஓட்டன்பறைந்த தெல்லாம்
கருதி பறைந்தவன் வலுவுகெட்டி
மறைத்து பறைந்திடும் வழமை கேள்க்க
நாமவரோடே ஒரு வார்த்தை
நாமுரைத்திட வேண்டாமோ

## ஓட்டன் வீமனை வணங்கல்

காதலுடன் வாழும் நாககன்னி
கண்டுவாறான் ஓட்டன்னென்றாள்

3850 திட்டன சென்று கண்டபோது
திடமாய் கதிரவன் ஒளிவது போல்
சென்று உடன்வந்த ஓட்டனும் தான்
திகைத்தானே வீமன் வடிவைகண்டு
கண்டு ஓட்டனும் மதிமயங்கி
கடுகியவனும் போய்கைதொழுதான்
ராசமன்னராய் பிறந்தோர்கள்
இவரை போலுண்டோ அழகதுதான்
ஆராலும் அவர் வடிவைக்கண்டால்
ஆசை கொள்வாரே அம்புவியில்
3860 போர் பொருதாலும் பொருவாரில்லை
போகச்சொன்னாலும் போறதில்லை
சதிவாய் விளையும் காண் உங்களிலே
சாமம் விடியும் என் தையலரே
கண்டிருந்தாய் போல் மாலையிட்டு
கலியாணம் மிட்டு வாழ்ந்திருந்தார்
கூத்திரண்டும் நினையாத அண்ணரோடே
கூடியொருதம்பியுண்டு பிறந்தாரென
அண்ணருட திருமனதில் கண்டு கொண்டு
அறியாத அண்ணரோடே உரையுமென்றார்
3870 வர்மமாய் வலுபேசினார் என்று உரையாதே
மனது அறிந்துமாலை யிட்டதுவும் இல்லை
யேறிமாறி மாலை யிட்டதுவும் இல்லை
இத்தரையும் சென்று உரையாய் அண்ணரோடே
அப்பொழுது ஓட்டனும் தான் கைதொழுது
அடியேனிந்த மொழி உரைப்பதில்லை
இப்பொழுதே நீர் மொழிந்த வார்த்தை எல்லாம்
இட்டுமொழி பேசாமல் பேசுவேன் நான்
இப்படி தான் வார்த்தைகள் கொற்றதென்று
ஏகாந்தமாக வழிகள் நடந்தார்

## ஓட்டன் கும்பகராசனிடம் பேசுதல்

3880 சிந்தயிலுற்றதொரு உபாயத்தோடே
திட்டனவே சென்று முறையுமிட்டார்

எந்தனுடமாமனுக்கு யெற்றதாலே
இதத்தால் வீமன் புதுமை எல்லாம்
அப்பொழுது ஓட்டனும் தான் கைதொழுது
அறிவித்த மொழி பலதும் தானுரைத்து
எப்படி உரைக்கபோறேன் தம்புரானே

## வேறு

எழுத்தின்படியோ விதிப்படியோ
மாலை இட்டது உண்மை
காண்தம்புரானே
3890 மாலை மணவாளனுட
வடிவைக்கண்டால்
கால்கள் நடுங்கிடுமே
அவரைக் கண்டால்
கதிரவன் உதித்தால்
போல் கண்டேன் மன்னா
யெதிரில்லை கண்டாக்கால்
யென்று தோனும்
யென்றால் அவர் வாய்மொழியால்
நானும் வந்தேன்
3900 அருகே சென்று வார்த்தை
சொன்னார் மன்னவரும்
அடியேன் அதைக்கேட்டு
சொல்லவந்தேன் மன்னா
ஒருவரிவர் அழகைப்போல் கண்டதில்லை
உண்மைமொழி பேசி
வந்த சொன்னரென்று
நம்முடைய தம்பி என்று கண்டிருந்து
நாட்டைவிட்டு கடல்
கடத்த வேண்டாமன்னா

## கும்பகராசனின் பதில்

3910 அதிக முற்று கும்பகராசன்
யேது சொல்வான்

அவன் பிறம் தாங்கி
நீ பறைவதென்ன
பிரிய முற்று வந்தாய்
நீ வார்த்தை கேட்டு
பேணி அவன் பிறம்
தாங்கி பறைந்த தென்ன
மாமனோடே கைக்கூலி
வாங்கிக் கொண்டு
3920 மழுப்பியே வந்தாலும்
உம்மை விடுவதில்லை
தம்பியாரோடே கூட்டி
சேர்ந்து கொண்டால்
தாரம் இல்லை போமே என்ன
ஒட்டன் சொன்ன வார்த்தை
யெல்லாம் தம்பிமாரோடே
உடனே கும்பகராசன் வாக்குரைத்தான்
தம்பிமார் தனக்குரைத்து கும்பகராசன்
தான் அவளை புகழ்ந்து
3930 சொன்னான் ஒட்டன்தானும்
சேட்டத்துடன் வந்த செய்தியெல்லாம்
திட்டென அறிந்தோடிவாறாமென்ன
நாட்டுக்குரிய நான் இருக்க தானிருக்க
நகரி ஆழ வேறொரு ஆண் உண்டாச்சே
மாமனென்றவன் சொல்லவையகத்தில்
மருமகனிவர் தானென்று அவரும் சொல்ல
வையத்தை இவன்தானே
கையில் அவர்கொடுத்து
வாழ்வெடுத்து தானிருக்கும் மன்னவரே
3940 வண்மையுடன் அவன்தனையும் மாமன்காண்
மாலையிட்ட நாககன்னி தானும் காண்
அஞ்சாமல் மாலையிட்டவனை நானும்
ஆழக்கடலுக்கப்பாலே விடுவேனென்றாள்
காலத்தாலே ஒட்டி கடல் தன்னை கடத்தாமல்
கருமங்கள் பார்த்த தெல்லாம்

வேலொற்ற விழியாளை மாலைவிடுவிக்க
வினையுண்டே மாமன் செய்தான்
மாலை தானிட்ட மன்னன் மணித்தலையை
மாமன் திருக்கண் முன்னே வைத்து
3950 மாலைவிடுவித்த மங்கை நல்லாளுடைய
மங்கிலியம் வாழுமோதான்
காலத்தாலே அவன் உயிரை கொல்லவே
போககருமங்கள் சொல்லுமென்ன
கண்டு கொண்டிருந்து வேட்டை விளைவித்து
கடலை கடத்திடுவேன்
கண்டதுண்ட மாகவெட்டி
சிரத்தை அறுப்பேன் கண்டு கொண்டாலவனை
கண்முன்னே வரச்சொல்லு மருமகன் பேரும்
என்பேரும் கண்டால்லவோ தெரியும்
3960 உடவாளும் யெடுத்து
உடன் மாமனோடு மருமகனும்
உண்மையாய் கேட்டிருந்தான்
இடிபோலேவைக்குகிறான்
வாளுமங்கே மின்னும்
எப்படி யான் சொல்லுவேன்
உடவாளு முனைகண்டு
வயறெல்லாம் ஏங்குதையோ
மதி சொல்லு நாககன்னி
என்று வீமனும் கேட்டளவில்

## வீமனின் உரையாடல்

3970 வாளுக்கிரையாக்கிடுவார் யென்னை யின்று
மதியேன்ன கடல் கடக்க
கோளும் தீயும் வந்து
முழுத்துதே நாககன்னி
கோளமனதெனக்கு
காவத்தாலே கடன் தன்னை கடக்கவோ
உன் கண்முன்னே கொல்லாமல்
பாலொற்ற நாககன்னி பரமாத்தமிதுவென்று

பதறி எதிர்த்து சொல்லுவாள்
மாமனருகே சென்று மதியான வார்த்தையை
3980 யோசிக்க சொல்லுமக்கு
நமக்கங்கே விதவிதமாய் நாட்டாருண்டு
நம்மை தற்காத்து கொள்வாரென்று
நல் மனத்தோடுரைக்க
அன்னயே தானீன்ற வர்க்காகவே
இடைக்கோரா பத்து வந்தாலும்
உன்னியகருமங்கள்
உடக்குவாரென்றேதே உபசாரம் பேசாதே
அன்ன நடையாள் நாககன்னி
சென்று அன்பாக ஏகிவிட்டாள்
3990 பொன்னுமணிமுடிமாது தான் சென்று
உறுதியாய் வார்த்தை சொல்லப்பா
என்னபடிதம் மாமனோடே சென்று
எழுந்தபடி உரைத்தாள்
வன்னதிருமுகம் குழல் காதும்
மாயவடிவுகொண்டு
உன்னிய கருமங்கள்
முகியாதிவரோடே
உட்காராதே கும்பகராசா
மருமகனக் கிருக்கவே
4000 மாமனுக்குரியவர்
மணம்செய்த புதுமைக்குத்தான்
அதியதோர் மணம் செய்த
புதுமைக்கு தானின்று
ஆரோதானினவே
வங்கணமே துவதையேது குலமேது
ராச குமாரனேதோ
கணங்கள் மடவாளை
யுமிழ்ந்து கடந்தான்
கருமங்கள் சொல்லாதே
4010 அந்தவார்த்தை கேட்ட
போது வீமராசன்

அன்பான வார்த்தைகள் பேசுறாராம்
சிந்தையில் நினைந்தபடியதாக
சிவன் கூடி நானிந்த
செய்தியெல்லாம்
முன்னே முத்தின்படியே நன்றாய்
முழுத்தமது செய்தேன்
நான் பெண்கொடியே
தம்பியை படுபால்
4020 நீங்கள் அழைத்துக் கொண்டு
தாக்கினையாகவே நீங்கள் என்னை
என்னபடி செய்யலாம் கும்பகராச
எல்லாம் உங்கள் மனதுக்கு உற்றபடி
அன்பான அண்ணருடமனதில் கண்டு
அண்ணர் நீங்கள் இல்லாமல் துணையுமில்லை
தாதாரும் தம்பிமாரும் இல்லை
இனியாரும் துணையில்லை எந்தனக்கு
ஏனில் ஆராய்ந்து
உனைப்படியாய் இசம்பினேன் நான்
4030 வளமான கடல் கடந்து போக மதியறியேன்
பதறாமல் அரசான சொல்லுமென்ன
மலையாதே மலையறங்கள் என்னை கூட
நாகராசா சொல்லும் என மொழிந்தாரே
எழுந்து சிலபடிவார்த்தைகளை
இப்போ பேசினான் கும்பகராசன்
ஏழுகடலையும் குதித்து வந்து
இசல்வாய் மங்கிவியம் தானும் கண்டாய்
உலகை திருவருளால்
ஒன்றும் நினையாதே மலங்காதே

## வீமனின் கோபப் பேச்சு

4040 மனங்கள் தளர்ந்தது நீரல்லவோ
தார்குழலாளை இழந்து விட்டு
சடுதி உயிர் கொண்டு போகாவிட்டால்
நம்மோடே எதிர்ப்பதற்கு மதிகளில்லை
நாடி முன்னேவைத்து உடவாளால்

கண்முன்னிலே கடத்தாவிட்டால்
கண்ட துண்டமாக வெட்டிடுவேன்
நின்ற வீமனுடகண்சிவந்து
நீதி மாமா நீர் ஆகாது
4050 என்னபடி சொன்னார் கும்பகராசன்
இருகண்களும் வெகுண்டெழுந்தான்
உன்னுடைய வாளாலே வெட்டவந்தாய்
ஒன்றுதனைக்கேளாய் கும்பகராசா
உடவாளும் உன்னுட பிலமும்

## வீமனின் சவால்

அறிவேன் கும்பகராசா
உடவாளை பறித்து உன்மணிதலை
தன்னை தறிக்கவும் பாரமோதான்
தூக்கி உன்னை நிலத்தோடே அடிக்கட்டோ
சுணை தன்னை வருத்தட்டோதான்
4060 அடைக்கின்ற உடவாளைக் காட்டி வீமன்
அறியாயோ நீயுமென்ன
தாள்சை பறைந்த மொழிதன்னை
கேளாமல் சத்தம் பறந்தாய் மன்னா
பெண்ணையும் மண்ணையும் மகிழ்ந்து
கொடுப்பேனென்று பெருமைபறையாதே
உன்னால் ஒரு கணையெய்யலாம்
யென்றல்லோ மணிதலை வெட்ட வந்தாய்
மாமன் திருமுகம் பார்த்தல்லோ
உன்னை மகிமையாய் விட்டேன் நான்
4070 பாராதுடன் வாரும் தேர்பரியெல்லாம்
வீமனை பாராமல் போவதுண்டோ
தாரமான என்தேவி தன்னை நீங்கள்
சந்தியில் கொடுபோக
சடுதியில் படை கொண்டுவரச் சொல்லும்
இன்நேரம்தான் உண்மை மன்னா
உடவாளும் சேட்டமும் ஒருமித்து
காணலாம் உறுதியாய் படைவரட்டும்

## கும்பனின் பதில்

அந்த வார்த்தை கேட்டு கும்பகராசன்
அகமகிழ்ந்து ஏது சொல்வான்
4080 இந்த நகரியில் வந்த தொருவன்
என்வாளை பறிப்பேன் என்றான்
இந்த நகரியில் ஒருவன் வந்து
இடர் செய்து வாளை பறிப்பதுண்டோ
கடலை கடந்து நீ போகாதே
கண்டு கொள்ளலாம் வீமராசா
அறிகுறித்தார் கும்பகராசன்
அண்ணரோடே விண்ணப்பம் செய்தான்
பார்மருமகனைக் கண்டு நான் வந்தேன்
பரமாற்றமுடன் சொன்னது உண்மை
4090 தாரமாய் உள்ள வார்த்தை சொன்னான்
தம்பி என்று கண்டுவரவே சொன்னான்
நாமவருட அண்ணரென்றும்
நம்கூடி பிறந்த தம்பியென்றும்
தாயும் தமயரும் இல்லாதவரானால்
தாண்டம் சரிசொல்லி போருவாரும்
முன்னே வந்து தான்
தாள்ச்சை சொன்னான்
பின்தூக்கி கையடிக்க வந்தான்
என்னோடவன் செய்த பங்கத்துக்கு
4100 எழுத்தொரு நாளும் மறவாதே
கொஞ்சமோ அவனொருவனல்லோ
கோன்மனதுள்ள மன்னனில்லை
தண்டாயுதத்துக்கு பெரியவனாம்
தார மருமகன் வெட்ட வந்தான்
புதியமரு மகன்
வேறுவிதங்கள் தந்தான்
பொருது கொள்ளலாம்
எனமொழிந்தான்
அப்பொழுது கும்பகராசனும்
4110 அவனேதுவார்த்தை சொல்வான்

இப்பொழுது அவனை வெட்டி
யேழுகடலையும் கடத்த வேணும்
மாமன்கண்டிருக்க வேதான்
மணி தலைவெட்டி இருதுண்டாய்
நாமுமினி பார்த்தங்கிருப்பதென்ன
நல்லபடைகளை திலிப்போமென்றார்
சேனைபடைக்காரன் கும்பகராசன்
தேரும் பரிகரி தனைத்திலித்திதான்
ஆனைப்பிலம் உள்ள வீமராசன்
4120 அன்ன நடையாளை முகம் பார்த்தார்
படைகள் வருகுதே நாககன்னி
பார்த்தங்கிருந்தாலும் கருமமல்ல
இடையில் நான் வந்தகப்பட்டேனே
என்னமதி செய்வேன் பெண் கொடியே
நானும் கடலை கடந்து போனால்
நாட்டில் திரியோதிரன் நகைப்பான்
படைகள் பார்க்கவே பெண் கொடியே

## வீமன் ஆயுதம் கேட்டல்

பாரா ஆயுதம் ஒன்றும் இல்லை
சிறிய ஆயுதம் பணிகள் செய்து
4130 திட்டென தாரும் நாககன்னி
அப்பொழுது அந்த நாககன்னி
அரிய பர்த்தாவை முகம் பார்த்து
ஏதேது ஆயுதம் வேணும் என்று
எனக்கு நீர் சொல்லும் பர்த்தாவே
பார ஆயுதம் ஒன்றும் வேண்டாம்
பல ஆயுத தொழில் கற்றேனில்லை
ஆரங்கே அவரோடே எதிர்க்கப் போறார்
ஆனால் அவர் போருகாணவேணும்
போரானை எடுக்க ஒண்ணா
4140 இரும்பு தெண்டாயுதம் பணி செய்ய
அந்த வார்த்தை கேட்ட போது
அழகு பர்த்தாவை முகம் பார்த்து

இந்த ஆயுதம் பணிகள் செய்தால்
எடுத்து பொருவீரோ பர்த்தாவே
எடுத்து பொர மாட்டேன் ஆகிலுமோ

## கொல்லரை அழைத்தல்

இசலாய் பணி திறக்க கொல்லருண்டோ
பாரிலுள்ள வல்ல கொல்லரைத்தான்
பரிவினுடங்கே வரவழைத்தார்
பாரில் மன்னன் படைபார்க்க
4150 பரிவினுடனே தான் வரவழைத்தார்
ஏரான எடுக்க ஒண்ணாத
இரும்பு தொண்டாயுதம் பணி செய்ய வேணு
உன்னி உலகாளும் தம்புரானே
ஒரு நாளும் பணி செய்தறியோம்
மாயப் பணி இது தம்புரானே
மாட்டேன் என்று சொல்ல ஒண்ணாது
ஏகப்பணி இது நானும் செய்திடுவேன்
இரும்பும் உருக்கும் வரட்டே என்றார்
அந்த வார்த்தை கேட்ட தொழில்கள் எல்லாம்
4160 ஆனபிறகே கேட்டங்கவர் எடுத்தார்

## இரும்பாயுதம் தயாராதல்

சிந்தை தெளிவுள்ள மாற்றை வேந்தர்
சீருடன் பணி செய்ய துடங்குவாராம்
உருண்டை பாளம் இரும்பை கொண்டு வந்து
உலைமுகம் தனில் குவித்திடுவார்
எத்திசையும் சென்று கொல்லர் கரிகள் வெட்டி
இருபுறமும் மலை போல் குவித்திடுவார்
கொண்டு சென்ற கரிகள் எல்லாம் வள்ளிக் கொல்லர்
குருவே சரணம் என்று கொண்டடுக்குவாராம்
இரும்பும் உருக்கும் ஒன்றாக வைத்து
4170 இதமுடன் எரியிட்டு தீ ஊதினார்
இரும்பும் உருக்கும் ஒன்றாய் வெந்திடவே
இட்டகரி நீக்கியே எடுத்து வைத்தார்

இருபுறமும் கூடம் எடுத்துக் கொல்லர்
இரும்பு தெண்டாயுதம் அடித்து நீட்டி
தெண்டாயுதம் தட்டி நீட்டிடவே
சிறந்த புகழ் நல்ல வள்ளிக் கொல்லர்
படியொத்த கொல்லர் உருட்டி திரட்டியே
பண்பாய் அரம் கொண்டு ராவி நீக்கி
கடுக தெண்டாயுதம் பணி முகித்தார்
4180 கருவட்டியாய் தெண்டாயுதத்தை வைத்தார்
கையில் இதம் பாரும் தம்புரானே
தாரை ஒத்த தெண்டாயுதம் கண்டபோது
தலை தானம் பொருந்து
தில்லை வள்ளிக் கொல்லர்
தலைக் கனம் போதரவாய் செய்யும்போது
சரியாய் கனங்கள் வாச்சுதென்றார்
இனக்கிந்த தெண்டாயுதம் வைத்தார்
இனி உள்ள முறைபணிகள் செய்ய வேணும்

## தண்டாயுதத்தை அழகுபடுத்தல்

கை தொழுது தெண்டாயுதத்தை அழகாய்
4190 அழகாய் சாதிலிங்கம் பூசி நன்றாய்
கைப்பிடி பொன்னினாய் பூசியல்லோ
கடுக தெண்டாயுதம் பணிமுகித்தார்
எழுவது முழமுள்ள தெண்டாயுதத்தை
எடுத்தார் இடுக்கினார் கக்கத்திலே
இணக்க முடன் வீமன் மனம் மகிழ்ந்து
ஏகாந்த சுகந்தமாய் வீற்றிருந்தார்
தெண்டாயுதம் பணி செய்த கொல்லருக்கு
சிறந்த பரிசைகள் தான் கொடுத்தார்
பார் அறிய வள்ளிக் கொல்லருக்கு
4200 பணம் பொன்வளை தான்கொடுத்தார்
சாத்திரை கேட்டு மாந்தையர்கள்
தான் தொழுதவர் தன்பதியில் போனார்
எடுத்து கொடுவா தெண்டாயுதத்தை
எழுதும் எழுத்தாணி எல்லாம் வைத்தாரே

வைத்தார் கோவில் கல் ஆனதிலே
பார்த்து நாககன்னிதான் மனமகிழ

## தண்டாயுதத்தை வரவழைத்தல்

இரும்புத் தொண்டாயுதம் வந்த செய்தி
இசல் நாககன்னி தானறிந்தாள்
எழுவது முழமுள்ள தெண்டாயுதம்
4210 எந்தவித மென்று காணவேணும்
வீமராசனிடத்தில் சொல்லி
விரவாய் கொடுவர வேணும் என்றார்
வீமன் திருமுன்பில் வந்தல்லவோ
விளம்பும் மொழியது தனைக்கேளும்
மாமனாருந்தன் தெண்டாயுதம்
வருந்திக்காண வேணும் என்றார்
நாம் இதற்கு ஆளல்லவோ
நாககன்னி செய்த உபாயத்தாலே
ஏழுமதயானை தன்னை விட்டு
4220 இழுத்துக்கொடு வந்தேன் தெண்டாயுதம்
ஆனைகொடு வாரும் கொடு போக
அதிய மாமனார் திருமுன்பிலே
ஆனைக் கொடு வந்த மாகுத்தற்கு

## ஆயுத மகிமை

ஆயுதத்தின் வடிவைப் பார்த்தார்
கானகத்தில் மலைபோலே கனங்கள்
கனம் சற்றும் அடையாது தம்புரானே
ஏழு மதயானை நடத்திச் சென்று
இரும்பு தெண்டாயுதம் இழுத்தனராம்
வேண்டும் மதயானை வடம் பிடிக்க
4230 வீறிட்டு கீழ் வைத்து கரைந்திடவே
ஆனைதனைக் கொல்ல வேண்டாங்காண்
ஆனால் நீங்கள் போங்கள் என்றார்
தெண்டாயுதத் தோடே நாகராசாவை
சென்று முகம் காட்டி தொழுது நின்றார்

வீமனுமோ தெண்டாயுதம் எடுக்கும்
புதுமை பாராய் மாமா என்று தெளிந்து வீமன்
மனதாய் சென்று நின்றார்
எத்திசையும் படை கண்டு நிற்க
இயல் மாமன் அச்சுதரை கைதொழுது
4240 ஆனை பிலங்கள் தந்த அச்சுதனார்

## வீமன் போர் புரிதல்

இறைக்கின்ற ஏழானை பிலமுடைய வீமராஜன்
எடுத்தாரே தெண்டாயுதம் இடது காலாலே
இடது கால் கொண்டு தெண்டாயுதம் தான் எடுத்து
இடது பக்கத்தில் பகுந்து கைபுகுந்து
வலது கையிலே பிடித்துக் கொண்டு
மாமனையும் கைதொழுது வீமனாரே
இடசாரி வலசாரி கால் பகுந்து
இதமுடனே வீசினாராம் மாமன் காண
வடி ஒத்த வலசாரி சிவனை தொழுது
4250 வீசினார் தெண்டாயுதத்தை
நடசாரி சிவடு வைத்ததைக் கண்டு
நாகராஜன் மன மகிழ்ந்துடன்
இடியொத்த வீமனுக்கு எதிரி உண்டோ
எல்லோரும் மன மகிழ்ந்து கொண்டாடி
ஏழானை தான் எடுக்க ஒண்ணாத
இரும்பு தெண்டாயுதம் எடுத்துக் கொண்டு
வாழும் வடி ஒத்த வலு வீமராஜன்
மாளிகை தனில் எழுந்தருளுவாராம்
மாமனும் மனம் மகிழ கோவில்கல் தன்னில்
4260 தெண்டாயுதம் பூசித்தங்கே அருகே வைத்து
சிம்மாசனத்திலே வீற்றிருந்தார்
கண்டு மகிழ்ந்தாரே நாகராஜன் தான்
கையில் தெண்டாயுத வடிவையும் கண்டு
கும்பகராஜன் தான் வருந்தி மாமன்
குறியும் குணங்களும் அவரோடே சொல்ல
முந்த விலக்காமல் நாமிருந்தாக்கால்

முடிந்திடுமே அவருடைய படைகள் எல்லாம்
சிந்தை அறியாமல் வீமராஜனுந்தான்
திருநீட்டை எழுதி அனுப்பிவிட்டார்
4270 எழுதியே ஓலை எழுதிவிட்டதை கண்டு
கொண்டே எழுந்தேதான் மருமகள் வாசித்துக்
புதிய மருமகனுட கெருவிதத்தை
புகழாக மாமனும் எழுதி விட்டார்
விட்ட திருநீட்டின் வாசகந் தன்னை
விரையவே கும்பக ராஜனுந்தான்
இறைக்கின்றயேழானை பிலமுடைய
இரும்பு தெண்டாயுதம் எடுத்தவன்காண்
அதிய பிலங்களுள்ளவன்காண் மன்னா
ஆனைபிலமுள்ள மன்னவன் காண்
4280 பாரவாளால் போருவானே அவனும்
பருத்த ஆயுதம் எடுத்து பொருவானே
தாயும் தமையரும் இல்லாதவனாகும்
தக்கப் படை பொர பெரியவனாகுமோ
நம்மையவன் வெல்ல படை பொருவானோ
நாங்கள் அவனோடே படை பொர மாட்டோமோ
வன்ன மணித்தலையை மாமன் காண்
வாங்கிக் கொண்டு வரவேணும் என்றானே
நல்ல மாமனார் கண்டிருக்கவேதான்
நாமும் ஒரு போருபொருதிடுவேன் என்றான்
4290 என்றந்தகும்பகராசனவன் தான்
இறப்பேனென்று பொருதான் வீமனும்
பகலவன் ஒளியை மறைத்திடவே தான்
தெக்கின் பெரும்படை இருக்கிறதுயெனவே
தெய்வலோகம் படை வருகுதுபோலே
மலக்கம் இனி என்ன வீமராசாவே
மாத்தான்படை எதிர் நின்றிடுமோ
காலம் இனியொன்றும் நிதியும் இல்லை
கண்டபடையோடே தெண்டாயுதத்தை
வலக்கையிலே தெண்டாயுதத்தை
4300 வந்தபடையோடு பொருதிடுவென்றார்

படைகள் எதுக்கவே நாககன்னிகுழல்
பாரதவங்கள் மெத்தவும் உண்டே
ஒன்றுக்கும் சலியாதே நீ நாககன்னி
உயர் கோவில் கல்லில் எழுந்தருளுவீர்
அன்னேரத்திலே அச்சுதனாரும்
ஆரும் ஒருவர்தான் அறியாமல்
பச்சதேரதில் நாராயணரும்
பகவான் ஒளிபோல் கெடுவருவாராம்
வானவர் தேவர்கள் காணவே கண்கள்
4310 வந்திறங்கியர் போனார் காண்
மூவகையாலே படைகளை எல்லாம்
முன்னணி கொண்டு நடந்தார்தாமே

## படை புறப்பாடல்

பரந்துதே புவிகளெங்கும் படைகள் தான் பரந்து செல்ல
நிரைத்தெழுக கொப்பு சொல்லி நீரினில் கூட்டம் கூடி
காத்தேன் என்ன கும்பகராசன் கனபல்லாக்கிலேறி
வரமத்தனில் இலங்கை வேந்தன் வந்து போரு அடக்கினானே

## வேறு

அழைத்தார் சில வில்லுகள்
மறித்தார் படைதன்னை
வகுத்தே ஏழு கரிகுலம் மதயேழு சரம்பட
4320 இளைத்தனர் படை மன்னர் யேறினார் பரிமீதே
அன்றுடனே நின்று கொண்டு தான் கும்பகராசன்
விட்டப்படை தான் பரந்து
மிக்க நாகப்பட்டணத்தில்
கண்டு வலுவீமன் கச்சை கெட்டி தொங்கலிட்டு
துட்டராசன் கெட்டும் கெட்டி
சூரியன் போல் பொட்டும் இட்டு
உதிக்கும் கதிரவன்போல் ஒளிதுலங்கிடவே
சந்தனம் புனுகு நல் சவ்வாது மிகவணிந்து
குங்குமம் கொழுந்து பச்சை
4330 கொன்றை இருவாச்சி பிச்சி

பிச்சி மலரணிந்து பிறைபோல் வடிவழகன்
உத்தரிய பணிகளிட்டு ஒய்யார நடை நடந்து
தெண்டாயுதம் தனை யெடுத்து
தேவிதுணை யென்று நடந்தாரே
உதவி வந்ததுண்டோ படைநடுவே
உற்றகதிரவன் ஒளிவது போல்
கண்டு நின்றதோர் பெரும் படைகள்
கலியுகமே தானென்று தான் மொழிந்தார்
இன்னும் இவன்கையால் இறப்பாரென்று
4340 எங்குமாய் வந்து படைவளைந்தார்
வெண்மையுள்ளதோர் தேர்களைத்தான்
வெளியில் நிற்கவே ஏகுவாராம்

## தேர் வகைகள்

வெள்ளி தேர் ஆயிரமாம்
வெங்கலத்தேர் ஆயிரமாம்
முத்து தேர் ஆயிரமாம்
முகில தேர் ஆயிரமாம்
பச்சை தேர் ஆயிரமாம்
பவளத்தேர் ஆயிரமாம்
பூமியை தான் பிளந்தோடும்
4350 புஸ்பவர்ண தேர் ஆயிரமாம்
சேனை படையோடே பரிமாக்கள்
சேரபரிகரிதான் திலித்தான்
படைகள் பார்க்கவே நாககன்னி
பைம்பொன் மாளிகை எழுந்தருள
அப்பொழுதே வீமராசன்
அச்சுதனை நினைந்து கொண்டு
துட்டராசன் கெட்டும் கெட்டி
சூரியன் போல் பொட்டு மிட்டு
உதயகதிரவன் உதித்ததுபோல்
ஒளிவுதானெங்கும் வீசிடுமாம்
4360 சந்தனங்கள் புனுகு பன்னீர்
தக்க நல்ல பூச்சூடி

தெண்டாயுதம் தானெடுத்து
தேவி துணையென்று தான் நடந்தாரே

## நாராயணர் வருதல்

உரத்துடன் படைநடுவே
உதித்த கதிரவன் ஒளிவது போல்
கண்டுநின்ற பெரும் படைகள்
கலியுகமோ என்றுதான் மொழிந்தார்
இன்னும் இவன்கையால் இறப்பமோ
எங்கு மாய்ந்தபடி வேந்தர்
4370 பச்சை தேரிலே நாராயணர்
பகவான் ஒளி போல் தோன்றுவாராம்

## வேறுநடை

வானவரும் தேவர்களும்
வந்துகண்டு போனார்காண்
வளைத்தாரே சிலர்வில்லை
மறித்தாரே படைதன்னை
வகுத்தேழு கரிகுலம்
மகிழ்ந்து ஏழு சரம்பட
இளைத்தனர் படைமன்னர்
விளச்சில் பரிமீதே
4380 இறப்பேனென்ற பேரோடே
எதிர்த்தானே போர் வீமன்

## பகவானின் வரம்

பாரேழும் தூசி எழும்பிடவேதான்
பகவான் ஒளிகள் மறைந்திடவே தான்
தெக்கின்பெரும் படை திடீரெனவரவே
சென்றவர்படை களம் தன்னிலெதிர்த்தார்
மலக்கம் இனியென்ன மன்னா வீமா
மாற்றான் படைஉனக்கு பற்றிடுமோ
கலக்கம் இனியென்றும் நீ நினையாதே
கலங்காமல் தெண்டாயுதத்தை எடுக்க

4390 வந்துகையில் ஆனைபிலத்தையும் தந்தேன்
வந்தபடையோடே பொருதிடுமென்றார்

## வீமனின் ஆறுதல்

போரதுபொருது வென்றால் ஒளிய
பொருவேனோ நான் உன்னையும் விட்டு
படைகள் பிறக்கவே நாககன்னி குழல்
பார்த்து அவர்கள் மனது மகிழ
ஒன்றும் சலியாதே நாககன்னி குழல்
உயர்கோவில் கல்லில் எழுந்தருள்வாயே
உடையவன் நமக்கு உதவிகள் உண்டு
ஒன்றும் சலியாதே என மொழிந்தாரே

## நாககன்னி அன்னம் படைத்தல்

4400 உத்தரியபட்டு வீரவாழி உடுத்து
உற்ற கோவில் கல் உடனே தான்வந்தாள்
அன்னம் போலவே நாககன்னியும்
அதியகும் பகராசன் தனைத்தான்
வெல்லும்படியாக நாககன்னி குழல்
விரையஅமுது கறிகள் சமைத்து
தன்னை சலித்ததோர் மன்னவன்தன்னை
தலையை உடைத்திட தன்னுட கணவன்
அன்னம் படைத்தாளே வீமராசனுக்கு
ஆறுகோட்டை நெல் அரிசிதன்னை
4410 சமைத்து அமுதுகள் யெல்லாம்
தான் படைத்தாளே பர்த்தா தனக்கு
பொன்முடி வேந்தன் அமுது பொலிந்து
புகழும் வெள்ளிலை அடக்காய் அருந்தி

## ஆயுதம் பார்க்க ஆசை

தெண்டாயுதத்தை பூசித்து வைத்து
சிங்காசனத்திலே வீற்றிருந்தாரே
கண்டுமகிழ்ந்தாளே நாககன்னி
கையில் தெண்டாயுத வலுவுதன்னை

உள்ளபடைபொருத தெண்டாயுதத்தின்
உண்மை பார்க்கவே வேணுமென்றாள்

## நாககன்னி ஏடு பார்த்தல்

4420 தெள்ளும் நூலின் யேடதிலே
சிறப்பாய் நூலிட்டுதான் பார்த்தாள்
உள்ளபடி நூல் விழுந்திடவே
உண்மை கண்டுடன் யேதுசொல்வாள்
நல்லபடி நூல் விழுந்ததென்று
நாககன்னி கண்டுமனம் மகிழ்ந்தாள்
மாற்றான் படை அழியுமென்றும்
மன்னன் வீமன் வெல்வானென்றும்
மாயவருட அருளாலே
வாய்த்த நூலினுட பலங்களெல்லாம்
4430 தோற்று போவதில்லை பர்தாவும்
சொல்லும் குறிகேட்டு மனம் மகிழ்ந்து
ஆளும் பெருமானை நினைந்து கொண்டு
அவரும் புறப்பட்டார் அமர் பொரவே
ஆனைபிலம் உள்ள வீமராசன்
அவர்பொரவே கடலருகே யெழுந்தருளினாரே
சென்றுகடலிலே மூழ்கியே வீமராசன்
தெண்டாயுதம் குளிப்பித்து சிந்தைகளி கூர்ந்தார்
கண்டுமகிழ்ந்தாளே நாககன்னி
கையில் தெண்டாயுத வலிமை தன்னை
4440 உள்ள படைபொருத வலிமைதன்னை
உள்ள படைபொருத தெண்டாயுதத்தின்
உண்மை உரைக்கவே வேணுமென்றாள்

## பீமன் பழைய வரலாறு கூறுதல்

சுட்டவெடி யம்பு வாணங்களும்
துடந்து வரும் தேரும் கரிபரியும்
சேட்டமாய் வந்து வளைந்தபடை
சேரஒருமிக்க வந்துதங்கே
தங்கள் மொழிந்திடகேளாமல்

தன்பிலம் கொண்டிங்கேவந்தாரென்ன
வாளிசெலுத்தினேன் தெண்டாயுதத்தால்
4450 வலிய சென்றுநான் முடுகிபோனேன்
மாமனார் வந்து செறுத்துக் கொண்டார்
மறுத்து போர் செய்யாமல் வந்தே
நம்மோடே அவர்வந்து பொருததர்க்கு
நாமனோடே பொருவதர்க்கும்
இளமையிலே நினைத்ததில்லை
எழுத்தின்படியே நடந்துதென்ன
செம்மத்தில் உள்ள செயிலின்படி
சிவனருளாலே தன்னுயிர் பிழைத்தேன்
வர்மம் மறக்காமல் என்னுடைய
4460 மகாதேவருட அருள்படியே
வாளும் குருநாடதிலே
வாழ்ந்தார் நல்ல பஞ்சவர்கள்
கனி போலுள்ள அண்ணருண்டும்
கருத்தான தம்பிமார்கள் உண்டும்
அனியாயங்கள் செய்திருக்கும்
அரவக்கொடியண்ணருண்டும்
தீமைசெய்யும் பேரண்மையும்
திரியோதிரனும் ஒன்றாய் கூடி
முடிநெருங்கும் நூற்றுவரும்
4470 மோதி பெரும் போரில் எதிர்பாரில்லை
படிப்படியே வீமராசன்
பரமார்த்தமெல்லாம் தானுரைத்து
எந்தனக்கு ஈஸ்பரனார்

## பீமன் தன் வலிமை கூறல்

என் பெருமாள் எனக்குதந்த
ஆயிரமானை பிலமிருக்க
இரும்பு தெண்டாயுதமிருக்க
உதிக்கும் கதிரவன் தென்வடலாய்
உதிக்கும் காலத்திலே என்னை செயிப்பான்
மலங்காமல் வார்த்தை சொல்லி

வடிவுடைய மங்கை நல்லாள்க்கு
4480 ஏகாந்த சுகந்தமானாள்
ஏகராச்சிய காலமதாய்
பொருந்துகையால் வேல் விழியும்
பூவணியும் மெய்யழகாள்
சரிந்தாளே முழக்கம் செய்து
தவில்முரசு பணிமாற
இருந்தாளே நாககன்னி
ஏகாந்த மண்டபத்தில்
வாழ்ந்திருக்கும் வேளாயிலே
மங்கை நல்லாள் அப்பொழுது
4490 கோன் உயர்ந்தமலை போலே

## படை மீண்டு எழுதல்

கொற்றவன் படை பரந்திடுமாம்
கோடி கோடிபடைகள் பரந்திடவே
கோடி சேனைகள் கொடிகள் பரந்திடவே
சேனைதன்னோடு ஆனையும் ஆள்களும்
மாறுகொண்ட இலங்கையில் மன்னவன்
மன்னன் ராவணன் வந்ததுகொப்பாய்
கூறுகண்ட குதிரை பெரும் படை
கும்பகராசன் சேனை படைகளும்
தெனஞ்சிறந்ததோர் பத்து யோசனை
4500 சேரவேபடை எங்கும்பரந்தனர்
கொக்கரித்து குரங்காணி வெள்ளம்போல்
கொற்றவர் சேனைவந்து பரந்தனர்
பாரிலெங்கும் கொடிகள் பரந்திட
பக்கத்தில் நின்றுவெஞ்சமரை வீசி
மிக்கதான் அனுமக்கொடிகளும்
வெறும் வெடியும் கொடியும் குடைகளும்
இச்சையாக வரும்பல சாதியும்
இன்பமானதோர்தம்பிமார்களும்
எதிரேவாறகரிகளும் சேனையும்
4510 எட்டுதிக்கும் அடங்கி நெருங்கவே

இப்போதென் முன்னேசென்று எதிர்த்தாராம்
இரு துண்டாக வெட்டி விடுவோம்
அன்றிந்த பெரும் படையானதில்
அணிவகுத்தங்கே பரந்திடவே

## பீமனின் கவலை

வந்தபடை தன்னை கண்டு
மன்னன் வீமன் மகிழ்ந்து கொண்டான்
சிந்தைகலங்காமல் வீமனும் தான்
தெய்வ கன்னியோ ஏதுசொல்வாள்
படைகள் வருகுதே நாககன்னி
4520 பார்த்தங்கிருந்தாலும் கருமம் இல்லை
இடையில் நான் வந்தகப்பட்டேனே
என்ன மதிசெய்வேன் பெண்கொடியே
கடலை கடந்து நான் போனாலும்
காந்தாரி மக்கள் என்னை நகையாரோ
படைகள் பரந்தாக்கால் ஒன்றுமில்லை
பரந்தாலும் இந்தபடை தானென்ன
தஞ்சமென மிங்கே ஒருவரில்லை
தனித்தங்கே அடரிலேபோகப் போறேன்
கஞ்சலர் பாதம் சேர்ந்திடுகில்
4530 காதலுடன் வாழும் பெண்கொடியே
அஞ்சு பேருக்கும் மாதாவுக்கும்
அதிய துக்கம் சொல்லி யனுப்பிவிடு

## நாககன்னி ஊக்கம் கொடுத்தல்

இப்போது நீரும் போர் பொருது
இறந்து விட்டீரானால் இருப்பேனோ
ஒப்பரிய வேந்தே பர்த்தாவேனான்
உடன் கட்டை சேர்வேன் உம்மோடே
நானும்உடன் கட்டை சேராவிட்டால்
நாககன்னி என்றபெயரும் இல்லை
நாகராசாவின் மகளும் இல்லை
4540 நன்றாய் அவர்தன்னை பொருமேயென்றார்
பொருவிரென சொன்னவார்த்தைகேட்டு

பொன்னுமணி முடிவீமராசன்
பரிவினுடன் நல்ல அச்சுதரை
பாதம் வணங்கியே அடிதொழுதான்
அருமையுடன் என்னை வழத்தருளும்
ஆண்டவனே வந்து தோன்றாயோ
ஆண்டருளும் என்ற நேரத்தில்
அச்சுதரும் வந்துதோன்றுவாராம்
தாண்டும் பரிகரி காலாளும்
4550 தக்க தம்பிமார்களெல்லாம்
ஆண்டவனே வந்து தோன்றாயோ
ஆண்டருளும் என்ற நேரத்திலே
அச்சுதரும் வந்து தோன்றுவாராம்
ஆளும் மணி முடிதிரியோதிரன்
ஆண்டு கொண்ட படை கோடி கோடி
கோளினால் வந்தபெரும் படையை
குறித்து பொருதது நீரல்லவோ
பெருமையுடன் வந்து பொருவதும் நீர்
பேணி பொருததும் நீரல்லவோ
4560 தேரோடும் மதயானை கள்வளைய
சென்று பொருதது நீரல்லவோ
இறங்கினபெரும் படைவந்துநிறைய
ஈட்டிக்காறர் வில்லாளர் சேரும்
செஞ்சிலைவளைத்து சரம்மாரி பொழிய
சேனைகள் வந்து பரந்திடவே தான்
தண்டியல் வெண்பரி சங்குமல்லாரி
தாரவிருது டம்மானம் யெக்காளம்
ஈட்டின் கெம்பீரம் இரும் என அதிர
எதிர்போருமெனவே யெங்கும் நிறைய
4570 அதிர முழங்கிட சங்கோடு பேரிகை
ஆந்தபெரும்படை வந்தங்கும் பொரவே
குதிரை வெண்பரி யெங்கும் நெருங்கவே
குடைகள் அணிந்திட படைகள் செருமவே
அடர்ந்த பெரும்படை அமர்பொருதிடவே

ஆனைபிலமுள்ள அதிவீமராசன்
பணிந்து உடன் அச்சுதரை தொழுதிடவே
வலுவான வீமனும் கொண் டெதிர் பொரவே
அணிக்கணி பரிசையும் அதில் சிலவீரரும்

## படைகள் நெருங்கின

அரசர் படையோடே எதிர் பொருதிடவே
4580 சதிக்கவே தெண்டாயுதத்துக்கு இரையாய்
கருதியே வீமனும் யெதிரேநடந்தார்
ஒக்கவே கும்பகராசனுட பெரும்படை
உறுபடையாகவே நெருங்கி பொரவே
பிடித்துதெண்டால் அடித்தார் படையை
பொடிப்பொடியாக அடித்திடவேதான்
மணிகள் தெறித்து தேர் மெல்விழவே
மத்தபடையும் மதயானையுமையும் படவே
படைகளம் அதிலே பரந்தனர் படைகள்

## பெரும்போர் நடத்தல்

பாருபாரென்ன கடலில் விழவே
4590 சுட்டதோர் வெடிகள் உண்டைகள் பட்டு
தூசி தூசியாய் அடித்தார் படையை
முட்டிகள் போலே தலைகள் உருள
முகத்திலே சோரை சொரிந்திடவேதான்
ஆறது போலே குருதிகள் ஓட
அதர்க்கிணங்கின கூளிகள் உண்ண
கூறுகூறாய் தொண்டாயுதத்தால்
கொலைக்களமதிலே பிடித்தவர் விடவே
சுற்றியடிக்கவே சூழ்ந்து படைகளை
தொழுவார் அழுவார் சூழ்ந்த படைகள்
4600 தொழுவார் அழுவார் விதியென விழுவார்
ஒடிந்தனர் தேருகள் ஓர் ஆயிரங்கள்
ஒக்கவாரி கடலில் எறிந்தார்
மடிந்தனர் படைகள் வாயிரையிடவே
மதகரி சேர மடிய அடித்தார்
படைகள் மடியகண்டு அன்னேரம்

பாரமதகரி மீதிலே யேறியே
கும்பகராசன் படைபொருதிடவே
கோடிவாணம் வெடிசுடவே தான்
கும்பகராசனுட தம்பீமார் வார்த்தைகள்
4610 கூறக்கண்டுடன் வீமனும் சென்று
சூறாவெளிபோல் கண்கள் சிவக்க
ஏடமார்பதிலே வேர்வை பொங்கிடவே
அப்பொழுதே திருமனது சினத்து
அலைகடல் போலே கோவித்தெழுந்தார்
தெண்டாயுதத்தாலே எதிரேநடந்து
சேரவே பொன்முடி சிதைய அடித்தார்
எத்திசையும் படை அமர் பொருதிடவே
இருபிறமும் படை கடல்போல் பரந்தார்
அம்புகள் சென்று அம்புகளுடுக்கவே தான்
4620 ஆனையை வாரி வானிலே எறிந்தார்
வம்புகள் பேசிவந்த பெரும்படை
வானிலுயிர் போகவாரி யடித்தார்
கனபடையதிலே மோதியதட்டால்
கருளும் உடலும் பொடியதுமாக்கி
ஆனைபடையை வாரி பிடித்து
ஆடம்பம்பரம் போலே எறிந்தார்
சேனைப்படை வீரரும் செங்க பரிமாவும்
சிதறி படைகள் ஒக்க திசை விட்டோடி
தெண்டுக்கு இரை என கொண்டங்கே எதிரே வந்தார்
4630 திசை திசை தோறும் படை பரந்தேறிடவே

## வேறுநடை

அடர் புவி எங்கும்
அடர்ந்ததோர் கும்பகராஜன்
அரக்கன் இலங்கையில்
ராவணன் எதிர்த்தாற்போலே
தனித்தான் கும்பகராஜன்
தன் மனம் கலங்கி
தம்பியும் தானுமாய்

தனித்தார் அமர்களத்தில்
நினைத்த கருமமும் முகிக்க
4640 வேணும் எனவே
நேரிட்டு கும்பகராஜன்
நேரே பொருதிடவே
தெண்டாயுதம் தானெடுத்து
சினத்து பொருதிடவே
தண்டர் மலை மார்பன்
தானவன் எதிரே வந்தான்
கலங்கி உள்ளம் நடுங்கி
கையால் வணங்கிடவே
காலில் நமஸ்கரித்தான்
4650 கடுகவே கும்பகராஜன்
கலங்கி தொழுத கையில்
அடித்தாலும் பாவம் என்ன
மன்னவன் தலைத் திரிவி
புறத்தே எடுத்தெறிந்தான்
மாற்றந் தலை திரிவி
பிறகே எடுத்தெறிந்தான்
கும்பகராஜனும் விழுந்தான்
இப்படியும் பாராமலே
தானும் நடந்து செல்ல
4660 இசைந்த நம்பி வேந்தான்
பொரவாரும் மன்னவனே
வீரதெண்டு தானெடுத்து
விரைந்து நடந்து செல்ல
வீமன் வரவு கண்டு
தேரை திருப்பி விட்டான்
தேரை திருப்பி விட்டு
தானும் படை நடத்தி
திரும்பி மாறி போற
நேரம் தனிலே வீமன்
4670 வாது சொல்ல போர் வந்த
அண்ணரே நீர் போகாதேயும்

வாது சொல்லி பாலூட்டி
வளர்த்தாளே உங்களம்மை
வாங்கி நீர் போறதுதான்
மகிமையோ என்றான் வீமன்
பரந்த படை தன்னில் வீமராஜனும்
பையவே தெண்டாயுதம் கொண்டு ஏவினார்
தேர்கள் ஆயிரம் சேனைப்படையுடன்
சீறி மதயானை போல் அந்த வீமனும்
4680 பாராளும் மன்னன் தேரில் ஏறவே
படைவீரனும் சீறியே மோதினான்
எல்லையில்லாத படைகளும் தேர்களும்
இரும்பு தெண்டால் அடித்து முறித்தனன்
போர்களம் தன்னில் இப்படி போர் செய்ய
புவிதன்னில் ஒருவரை காண்கிலோம்
அன்னவர் தேரை கண்டு மகிழவே
அன்றவன் படை சேர மடிந்தனர்
எல்லை இல்லாத தேர்கள் ஒடியவே
சிதறிப்படை சேர மடியுமாம்
4690 சேரவே நல்ல படைகள் மடிந்திட
தனியே இப்படி போர் செய்துடன்
தக்க தெண்டாயுதத்துடன் வந்துடன்
கும்பகராஜன் தேர் விட்டிறங்கியே
படை எல்லாம் மடியாமல் உயிர் விட்டு போவேனோ
உயிர் கொண்டு பிழைப்போம் இனி என்ன
உற்ற தெண்டாயுதத்தால் அடியாமல்
உயிரை களையாதே கும்பகராஜனே
உலகை அரசாள ஓர் மன்னவன் வேண்டாமோ
அரிய வெலி கருமத்துக்கு உடையவர்
4700 அங்கொருவன் இருக்கக் கண்டு மன்னவன்

## கும்பகன் போர்விலக்கல்

குதிரை பட்டு விழுந்திடவே கண்டு
கும்பிட்டான் அந்த கும்பகராஜனும்
போர் பொருதார் புகழ் வீமராஜனும்

புலம்பி நாகராஜன் வீமனை தழுவினார்
மாமன் தான் வந்து வீமனை விலக்கிட
மறுத்து போரு செய்யவில்லை மாமனானை
நானும் அவனோடே இனி
போர் பொருவதில்லை
நாராயணர் திருவாணை என்ன
4710 என்று சொல்லி அமர்களம் தான் விட்டு

## வீமன் நாககன்னியை அடைதல்

ஏற்ற நல்ல புகழ் வீமராஜனும்
நாகராஜாவின் திருமகளாகிய
நாககன்னி கோவில்கல் வந்தனர்
கும்பகராஜன் தன்னை செயித்தல்லோ
கொற்ற வேந்தன் புகழ் வீமராஜனுக்கு
அம்புவியோர் புகழ்ந்திட வீமனும்
அரசர் மெய்க்கவே நாககன்னியுடன்

## நாககன்னி கருவுறல்

சுகமாய் கோவில் கல்லில் வந்திருந்தாளே
வாழ்ந்திருக்கும் நாளையிலே
4720 மதலை இல்லை என்று சொல்லி
இருக்கும் அந்த நாளையிலே
இயல் நாக கன்னியர்க்கு
திருத்தமுடன் கர்பமது
சென்றுதல்லோ மாதம் பத்தும்
பத்தாம் மாதத்திலே
பாருலோகோர் கொண்டாட
ஆழி உலகேழில் அதிகபில வீரனானான்

## குழந்தை பிறத்தல்

உலகளந்தோன் திருவருளால்
உற்றபாலன் பிறந்தனராம்
4730 பிறந்ததொரு பாலகனை
பிரியமுடன் கண்டு மகிழ்ந்தனராம்

சிறந்தே எல்லோரும் மனம் மகிழ்ந்து
தெய்வ கன்னியர் குரவையிட
இருபத்தெட்டாம் நாளையிலே

## குழந்தைக்குப் பெயரிடல்

இயல் பெரிய பாலனுக்கு
பேர்பெரிய பாலனுக்கு
பேரிடவே வேணுமென்னு
விரும்பி அந்த நாகராஜன்
முன்னே எழுத்தின விதிப்படியால்
4740 பெயரிடவே வேணும் என்று
பிரியமுடனங்கே செப்பலுற்றார்
செப்புமொழி தனைகேட்டு
நாககன்னி சிந்தை மகிழவே
பாலகனை நீராட்டி பஞ்சணை மேலே கிடத்தி
தாராட்டி முத்தமிட்டு தக்கவீர வாழியிட்டு
வீமன் கையில் கொடுத்தார்
அப்பொழுதே வீமன் மடியில் வைத்து
மாமன் நாகராஜனையும்
வரவழைத்து வீமராஜன்
4750 அன்ன சுற்றம் மனமகிழ் அன்பாய்
நாகராஜன் மடியில் வைத்து
அரவன் என்றே அன்னேரத்தில்
நாகராஜன் பெயரும் இட்டாள்
பெயரும் இட்டு நாகராஜன்
பிரியமுடன் வாழ்ந்திருந்தார்

## விருத்தம்

உற்றதோர் பதியில் வாழும் உலதறிய குறமகளும்
பற்றென குறவனார்க்கு பசிக்கு இரை தேடி அவள்
புற்றிலும் புனங்கள் தோறும் போய் திருந்து நன்றாய்
வெற்றியாய் கிழங்கு கொடு வாறேன் என்றாள்

## வேறுநடை (குறத்தி கிழங்கெடுத்தல்)

4760 திரியோதிரன் அடிமை யென்று
அவனிடத்தில் இருக்கையிலே
ஆயிழயாள் தவக்குறத்தி
அவன்படித்த தொழிலதிலும்
அவளே படித்திருந்தாள்
இவள்க்கு வித்தை இத்தனைத்தான்
என்றிருக்கையிலே தவக்குறவன்
தவக்குறத்தி தான் வாழும்
தன்னுடைய கணவனுக்கு
கிழங்கெடுக்க தவக்குறத்தி
4770 கிளர்ந்த மலைதனில் போனாள்
நல்லநல்ல கிழங்கெடுத்து
நடுகானத்தில் வரும் நேரம்
பருமலையில் தவக்குறத்தி

## குறத்தி பஞ்சவரைக் காணுதல்

பஞ்சவரை வனத்தில் கண்டாள்
கண்டபொழுதிலே கொண்டாடி
காணவிதித்திரோ உடையவரே
பண்டைவிதியாலே என்னுடைய
பாவிகுறவன்தான் அறிய ஒண்ணாது
சண்டை பிடித்தென்னை அனுப்பினாளே
4780 தான் வருத்தின அவ்வாறதுபோல்
கொண்டாடி மகிழ்ந்து கையால்
கூப்பி தொழுதுடன் நமஸ்கரித்தாள்
எந்தனுட நல்லதம்புரானே
ஈடளிந்து போனிரென்று சொல்லி
சிந்தை நொந்து நான் அழுதிருந்தே
தொழுதேன் என்னுட துயர்தீர்த்தேன்
தொழுது விழுந்த குறத்தியுடன்
துயரமறிந்தந்த பஞ்சவர்கள்
முழுதும் தெளிந்தவர் முகம் நோக்கி
4790 முருகாதுணை உண்டு எழுந்திரென்றார்

## குறத்தி அமுது சமைத்தல்

அமுது சமைத்துண்ண தவக்குறத்தி
குறியாய் நடத்தினார் பஞ்சவர்க்கு
குறையா அருசியும் கோப்புமிட்டாள்
திரியுமிடத்திலும் உறக்கத்திலும்
திரிந்த வனத்திலும் தம்புரானே
இன்று கண்டேன் நான் இரு கண்ணினால்
சிந்தை நொந்து நான் அழுதிருந்தேன்
சிறந்த வனம் துலையாது மிப்போ
விந்தையாலவள் பூணி எடுத்து மெல்ல
4800 விரும்பி எடுத்தந்த கிழங்கதிலே
ஆர்த்த கிழங்கதில் நல்ல தெல்லாம்
ஐவர் பாண்டவர் கூடி முனியாய்
சிந்தை மகிழவே திருமுன் வைத்து
சிறப்பாய் கையாலே தொழுது நின்றாள்
தொழுது விழுந்திட தவக்குறத்தி
துயரமறிந்தந்த பஞ்சவர்கள்
சிந்தை மகிழ்ந்தவர் சந்தோஷமாய்
சிறந்த குருநாட்டில் வருவாய் என்றார்

## குறத்தி வழி கூறல்

இந்த வனத்திலே இருக்கும் செய்தி
4810 எந்தன் இறைவனும் அறிய ஒண்ணாது
வந்து தானவன் கண்டிடுகில்
வஞ்சனை செய்து கொன்றிடுவார்
வந்து நல்வளம் கண்டிடாமல்
வஞ்சனைகளுள்ள வழி கேட்டார்
வழியால் அவரோடு தான் கூடி
வடவையொரு பிறமாகவே தான்
அந்த வனத்தில் வழிகாட்டி
அதிய புகழ் நல்ல தவக்குறத்தி
பார்த்து பரு மலையாளதிலே
4820 பாம்பு வளங்களும் தானும் சொல்லி
சேரும் படியாக வழியும் சொல்லி
சென்றால் நானங்கு வாறேன் என்றாள்

## குறத்தி தன்னிடம் செல்லல்

வாறேனென்ற தவக்குறத்தி
வாழும் பதிநோக்கி தான் நடந்தாள்
பஞ்சவருட தவக்குறத்தி
பாம்புவனமிட்டு வழி நடந்தாள்
கூரைபுகுந்த தந்த குறவனுக்கு
கோளுரு பறைவது ஏதெனவே
பாரதிறப்புல் நல்ல பாம்புருவி
4830 பாம்புவனமிடை பலதும் இட்டாள்
சேரும்படி சொல்லி மன மகிழ்ந்து
திருந்தும் குருவென்றே நடந்தாள்

## விருத்தம்

நடந்தவள் வனத்தினோடே
நலமுறு நாகங்கள் வாழும்
தலங்களும் தகுதி என்ன
தானவன் நடந்து போனாள்
கிடங்கது விழுந்த சோலை
கிளிமொழி தேடிப்போனாள்
விதங்களால் எழுந்து வாற
4840 விரைவினில் வளைவு கண்டாள்

## விருத்தம்

கண்டவள் மகிழ்ந்து போன காரியம் பலது எல்லாம்
ஒன்றுமே உரையாளந்த உற்றதோர் குறவனார்க்கு
கண்டவர் மேல் ஆசை வைத்து காரிகை துடந்து
மின்கொடி நல்லிகையாள் வெகுண்டவள் ஈடளிந்தாள்

## வேறு

## குறவன் ஐயுறல்

வேர்வையோடு வரவு கண்டான்
மெல்ல நல்லாள் குறமகளை
வெரு வெருப்பான தெல்லாம்

மெல்லி நல்வாள் உண்டுபண்ணி
வேண்டு வகையான தெல்லாம்
4850 விரையக் கொடுபோனாள் குறவனுக்கு
விரவை மெத்த கண்டவனும்
வெகுண்டவனும் ஏது சொல்வான்
நாக்கும் நரம்பும் ஒழிய
நல்கிழங்கு கண்டேனில்லை
கானக மலையருகே
கள்ள குறவருமே உண்டுனக்கு
கள்ளவருள்ள செய்தி காட்டிக்
காட்டித் தாடா தவக்குறவா
வெள்ளி உதிக்கு முன்னே
4860 விரையப்போனாய் கிழங்கெடுக்க
வேறே கள்ளக் குறவனுக்கு
விருப்ப முற்று நீகாணும்
கொண்டு வந்த கிழங்கதிலே
கொடுத்து வந்தாய் நல் கிழங்கு
நாரும் நரம்பொழிய
நல்கிழங்கு கண்டெனில்லை
கையை முறித்திடுவேன்
கருங்குழலையறுத்திடுவேன்

## இருவரும் சண்டையிடுதல்

ஓடி முந்தி தனைப்பிடித்தான்
முந்தியிலே அவள் பிடிக்க
4870 முடியதையும் பிடித்தான்
சிந்தி தலைகுலைய சீராட்டி தங்களிலே
சீறி சினத்தாயோ என்னோடே நீ குறவா
கனிவாக நான் சொன்னதற்கு
கறுத்தாயே நீ குறவா
எப்போதும் நான் வரும் போது
இனிய கிழங்கொடு வருவாயே
இன்றெனக்கு என்ன தவக்குறத்தி
இப்போதென்னை வெறுத்தாயே

விரும்பினான் விரும்பின தெல்லாம்
4880 வேறொருவர் அறியாரோ
என்னுயிர் போறதெல்லாம்
ஏகாமல் கானகத்தில் ஆண்டவர் தானறிவார்
வேறேயார் அறியப்போறார்
காட்டானை கண்டு பயந்தேன்
கரடிபுலி கண்டு பயந்தேன்
கானகத்தரிய கணங்களுக்கும்
காட்டு புலி கண்டு பயந்தேன்
வேண்டுவகை விடியுமுன்னே
வெள்ளிதானுதிக்கு முன்னே
4890 கண்டுமங்கே தானெடுத்து
கடுகி இங்கே வந்தேனென்றார்
வில் வேந்தருக்கு கொடுபோக
விரைய வங்கே ஒதுக்கும் பண்டாம்

## குறத்தி பஞ்சவருக்கு உணவு கொண்டு செல்லுதல்

குறுவை நெல்லை யவளிடித்து
கும்பத்திலே தேனும் வைத்தாள்
வெள்ளி வெற்றிலை நாடன் பாக்கு
விரையவங்கே ஒதுக்குவாளாம்
கொடு போக வேணு மென்று
குறவனுடன் சொல்லுவாளாம்
4900 கிழங்கெடுக்கும் தலமதிலே
கிளர்ந்து வெயில் உயர்ந்தாக்கால்
பல்லும் நாவும் உணரும்நேரம்
பசியாற வேணு மென்ன
பகட்டி பறைந்தவளும்
பஞ்சவர்க்கு கொடுபோக
நல்லநெடு நீண்டாள் கிழங்கு
காட்டுகிழங்கான தெல்லாம்
நல்கிழங்கு பலவகைகள்
நான் கொடுவாறேன் என்றார்
4910 என்று சொல்லி தவக்குறத்தி

இன்பமுள்ள மொழி பேசி
குறவனுமோ அறியாமல்
கொடுபோக வேணுமென்ன
கொடுபோற வழிகளெல்லாம்
கூண்ட பஞ்சவர்க்கு போறாளென்று

## குறவன் பஞ்சவரை அறிதல்

வஞ்சகங்கள் நெஞ்சில் வைத்து
வாய்த்த நல்ல தவக்குறவன்
தவக்குறவன் வர்மதையும்
தவக்குறத்தி அறியாமல்
4920 பஞ்சவன் காடதிலே
பஞ்சவர்க்கு கொண்டு வைத்தாள்
தவக்குறத்தி கொண்டு வைத்து
தான் தொழுது நிற்கையிலே
கண்டானே தவக்குறவன்
கருவேங்கை மூட்டில் நின்று
கொண்டாடி மனமகிழ்ந்து
குடி முடித்து கொள்வேனென்றான்

## குறவன் துரியோதனிடம் பஞ்சவர் பற்றிக் கூறல்

சென்று வள நாட்டு திரியோதிரன்முன்
செய்தி எல்லாம் சொல்லுவாராம்
4930 நன்றாய் இருந்துதே கருமமெல்லாம்
நாடி முடித்தீரே வெளி கருமம்
பச்சக் கிடாயுட எலும்பெடுத்து
பழதாய் அழித்தாரே குருகுலத்தை
ஆச்சி வெண்ணையுண்டோன் அருளாலே
அன்னாய் இருக்கிறார் ஐபேரும்
நாலு பேரையும் வனம்தனிலே
நான் வாறபோது கண்டு வந்தேன்
இங்கே பல்லும் நாவும் வெளுத்து
4940 இலங்கும் திருமுடி தான்வெளுத்து
இந்த வகையாக இருக்கிறார்

ஏதக்காக என் தம்புரானே
முந்த நான் செய்த உபாயத்திற்கு
முடிந்தாரில்லையே பஞ்சவர்கள்
கூட்டுக்கிளி போலே வளர்த்தவரை
கொடு போனாரங்கே இங்கு நின்று
வந்து அடவியில் வலையும் கெட்டி
மான் கலைகளும் தான் படுத்து

## நூற்றுவர் வேட்டையாடப் புறப்படல்

சிந்தைமகிழ்ந்து நூற்றுவரும்
4950 சென்று வேட்டையாட போவோமென்ன
அந்தமொழி தன்னை கேட்ட போது
அரவக்கெ:டியோனும் ஏது சொல்வான்
இந்த வன மெல்லாம் போய் வரவோ
இசைந்த பஞ்சவர் வந்தாரோ
பாடை கொண்டு இறந்து போன
பாசங்கென்ன வந்தாரோ
பேர் பெரிய தவக்குறவா
போய்விட்டார்கள் உங்கள் அடவியிலே
உண்மையுடன் வந்து உரைத்த மொழி
4960 ஒன்றும் பொய்யாது தம்புரானே
என்னை இருத்தியே இத்தலையை
இரு துண்டாய் வெட்டி களையுமென்ன
என்ற மொழி கேட்டு திரியோதிரன்
இவ்வனத்தை உண்மை அறியவேணும்
நல்ல தம்பிமார் பெரும் படையும்
நாயும் பாடமும் இட்டி வலை எடுத்தார்
காலமே சென்று வலையும் கெட்டி
கடுக நாயாடி நிற்கும் நேரம்
வலையும் வலைகொலு மானதிலே
4970 மான்கலை தான் அகப்படவே
பஞ்சவர்ணக்காடதிலே
பார்த்து வலை கெட்டி அடவியிலே
சுருக்கு ஒருவட்டம் சேர்த்துடனே

தேசம் அதிர முரசறைந்தார்
வஞ்சினைகள் நினைத்து நூற்றுவரும்

## நூற்றுவர் வலை கட்டல்

வலை கெட்டி அடவி வளைத்துடனே
சுருதி வலை வட்டம் நேர்த்தியுடனே
துடர்ந்து திடமென முரசறைந்தார்
சாளுவனுட சங்கிலியை
4980 தட்டிச் சுருக்கத்தில் தேடலுற்றார்
ஆளும் மணிமுடி திரியோதிரன்
ஐவர் எங்கே என்று தேடுவாராம்
நாட்டை அளந்த அச்சுதரும்
நாராயணருட திருவருளாலே

## மாயமாய் ஐவரும் மறைதல்

நாட்டில் புகழ் பெற்ற அருச்சுனரும்
நல்ல மயில் புறா போல் பறந்தார்
வீரப்பிலமுள்ள வீமராஜன்
மிக்க பன்றியாகச் சென்று
திரியோதிரனுட வலையறுத்து
4990 சிந்தை மகிழவே போற நேரம்
கெட்டாலும் கிளையல்லவோ
கெடுதி வருத்தி குலை செய்யாதே
கூடி இருந்ததோர் குந்தாதேவி
குழியில் சாடி ஒழித்துக் கொண்டாள்
தேவி மார்களுக் கய்யன்மாய்
தேடி திரிந்து நூற்றுவரும்
சீறி சினத்தந்த குறவனோடே
எங்கே ஐபேரைக் கண்டு வந்தாய்
என்று திரியோதிரன் திருவிளமாய்
அங்கே அவனோடே திருவிளமாய்

## குறவனின் விளக்கம்

ஐபேரிருந்த இடம் பாருமென்ன
5000 உங்களோடோ பொய் உரைத்ததினால்

உங்கள் அடிமை என்று உரைக்க வேண்டாம்
அங்கே திருவிளம் பற்றினதால்
ஐவர் தலம் தன்னைப்பாரும் என்றார்
இந்தார் இவ்விடத்தில் பஞ்சவர்கள்
இருந்த தலம் தன்னை பாரும் என்றார்
வெல்லாதவருண்டோ தம்புரானே
மேகநிற வண்ணர் அருளாலே
கல்லை தலையாணயாக வைத்து
கரிய மணலை மெத்தையாய் படுத்து
5010 பள்ளி கொண்ட இடம் இவ்விடமென்ன
பாரும் தம்புரானே மெய்தானய்யோ
தண்ணீர் அமுதேற்று பொலிந்த இடம்
தம்புரானே இன்னா பாரும் என்றார்
கண்ணாலே நான் கண்டது உண்மை
களவு சொல்வேனோ உங்களோடே
இன்றவர் இங்கே காணும் போது

## குறவனைக் கொலை செய்ய ஏவுதல்

எந்த வகையாலும் சோதிப்பேன் நான்
என்னோடு குலை செய்ய ஏவி விட்டு
எழுந்தருளும் எந்தன் தம்புரானே
5020 அந்த மொழி கேட்ட திரியோதிரன்
அகம் குளிர்ந்தவன் ஏது சொல்வான்
சிந்தை உனக்கு தான் ஒத்ததென்று
திரியோதிரன் விடை கொடுத்து
ஐபேரையும் ஈடளிக்க
அதிய சந்தோசம் மிகபெருக்காய்
குலைகள் செய்யவே திரியோதிரன்
குறவனுக்கு விடை கொடுத்து
நலமாய் இவரை ஈடளித்தால்
நாடும் முழுதாளும் படியாக
5030 வஞ்சகம் செய்து பேயை விட்டு

## ஐவரைக் கொல்ல குறவன் புறப்பாடல்

வல்ல படியாலும் நானவரை

அஞ்சி பேரையும் கொன்றுவாரேன்
அடவியில் நின்று எழுந்தருளும்
திரியோதிரனும் தம்பிமாரும்
சென்ற படைகளும் திரும்பி வந்து
பிரிய முடன் மன்னன் எழுந்தருளி
பெரிய கோவில்கல்குள் புகுந்தார்
அந்தபொழுதிலே தவக்குறவன்
ஐவர் முடிவேந்தர் மாண்டரே
5040 இந்தபொழுதிலே பஞ்சவர்கள்
இருப்படிம் தான் அறிந்தபோது
நோக்கமுடைய தவக்குறவன்
ஒரு நொடியில்
வந்து கண்டான்
பஞ்சவரை கண்டபோது
பக்குவமாய் சென்றுசொல்ல
மீண்டுவந்து தவக்குறவன்
மிக்க ஐவர்களை கொல்லவென்ன
குறத்தியோடே சொல்லாமல்
5050 கொல்ல மருந்துகள் எடுக்கவேணும்
குறத்தியவள் அறிந்தாக்கால்
கொல்ல ஒட்டாள் ஒருநாளும்

## குறத்தியை உறங்க வைத்தல்

உறக்கமவள் முழிக்குமுன்னே
உறியிலிருந்த மருந்தை எடுத்தேதான்
நன்றாய் குறத்தியும் உறங்கையிலே
குறத்தியுட முன்பதிலே
கொண்டு முந்தியில் முடிந்து வைத்தார்
யேழுநாள் காலமெல்லாம்
இவளுறக்கம் முழியாமல்
5060 பாழான தவக்குறவன்
பாவையரை உறங்கவைத்தாள்

## குறவன் பேய்களை துணைக் கழைத்தல்

நன்றாய் வைத்துமறுகடத்தி
பேயை விடவேணுமென்று
பெரியபறை துடிஎடுத்தான்
பெரியபறை துடிஎடுத்து
பேய் மாடத்தடியில் வந்தான்
அரை சாந்து மஞ்சள் கொடியும்
அழகாய் அங்கே வைத்தொதித்தி
கமுகம்பூவும் வெளித்திரியும்
5070 கினைகுளிரவைத்தொதுக்கி
செம்புகளை தானெடுத்து
சிவந்த பூவைத் தொழுதிடுவான்
சிவந்த பூவைத்தொழுதிடவே
சிறப்பாய் போய் இருந்தான் தவக்குறவன்
வைத்தொதுக்கி பேய்களஞ்சும்
வந்து குடிகொண்டிடுமாம்
அச்சரித்த வாதைகளும்
அவனிடத்தில் வந்திடுமாம்
வண்ணார்மாடனுடன்
5080 வளர் கடுவாமூர்த்தியுடன்
வாணாலை வாங்குமந்த
வன்னி மறவன் தன்னுடனே
ஈனகுல மாடனுடன்
இருளனஞ்ச பெருமாளும்
சுடலையில் பூசையுண்ணும்
சுடலையில் மூர்த்தி உடனூடே
கடுவாமூர்த்தி தொடுமூர்த்தி
மந்திரத்தில் அடங்காமூர்த்தி
அப்பொழுதே அஞ்சி பேய்கள்
5090 அவனிடத்தில் குடிகொண்டிடுமாம்
செப்பதிலும் சிமிழதிலும்

## பேய்களை ஏவுதல்

சிறப்பாபேய்களை அடைத்தான்

அஞ்சி பேயையும் தான்பிடித்து
அஞ்சி செப்பதிலே தான் அடைத்தான்
நெஞ்சிதன்னில் தானடைத்து
நிமிசமுடன் கொல்வேன் பஞ்சவரை
வஞ்சனைகள் செய்யவேணுமென்று
வனத்தில் உள்ள மருந்தெடுத்தான்
அந்தபடிக் கந்த தவக்குறவன்
அஞ்சி மருந்தையும் தான் கூட்டி
5100 வன்னி மரத்திலே உருசமைத்து
மருந்தை பூசியே பிலம் கொடுத்து
சேர்ந்த பொறி தொண்ணுத்தாறும்
சிறக்க உருக்காணி தனை பூட்டி
இசைவு தோறும் ஆணி தைத்து
இழகியவர் நடக்காதபடி
அவர் தமசெய்யவே தவக்குறவன்
அந்த மருந்தெல்லாம் தானெடுத்து
விரையவெள்ளி உதிக்குமுன்னே
மிக்க இருகூறுசாமத்திலே
5110 பிடித்த பேய்களை கொண்டு சென்று
பேயை யேவினான் கொல்லுமென்று

## பேய்களைப் புதைத்தல்

அந்த நேரத்தில் பேய்களெல்லாம்
ஐவர்கால் மாட்டில் புதைத்துவைத்தான்
இந்த சூனியம் மறுகடந்தால்
இழகார் ஒருநாளும் பஞ்சவர்கள்
ஒப்பெரிய தவக்குறவன்
ஒடிக்குல வள்ளி தன்னை வெட்ட
வல்லபடியாலும் வள்ளியதில்
வழுகி படுபாதி அறுதில்லை
5120 அந்த வள்ளி தான் அற்றுதென்று
ஆர்பெரித்து அவன்போனான்

## குந்தி புலம்பல்

அஞ்சி பேரும் மாண்டிடுவார்
தஞ்ச முடன் பெற்ற மாதாவும்
தன்னுடைய மக்கள் முகம் பார்த்து
புலம்பிடுவாள் குந்தாதேவி அம்மை
புத்தி எல்லாம் மிகக்கலங்கி
வனத்திலே தான் வந்திடத்தில்
மாய வஞ்சனை செய்தாரோ
மனதில் அறியவே பிழை ஒன்று நான்
மாயவரே நானும் செய்தில்லையோ
5130 சதிவு செய்தாரோ நம்மோடே என்று
தானும் வனத்தில் வந்திடத்தில்
விதியோ என்று மனதிலுன்னி
வேறே என்றும் கண்டேனில்லை
உடையவரே நான் என்ன செய்வேன்
இடம் பார்த்து கொண்டு பேயை விட்டாள்
என்ன செய்வேன் மாயவரே
மடுவறுத்த நிரை போலே
முடி வேந்தர் சாய்ந்து விழ
5140 கண்ணாலே தான் பார்த்திருக்க
கற்பனையோ மாயவரே
ஒண்ணாது நான் இங்கிருக்க
உடன் கூட மரிப்பேன் என்றாள்
மாதாவும் சொல்லி புலம்பிடவே

## மாயவரின் சமாதானம்

மாயவனார் வந்து தோணுவாராம்
ஏதாலும் நீ புலம்ப வேண்டாம்
என்று மாயவரும் திருவிளமாய்
மாயவர் வந்து மதிகள் சொல்ல
மனம் மகிழ்ந்தாளே குந்தாதேவி
5150 தாகமுடன் நீ பெற்ற மக்களுக்கு
சற்றும் ஒரு குறை வாராமல்
அரக்கமுடன் மீட்டுக் கொள்வேன்

அழகாய் மணிமுடி பஞ்சவரை
கலகம் இனி நினைக்க வேண்டாம்
கடுக இவர்களை மீள்வதற்கு
ஆளுண்டால் இப்போ சடுதியிலே
அச்சுதரை விட்டு ஐபேரும் மீளும்
நாளும் பொழுதிலும் காத்துக் கொள்ளும்
நாராயணரே வந்து மதிகள் சொன்னீர்

## குறவன் குறத்தியை எழுப்பல்

5160 அப்பொழுதே தவக்குறவன்
ஐவர் முடிவேந்தர் மாண்டார் என்று
இப்புவியில் இனி மீள்வதில்லை
இனி குறத்தியை எழுப்பவேணும்
முற்றில் முடிந்த நாவடக்கம்
முடுகி அவன் சென்று அவிழ்த்திடவே
சிந்தை தெளிந்த குறத்தியுமோ
தீர்க்கமுடன் அவள் எழுந்திருந்தாள்
இந்த பாவங்கள் வருவானேன்

## குறவன் குறத்தி உரையாடல்

என்ன குறவா நீ சதிவு செய்தாய்
5170 மயக்கு நான் இங்கே கிடந்ததென்ன
மாயம் இது ஒன்றும் அறிந்தேனில்லை
திசைக்கிக் கிடத்தியே தவக்குறவா
செய்தாயோ ஒரு சூனியம்தான்
அய்யோ என்னுட தம்புரானே
புகழ்ந்து கேட்டாளே தவக்குறத்தி
புகழ் பெற்றதோர் தவக்குறவன்
கிருபையுற்றங்கவன் உரைத்திடுவான்
உரைத்த மொழிகேட்டு தவக்குறத்தி
ஒன்றும் பேசாத தவக்குறவன்
5180 சிரித்தான் அந்த நேரத்திலே
செப்பிடுவாள் அந்த குறத்தியுமோ
அரை சாந்து மஞ்சள் பொடியும்

அதிய செப்புக்குடம் எங்கே என்றாள்
அந்த வகை எல்லாம் கண்டதில்லை
ஆர்க்கு கொடுபோனாய் பேய்கள் விட
கமுகன் பூவும் வெளுத்திரியும்
கண்டேன் உன்னுட மேனிஎல்லாம்
களவு பறைத்தாயோ நீ குறவா
கவுத்துவமாய் வந்து சொன்னாய் நீ
சொல்வாய் நீ என்று அவள் உரைக்க
5190 சோதிப்புரானாம் குறத்தியோடே

## குறவன் உண்மை கூறல்

என்ன வகை செய்வேன் பாண்டவரை
இனி நீ அவரை மீளும்படி
உன்னால் இதுக்கினி உபாயம் உண்டோ
நீ நினைத்தபடி தான்வருமோ
அன்நாளில் பட்ட பசுக்கூடலை
ஆள் தாண்டியே புதைத்து வைத்தேன்
இன்நாளில் சென்று மீண்டாலே
இனி உன் தம்புரானை மீளேன் என்றான்
என்று அவன் சொன்ன வார்த்தை கேட்டு
5200 எந்தப்படியாலும் மீண்டு கொள்வேன்
அன்று அவன் சொன்ன வார்த்தை கேட்டு
அவனை மயக்கவே வேணுமென்றாள்
உடனே சென்று தவக்குறத்தி
உள்ளறிந்து மருந்தெடுத்தாள்

## குறத்தி பஞ்சவரிடம் செல்லல்

ஆவிதளர்ந்த தவக்குறவன்
அயந்து கிடந்தங்கே உறங்குவானாம்
கொண்டு வந்தங்கே நாவடக்கம்
குறிப்பாய் அவன் முந்திதனில்
முடித்தாள் அவள் பெற்ற மணிகண்டனை
5210 அமுதூட்டியே உறங்கவைத்தாள்
சீறியவன் விட்ட மந்திரமூர்த்தி

சிறந்த விசளங்கள் ஆனதெல்லாம்
பாரமான செப்பு குடத்தோடே
பழுதுவாராமல் அவளெடுத்து
ஆகாசமாய் உயிரெழுத்தும்
அன்பத்தோர் அரச்சரம் தம்பனமும்
தம்பமும் ஆரணங்குகளும்
தானங்கு உயிரேற்றி தவக்குறத்தி
பஞ்சமியும் நல்ல உள்ளெழுத்தும்
5220 பார்புகழும் திலர்த்தங்களும்
தஞ்சமுடன் காளி மந்திரமும்
சதாசிவனென்ற அச்சரமும்
அந்தவகை யெல்லாம் அவளெடுத்து
அச்சுதனாரையும் மனசிலுன்னி
இன்று எனை வந்து காத்தருளும்
என் குருவே சரணம்
என்று நடந்தாளே
எழுந்தவள் நடந்து செல்வாள்
இனியொருநாளிகைக்குள்
5230 துயின்றவள் எழுந்திராமல்
தோகை மந்தானம் செய்து
கொழுந்துடன் அடக்கம் வைத்து
கொடியிடை அடவீ நோக்கி

## குறத்தி மருந்து எடுத்தல்

மகிழ்ந்து உடன் மருந்து தேடி
மருந்துமாமலை மாமலையில் வந்தாள்
மருந்து மாமலையில் சென்று தவக்குறத்தி
மருந்துவகை கேட்டு நடந்தாள்
மறுகுமறுகித் திரியாமல்
மலை எங்கும் தான்பார்த்து
5240 மனமகிழதாய் அருளால்
ஆரம் அறியா மருந்தை
பறித்தவள் புகை கூட்டி
அஞ்சனத்திலறந்தமிட்டு

ஆயிழையாள் தவக்குறத்தி
அவள்கண் அவன் தன்னை வெல்ல
செப்பேடு வைப்புகளும்
சிமிழும் சிமிழ்கூடும்
அரியவகை இரத்தங்களும்
அம்பிளிமான் கொம்புகளும்
5250 அரை சாந்தும் மஞ்சள் சாந்தும்
ஆயிழையும் தானெடுத்து
சேரப்பறித்த மருந்தும்
சிறந்ததுடிபறையும் எல்லாமே
தென்னங்கூடும் மைக்கூடும்
தேனும் தின மாவும் எல்லமும்
தித்திக்கும் பிலாக்கனியும்
சிறந்த அடை பொரியும்

## குறத்தி எதிர் மருந்து போடல்

மஞ்ச செப்பு தானெடுத்தாள்
மதகரி முகவா சரணமென்று
5260 அவளுட மணவாளன் அறியாமல்
குறிதொழில் செய்த குறத்தி
குறவனை அறியாமல்
கொடி இடைதான் நடந்தாள்
குலயானை கடுவாய்கரடி
புலிவாழும் குமடுகளும் கடந்து
விரவாய் வழி நடந்தாள்
வனங்களும் சோலைவிட்டு
வேந்தரை மீளவென்ன
நடந்து தவக்குறத்தி
5270 சொல்லுகின்ற நேரத்திலே
ஏகும் மலைதனிலே
நலமாய் ஆளிசிங்கம்
கலைந்து அப்பாலே ஓடி
வெண்ணையில் கரும்பின்சாறும்
நறுநெய்யோடு தேனும் தினமாவும்

மட்டொரு கள்ளியில் சென்று குறத்தி
நாடியே சென்றுரைத்தவள் மருந்தை
ரதத்தினில் உரைத்திடுவாள்
பகலிடும் கதிரவன் இருளை
பகலாக ஆக்கினாபோல்
5280 ஆறாங்கன்னியில் வீச
பார்த்து மனம் மகிழ்ந்தாள்
கண்ட பொழுதிலே தான்
கள்ள குறவனார் கண்ட வழமை தன்னை
தரியாமல் நின்றது யேற்றபடித்தவனாலும்
வஞ்சி என்றாலும் மீண்டு கொள்வேன்
என்ற மந்திரம் நடப்பில்
குறமகள் ஓதி தியானித்து
ஈஸ்வரா சரணமென்று
தொழயானை தொழிலு போற்றியவனுட
5290 தொழிலானதை எடுத்து போற்றியவளுட
தம்புரானை மீள வனத்தில் வந்தாள்

## விருத்தம் (பாண்டவரைக் காணுதல்)

வனத்திலே வாழ்ந்திருந்த
மன்னவரை வாதை இட்டு
சினத்திலே குறவன் கொன்ற
சீவனை நான் மீள்வேனென்று
தனத்தில் விழிநீரோடே
தார்குழலாள் வேர்வை சிந்த
மனத்தெளிவினோடே கூடி
பாண்டவர்கள் தன்னை கண்டாள்

## வேறுநடை

5300 சென்று வனத்திலே ஐபேரையும்
கண்டு சிவன் அருளாலே தெய்வம்
இப்படி உங்கள் சிரசில் விதித்த தென்று
சிந்தை தளர்ந்து சொல்வாள்
இந்த ஒரு விசம் கொண்டு வந்தேன்

எந்தன் முகம் குளிரப் பார்த்தேன்
முடிமன்னன் போனதில் முடிஅசையுதென்னுட
அன்னை போலே யிருந்தார்
சிந்தையில் நல்ல அறிவு இல்லாத
சித்தன் தென்காசி குறவனுக்கு
5310 சிறுப்பத்தில் கெட்டுபட்டேன்
அன்றுமுதலுள்ள சீலம் அறிந்து கொண்டேன்
ஆனபிலத்துக்கு மேலாய்பிலம் இல்லை என்று
அடிதொழுதே என்னை நன்றி இது நல்லது நானிதுக்கு
ஆளாகில் நாயனை தான் மீள்வேன்
அல்லையாகில் என்னுயிர் நாளை என்று
உந்தன் பாதத்திலே இறப்பேன்
எந்தன் நாயகனாரோடே மாண்டுடிகில்
இருக்க பலனும் இல்லை
இந்த வனத்திலே ஐவரிருந்ததை
5320 கண்டவர் கொன்றிடவே
வந்துநான் கண்டது எந்தன்
செயலால் மாயன் அருள்படி காண்

## பேய் விரட்டப் புறப்பாடல்

மாலறிவாரென்று மஞ்சணை
நீராடி அஞ்சனமும் பூசி
வள்ளிக்காகவே குமரகுருபரா
யென்று வெள்ளெலிதான் பகர்ந்தாள்
வெள்ளொலியும் பகர துள்ளும்
குறத்தி யுடுத்து தடுக்காமல்
5330 வேடிக்கையாகவே பேய்கள்
மிட்டுவிரைய களம் புகுந்தாள்
வள்ளுவராணை குரவே
எனையும் வழத்தம்மை மாதாவும்
வாழ்த்திக் கொண்டு கைலாச
பவனி போல் வாடாவிளக்கேற்றி
புள்ளுருவாய் ஒரு புள்ளும்
சமைத்து புகைதீபம் தான்காட்டி

பூமியதிரவே பேய்கள்மிட்டு
புகை குறிபார்த்தவளும்
5340 வெள்ளுருவான விதங்களும்
வெங்கல் செம்போடு வெள்ளரியும்
வெட்டி வேருடன் ராமிச்சம்
கொட்டமும் மோடியாய் அங்கு வைத்து
வைத்தாள் மரகத பச்சையும்
பூவோடு சமச்சரம் மானதெல்லாம்
வானில் இட்டு வாடை
பொடி சந்தனங்களும்
மணக்கும் பல சாணம் கூட்டி
வித்தாரத்தோடே தீக்கடுத்தோடி
5350 தானந்த குறமகளும்
வீரலெட்சுமி என்றவளங்கே
எடுத்தாள் விரைவாய் பணி பூண்டாள்
பூணும் பணி வகை கழுத்தில் அணிந்தவள்
புரினூல் தாவடமாய் பூட்டியே

## பேய்விரட்ட சேகரித்த பொருள்கள்

மூலாதாரத்தில் இருத்தியே
ஓமம் துடங்குவாளாம்
ஓமத்தில் இட்ட அடிச்சரக்கானது
மலரும் பணிகளெல்லாம்
உன்னி தகடும்
5360 பொன் வெள்ளித் தகடு
உருக்கிய இரும்புத் தகடும்
தாமத்தழைந்து தறு நெல்வி நன்னாரி
நாயுருவியும் கருதும்
ஞான புல்லோடு பருதிருக்காயும்
நருவி வடி பச்சிலையும்
கானபுல்லோடு கடலாடி
நொச்சி கருவேப்பன் குழையும்
பூவோடு தெற்றிப் பூனை
வணங்கியும் பூனை மடி யானையும்

5370 கற்றாளை தெற்றிப் பூ கருவேலன்
பட்டை கரர் நெல்வரி பொரியும்
ஒப்பி புல்லோடு சமுகுச
முன்னங்கை மோதாரி செந்தாமரையும்
ஓமம் வெங்காயமும் முறுவலரியும்
கெவுரி பாஷணமுடன்
காரக்கள்ளி எருக்கலை காருடை
விடந்தை கதலி கருப்பஞ்சாறும்
காயாத மாவிலை இலஞ்சி
குழை நொச்சி கருவேப்பன் குழையும்
முன்நாயுறுஞ்சி முரணை
5380 இருவேலி முந்தவளைய மணி
மூமன் அரிசி அத்தி
இத்தி அறுகு சிறுகடுகும்
முள்ளு வள்ளி நீல வண்டாளைத்
தோலும் கல்கொடி வள்ளியுமாய்
இருந்த பொழுதிலே ஏது
புலம்புவாள் வானவர் கெந்தருவர்
இஞ்சி சாவலோடு கூனி

## பல தெய்வங்களை வேண்டுதல்

குரணி கூட்டி குடிக்கின்ற மாயனையும்
ஐயோ என்று முகமுள்ள
5390 வேலரெங்கள் வள்ளி மணவாளன்
கல்லாறு காலாளி ஆதி
மருந்தையும் அஞ்செழுத்தையும் பணிந்தாள்
திரு நீற்றை நுள்ளி தொட்டு
இட்டவளும் பாடி பறைய்றைந்தாள்
நீலவார் குழலாள் மனதில்
நீல வாணியை இருத்தி குறித்தாள்
சிரத்தில் சிவனை இருத்தி
கருத்தாய் திருமால் ஐயனைப் போற்றி
சிவ அஞ்செழுத்தைப் படித்தாள்
5400 சிந்தையில் வைத்துக் கொண்டாள்

கொண்டவள் எந்தன் குலத்தெய்வம்
வந்தவள் முன்னே குமரிகுடி கொள்ளுமாம்
தெண்டமாக எடுத்த அஞ்சி
தெய்வத்தையும் தான் பிடித்து அவள்
நம்மையும் மீண்டு திரும்பவே சொன்னபோது
பண்டுள்ள பால் பழம் நான் தருவேன்
என்று தெண்டம் பணிந்தள்

## விருத்தம்

தம்பனம் ஓதி கெட்டி தவக்குறத்தி தானிருக்க
தர்மர் தான் விழி முழித்து தரணியில் பார்த்த போது
5410 செம்பினால் நீரை கோரி சேவித்து வலக்கரத்தால்
தம்புரன் உண்டெனவே தானவள் தனித்து நின்றாள்
கலியுகமே தவமே உள்ளம் காண மலை தவக்குறத்தி
குளித்திடுவீர் குணமெனவே குறத்தியவள் கூறிடவே
தனித்த புகழ் வருணனையும் தருமரவர் தான் நினைக்க
வருத்தமது இல்லாத வருணன் வந்து பொழிந்திடுமாம்

## பேய்களிடமிருந்து பஞ்சவர் விடுதல்

உம்பர் மகிழ பொழிந்தார்
உற்ற புகழ் நல் வருணன்
வருணன் பொழிந்திடவே வலு வீமன் விஜயனுடன்
தருமன் பரி நகுலன் உற்ற
5420 சகாதேவன் தான் முழித்தார்
இவர்கள் அஞ்சி பேர்களையும்
எழுதரிய தவக்குறத்தி
பிடித்தடைத்த வாதைகளை
பெரும் தரணி மூடதிலே
வெட்டியங்கே தரணிப்பாளாம்
மெல்லி மல தவக்குறத்தி
வெலிக் குடை தான் கொடுத்து
வீடதிலே போவேன் என்றாள்
உள்ளடிக் களமதனிலே உற்ற
5430 புகழ் கணபதிக்கு

நிற நாழி கும்பக்குடம்
நெல் பொரியும் நல்லூட்டி
அடைக்காயும் வெள்ளிலையும்
அதிய பழம் பஞ்சாமிர்தம்
தீப தூபம் தான் கொடுத்து
சிவன் மகனார் கணபதிக்கு
பூமலர்கள் தான் சொரிந்து
போற்றியே கை குவித்தாள்
இட்டவெலிக் களமதிலே
5440 எட்டுதிக்கும் வெலி கொடுத்து
அருவி சொரிந்த படியே
உதிரம் கவிழவே அச்சரவும் கீறினாள்
இருக்க எறிந்த படி பஞ்சாச்சரம்
கீறியே குறமகளும் எடுத்து
குத்தும் கத்தியாலே வெட்டு
பூட்டு கைதனிலே குருதிகளும் கூட்டி
பிடித்துப் பிற கொக்கு
பகவொருத்தனும் கண்டித்தாள் தவக்குறத்தி
பின்னத்தேயுள்ள பிறகே
5450 படைத்து பிறவாதையும் நெறுத்தி
பேறு பெற்றமருந்தும் மந்திரம்
தந்திரம் பிறமடியில் சேர்த்தாள்
கறுப்போடே சென்று களத்தில்
புகுந்து கருதி குறமகளும்
சாவல் கண்டெடுத்தாள் தவக் குறத்தி
கை கால் முடி மெய்க்க கழுத்தும்
எலும்புடனே கட்டியதோர் நாவுகளும்
கை கடுப்பு தீர மருந்து தடவவே
கைமேலே தீர்ந்திடுமாம்
5460 குருகுல பாண்டவர்கள்
கும்பகுடம் சேவித்துக் குறக்குல
மங்கை முகத்தில் வியற்தெழுக
கையாரவே திரு நீற்றையும்
வாரியவள் கருத்தாய் உருவேறி

கண்ணேறு தீர விண்ணோர்
அருளாலே கண் குளிர பூசும் என்றாள்

## குறத்திக்குத் தருமர் அணிகள் கொடுத்தல்

கொற்றவர்க் கடியாளொத்த அடியாள்
தான் பார்த்து கூறுவாள் தர்மராசன்
கொண்டாடி கொண்டு உள்ளம்
5470 மிக மகிழ்ந்து குறத்திக்கி கொடுத்தார்
ஒற்ற வைரம் உடம்புக்குச்
சட்டையும் ஒருகாலில் வீரதண்டை
ஓரிதள் மாலையும் காதுக்கு
தோடும் வெண்பட்டு கண்டாங்கியும்
உள் கழுத்தில் சுட்டியும் பிற கழுத்தில்
தாவடம் நெறி முறையோடே உடுத்து
நெறி முறையாகவே தர்மம் கொடுத்து
முதலாய் மகிழ்ந்து தானும் உபசரித்தார்
ஒத்துக் கலந்து சந்தோஷத்தோடவே
5480 உள்ளம் மகிழ்ந்து கொண்டார்

